


# அறிஞர் அண்ணா

சு. சண்முகசுந்தரம்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் கானும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனருக்கு நிமித்தகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன் மலைச்சிற்பம், கி.பி. இரண்டாம் நூற்றாண்டு
பட உதவி : நேஷனல் மியூசியம், புதுதில்லி.

*Arignar Anna :* Monograph in Tamil by S. Shanmuga Sundaram, Sahitya Akademi, New Delhi 2001, Rs. 25/-


முதல் வெளியீடு 2001

**சாகித்திய அக்காதெமி**
தலைமை அலுவலகம் :
ரவீந்திர பவன், 35 பெரோஸ்ஷா சாலை,
புதுதில்லி - 110 001

**விற்பனை**
'ஸ்வாதி' மந்திர் சாலை, புதுதில்லி 110 001

ஜீவன் தாரா கட்டிடம், 4-வது மாடி,
டைமண்ட ஹார்பர் சாலை, கொல்கத்தா 700 053

172, மும்பய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், மும்பய் 400 014

மத்திய கல்லூரி வளாகம், பல்கலைக் கழக நூலகக் கட்டிடம்,
டாக்டர் அம்பேத்கர் சாலை, பெங்களூர் 560 001

சி.ஐ.டி. வளாகம், டி.டி.டி.ஐ. அஞ்சல்
தரமணி, சென்னை 600 113

விலை ரூ. 25

ISBN : 81 - 260 - 1123 - 8

**Typesetting by Shree Print House, Chennai - 20**

## பொருளடக்கம்

# முன்னுரை

இந்நூல் இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் எழுதப்பட்டுள்ளது. புதுதில்லியில் உள்ள சாகித்திய அக்காதெமி நிறுவனம் இதை எனக்குப் பணித்தது. அறிஞர் அண்ணா என்று அழைக்கப்படும் திரு. சி.என். அண்ணா துரை அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும் அவரது வாழ்வின் வெளிப் பாடுகளாகவும் வெற்றிப்படிகளின் தளங்களாகவும் அமைந்த படைப்புக்களையும் விரும்பிப் படிக்கத் தூண்டுகோலாக அமையுமாறு இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

அறிஞர் அண்ணாவின் படைப்பின் பரிமாணங்களை வெளிப் படுத்துவது என்பது சற்று கடினமான ஒன்றுதான். எனினும் இந்நூல் மூலம் என்னால் இயன்றவரை முயன்றுள்ளேன்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் அறிவுலக மேதை; அரசியல் விடிவெள்ளி; பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியாரின் தன்மானத் தளபதி; கலையுலகக் காவலர்; திரையுலகில் திருப்புமுனையை உண்டாக்கியவர். சாதிமதப் பேதங்களைச் சாடுவதில் இங்கர்சால்; இசையறிவில் ஏழிசை மன்னர்; தாய்மொழி காப்பதில் தன்னிகரில்லாத அரியேறு; நயம்பட நவில்வதில் நாவலர் மாமணி; எழுத்துலகிற்கு எழுஞாயிறு; உரையாடலில் ஓங்கு புகழ் பெற்ற ஒளிவிளக்கு; வாதிடுவதில் வல்லமை சேர் சாக்ரட்டீசு - இத்துணை எழில் நயம் வாய்ந்த பேரறிஞர் அண்ணா நல்லதொரு பல்கலைக்கழகம் என்று போற்றப்படுபவர். (புலவர் சா. மருதவாணன் : 1984).

திராவிட இயக்கத்தோடு இணைந்து இயக்க வளர்ச்சிக்கு ஏற்ற கருத்துப் பரப்புக் கருவிகளாகவே அண்ணாவின் படைப்புகள் தோன்றியுள்ளன. தமிழ்நாட்டு மக்களின் மன மாசுகளை அகற்றவேண்டும். மறுமலர்ச்சியினைத் தோற்றுவிக்க வேண்டும். மொழிப்பற்று, இனப்பற்று, நாட்டுப்பற்று, விடுதலை வேட்கை, தமிழ் மக்களிடையே வளர்ந்து செழிக்க வேண்டும். மனித நலநாட்டம் சிறக்க வேண்டும். இதற்காக எத்தகைய எதிர்ப்புகளையும் கண்டு அஞ்சாது கொள்கைக்காக எதிர்த்திடும் ஆற்றல் பெற வேண்டும். இத்தகைய எண்ணங்களோடுதான் அண்ணா தன் இலக்கியப் படைப்புப் பணியைச் செய்து வந்தார்.

இதனால்தான் "தமிழ்மொழி, தமிழ் இலக்கியம், தமிழ் இனம், தமிழ்நாடு, தமிழர் பண்பாடு ஆகியவற்றின் மறுமலர்ச்சிக்கு முதன்மைப் பணியாற்றிய தலைவர் அண்ணா என்று சோமசுந்தர பாரதியார் கூறுகிறார். (மறுமலர்ச்சித் தலைவர் அறிஞர் அண்ணா, ப.10)

அண்ணாதுரை அவர்கள் நாடகப் படைப்பாளர், புதின ஆசிரியர் சிறுகதைச் செல்வர், கட்டுரையாளர், சொற்பொழிவாளர், சமூகச் சிந்தனையாளர், பகுத்தறிவாளர் இயக்க ஆக்கர், சட்டமன்ற வல்லார், அரசியல் சான்றோர். எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு மக்கள் தலைவர், மாநில முதல்வர்.

இவரால் உரைநடை இலக்கியத் தமிழ், இதழியல் தமிழ், நாடகத் தமிழ், திரைத் தமிழ், மேடைத் தமிழ், அரசியல் தமிழ், மடல் இலக்கியத் தமிழ் என்னும் பல்வேறு தமிழ்த்துறைகளும் செம்மையும் சிறப்பும் பெற்றன என்பார் டாக்டர் மா. செல்வராசன் (தமிழாய்வு, II, ப.45).

“அண்ணா துரையெனும்
அண்ணல் தமிழ்நாட்டு
வண்ணான் அழுக்கெடுப்பில்
வாய்மொழியில் பண்ணாவான்
சிற்பன் எழுத்தோவியத்தில்
செல்வரசு நாவாயின்
அற்புதம் சூழ் மாலுமி
என்றாடு”

என்று பாராட்டுவார் தமிழ்த் தென்றல் திரு.வி.க.

இலக்கியத்துக்காக இலக்கியம் என்றில்லாமல் சமூகத்திற்காகவே இலக்கியம் என்ற கொள்கையுடன் வாழ்ந்து சிறந்த பேரறிஞர் அண்ணாவைப் பற்றி நூல் எழுதும் வாய்ப்பளித்த சாகித்திய அக்காதெமி நிறுவனத்தாருக்கும் தமிழ் ஆலோசனைக் குழு உறுப்பினர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

*பெங்களூர்*
*3-7-2001.* **சு. சண்முக சுந்தரம்**

# 1

# வாழ்க்கை வரலாறு

"குள்ள உருவம்; குறும்புப்பார்வை; விரிந்த நெற்றி; பரந்த மார்பு; கறைபடிந்த பற்கள்; கவலையில்லாத தோற்றம்; நறுக்கப்பட்ட மீசை; நகை தவழும் முகம்; சீவாத தலை; சிறிதளவு வெளிவந்த தொப்பை; செருப்பில்லாத கால்; பொருத்தமில்லாத உடைகள்; இடுப்பில் பொடி மட்டை; கையில் வெற்றிலை பாக்கு பொட்டலம்; இந்தத் தோற்றத்தோடு அதோ காட்சியளித்து நிற்கிறாரே அவர்தான் அண்ணா", என்று அண்ணாவை வருணனை செய்வார் நாவலர் நெடுஞ்செழியன் (அ.அ., ப. 109).

## அண்ணாவின் பிறப்பும் வளர்ப்பும்

காஞ்சிபுரம் பல துறைகளிலும் வரலாற்றுப் புகழ் படைத்த பெருநகர். நாளந்தாவுக்கு இணையான ஒரு பல்கலைக்கழகம் இங்கே இருந்தது. பல்லவர்களின் சிற்பக் கலையின் கதையை இன்றும் கல்லும் சொல்லும். பட்டினத்தடிகளால் பாடப்பட்டதும் பரிமேலழகரை ஈன்றதும் இவ்வூரே. தின்னாகர் எனும் பௌத்த அறிஞரும் திருநயினாப்பிள்ளை என்னும் இசைக் கலைஞரும் பிறந்ததும் இந்த ஊரில்தான். அண்ணா பிறந்ததும் இந்த ஊரில்தான். 'தொண்டை நாடு சான்றோருடைத்து' என்பதை அண்ணா மீண்டும் உறுதிபடுத்தினார்.

1909 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 15ஆம் நாளில் அண்ணா பிறந்தார். தந்தையார் பெயர் திருவாளர் நடராசன். தாயார் பெயர் திருமதி பங்காரு அம்மாள். "நான் சாமானியன்; மிகவும் சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவன்" என்பார் அண்ணா. இவரது சிற்றன்னை திருமதி. இராசாமணி அம்மையாரே அண்ணாவை வளர்த்து ஆளாக்கினார். பெற்றோர் வைத்த பெயரே அண்ணாதுரை. எனினும் பிற்காலத்தில் சௌமியன், பரதன், சமதர்மன், நக்கீரன், குறிப்போன், வீரன், ஒற்றன், வீனஸ் என்று பல்வேறு பெயர்களை வைத்துக் கொண்டார்.

## விளையாட்டுப் பருவம்

அண்ணா ஏழுவயதில் சென்னையில் நடைபெற்ற பார்க்ஃபேர் எனப்படும் பொருட்காட்சி பார்க்க அம்மாவோடு சென்றார். எழும்பூர் ரயில் நிலையத்தில் நின்றுகொண்டு இருக்கும் போது ஒருவன் பலூன் விற்றுக் கொண்டு போக

அண்ணாவுக்குப் பலூன் மேல் ஆசை வந்தது. அம்மாவிடம் கேட்க அவரோ பொருட்காட்சிக்குப் போன பிறகு வாங்கித் தருவதாகச் சொல்ல இவர் அடம் பிடித்தார். ஒரு திருடன் இதைக் கவனித்து விட்டு அண்ணாவிடம் பலூன் வாங்கித் தருவதாகக் கூறி அழைத்துப் போனான். அவன் அண்ணாவின் தங்கச் சங்கிலியைக் கழற்ற முயன்றபோது அம்மாவிடம் போகணும் என்று அழத்தொடங்கினார். பார்த்தவர்கள் ஓடிவர திருடன் தப்பித்து ஓடிவிட்டானாம். பிறகு அண்ணா அம்மாவிடம் போய்ச் சேர்ந்தாராம்.

பலூன் ஆசை பேராபத்துக்கு வழி வகுத்தது. நல்ல வேளை அழுததால் தப்பித்துக் கொண்டார்.

அண்ணாவுக்குப் பிடித்த விளையாட்டு ‘கேரம்’ தான். இது அழுக்குப்படாத நுட்பமான நாகரிக விளையாட்டு. குழிக்குள்ளே காய்களைத் தள்ளுவதற்குக் கரத்திலே உரமும் கண்ணிலே தெளிவும் மனத்திலே குறிபார்த்து அடிக்கும் கூர்மையும் வேண்டும். அண்ணா இதில் வல்லவராக இருந்தார் சின்ன வயதில். இனிக்கப் பேசி எதிர்தரப்பினரைக் குறி பார்த்து வீழ்த்தி அரசியல் விளையாட்டில் அண்ணா பெற்ற வெற்றிக்கு ‘கேரமே’ அடித்தளமாகியிருக்க வேண்டும்.

## குடும்ப வாழ்க்கை

அண்ணாவுக்கு 1930இல் திருமணம் நடந்தது. இராணி அம்மையார் அவரது வாழ்க்கைத் துணைவர் ஆனார். அவர்கள் அண்ணாவின் தூரத்து உறவினர். வீட்டைப் பற்றிய கவலையே இல்லாமல் அண்ணா நாட்டைச் சுற்றி நற்பணியாற்ற, அம்மையார் குடும்பத்தை முழுமையாகக் கவனித்துக் கொண்டார்.

அவர்களுக்குக் குழந்தைப் பேறு இல்லாத குறையை ஒரு குறையாகவே அண்ணா எடுத்துக் கொள்ளவில்லை. அவர்கள் பரிமளம், இளங்கோவன், கவுதமன், ‘பாபு’ என்கிற இராசேந்திர சோழன் ஆகிய நால்வரை வளர்ப்பு பிள்ளைகளாக்கிக் கொண்டனர். அண்ணா அவர்கள் மீது மிகவும் பாசத்தோடு இருந்தார். வெளி ஊர் போய்விட்டு எப்போது வந்தாலும் அவர்களைப் பார்க்கத் துடிப்பார். குழந்தைகள் என்றாலே அவருக்கு மிகவும் பிரியம்.

அடிக்கடி அண்ணா சிறைக்குச் செல்வார். அப்பொழுது எல்லாம் அவரது துணைவியார் எதையும் தாங்கும் இதயம் கொண்டவராக விளங்கி வந்தார். 1962இல் அண்ணா வேலூர் சிறையில் இருந்த போது அவரால் மனைவியோடு இரண்டே இரண்டு நிமிடங்கள் தான் பேச முடிந்தது. அவர் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டார். அண்ணாவின் எழுத்துப் பணிக்கும் அவர் பேருதவி செய்து வந்தார்.

## அண்ணாவின் கல்வி

இவர் ஐந்தாம் வகுப்புவரை பச்சையப்பர் கிளைப் பள்ளியில் சின்னக் காஞ்சிபுரத்தில் படித்தார். காஞ்சிபுரம் பச்சையப்பர் உயர்நிலைப் பள்ளியில் முதல்

படிவம் முதல் ஆறாம் படிவம் வரை கல்வி கற்றார். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் இன்டர் முதல் எம்.ஏ. முடிய பயின்றார்.

1932இல் கல்லூரியில் மாணவர் சங்கச் செயலாளராகவும் ஆங்கில மாணவர் கழகச் செயலாளராகவும் பொருளாதாரக் கழகச் செயலாளராகவும் பணியாற்றினார். இது அண்ணாவின் படிக்கும் பருவத்து நிர்வாகத் திறனை வெளிப்படுத்தும்.

பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது இவருக்கு ஞாபகச்சக்தி மிகவும் அதிகம். வீட்டில் படிக்காவிட்டாலும் தேர்வில் அதிக மதிப்பெண்கள் வாங்குவார் எனினும் பள்ளி இறுதி வகுப்பில் ஏற்பட்ட இரண்டு தோல்விகளுக்குப் பிறகே தேர்ச்சி பெற்றார்.

உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடிந்ததும் கல்லூரியில் படிக்க ஆசைப்பட்டார். ஆனால் பொருளாதார வசதி அதற்கு இடம் கொடுக்கவில்லை. எனவே நகராட்சி அலுவலகத்தில் வேலை பார்த்து சம்பாதித்து படிக்க விரும்பினார். வேலையில் இருக்கும் சலுகையால் கல்லூரியில் படிக்க வாய்ப்பு வந்தது. அதில் முதல் வகுப்பு மாணவராக வெற்றி பெற்றார். பி.ஏ. ஆனர்ஸ் படிக்க கல்லூரித் தலைவர் உதவினார்.

'கன்னிமாரா நூலகத்தையே கரைத்துக் குடித்தவர்' என்று சொல்லும்படி நிறைய படித்தார். சென்னைப் பல்கலைக்கழக நூலகத்துக்கும் அடிக்கடி செல்வார். 1934இல் அரசியல், பொருளாதாரம், சரித்திரம் மூன்றிலும் பி.ஏ. ஆனர்ஸ் பட்டம் பெற்றார். 1935இல் சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்தும் வறுமை காரணமாக மூன்று மாதங்களே படித்தார்.

## அண்ணாவும் பெரியாரும்

ஆரிய ஆதிக்கத்திற்கு ஊற்றாகவும் வளர்ச்சிக்கு வாயிலாகவும் அமைந்திருக்கும் கடவுள் மதம் சாதிக்கோட்பாடுகளையும் அவற்றிற்கு இடமாக அமைந்திருக்கும் மூட நம்பிக்கைகளையும் அம்மூட நம்பிக்கையை அரசியல், மதம், கடவுள் சாஸ்திரம், தருமம் என்ற பேரால் வளர்க்கும் பிராமணச் சமுதாயத்தையும் ஒழிப்பது என்னும் கொள்கைகளின் மீதே தன்மான இயக்கம் தோற்றுவிக்கப் பெற்றது என்பார் பெரியார். (சுயமரியாதை இயக்கத்தை தோற்றுவித்தது ஏன்? (திருச்சி, 1975) ப. 27)

1934ஆம் ஆண்டு தன்மான ஒத்தறத் திட்டத்தைத் தீட்டினார். "சமதரும இயக்கம் உலக மக்கள் எல்லோரையும் பொருத்த இயக்கம். சாதி, மதம், வருணம், தேசம் என்கிற கற்பனை நிலைகளை எல்லாம் தாண்டிய இயக்கம். பிராமணன், சத்திரியன், சூத்திரன், அரிசனன் என்கிற வருணங்களை ஒழித்து எல்லோரும் எப்போதும் மனிதரே என்று கூவும் இயக்கம். ஏழை என்றும் பணக்காரர் என்றும், முதலாளி என்றும் தொழிலாளி என்றும், எசமான் என்றும் கூலி என்றும், ஜமீன்தார் என்றும் குடியானவன் என்றும் உள்ள சகல வகுப்புகளையும் வேறுபாடுகளையும் நிர்மூலமாக்கித் தரை மட்டமாக்கும்

இயக்கம் என்பது அதன் கொள்கை. அதனை நீதிக்கட்சி வரவேற்கவே பெரியார் அதன் செயல் திட்டங்களில் இணைந்து பணியாற்றினார்.

1935இல் கோவை செங்குந்தர் இளைஞர் மாநாட்டில் அண்ணா பெரியாரை முதன் முதலாகச் சந்தித்தார். பின்னர் ஏற்பட்ட இந்தி எதிர்ப்புப் போராட்டமும் நீதிக்கட்சி நட்பும் பெரியாரின் தொடர்பை வலுப்படுத்தியது. 1939இல் குடியரசு இதழில் நக்கீரன் எனும் புனைப் பெயரில் 'பெரியாரும் பிறரும்' என்ற தலைப்பில் கட்டுரை எழுதினார்.

"நான் அறிந்த தலைவர் - தெரிந்த தலைவர் - பார்த்த தலைவர் இவர் ஒருவர்தான்" என்பது அண்ணாவின் உரை. அவருடன் பழகிய நாட்களை 'வாழ்வின் வசந்தம்' என்று அண்ணா குறிப்பிடுவார். "எதையும் தாங்கும் இதயம் வேண்டும் என்பதை நான் கற்றுணரும் வாய்ப்பும் தந்தார். பொதுத் தொண்டாற்றுவதில் ஓர் ஆர்வமும் அகமகிழ்வும் மனநிறைவும் பெற்றிடச் செய்தார். பெரியாருடைய பெரும்பணி ஒரு தனிமனித வரலாறு அல்ல, ஒரு சகாப்தம் - ஒரு காலக்கட்டம்", என்றும் குறிப்பிடுவார்.

1937இல் பெரியாருடன் சேர்ந்து இந்தி எதிர்ப்பு மாநாட்டில் கலந்து கொண்டார். 1949இல் பெரியார் இரண்டாவது திருமணம் செய்து கொள்ள முடிவெடுத்ததை அறிந்து திடுக்கிட்டுத் தடுக்கத் தூது அனுப்பினார். 9-7-1949இல் பெரியாரின் திருமணம் நடந்து முடிந்த போது, மறுநாள் தன் அதிருப்தியை அறிக்கையாக வெளியிட்டார். 27-7-1949இல் பெரியார் மீது அவதூறு வழக்குத் தொடர்ந்தார். பிறகு இருவரிடையே விரிசலும் விலகலும் ஏற்பட்டன.

இந்த விரிசலுக்கு முன் ஏற்கனவே கருத்து வேறுபாடு கொண்டிருந்தார். இந்தியா விடுதலை பெற்ற நாளை விடுதலை விழாவாகக் கொண்டாட வேண்டும் என்று காங்கிரசு தலைவர்கள் வேண்டுகோள் விடுத்தனர். பெரியாரோ "வெள்ளையன் நாட்டை விட்டுப் போய் விட்டால் போதுமா? நம்மைச் சுரண்டுபவரும் தாழ்வுபடுத்துபவரும் இருக்கும் போது நாம் எப்படி விடுதலை பெற்றவர் ஆவோம். அந்த நாளைத் துக்க நாளாகக் கொண்டாட வேண்டும்" என்று அறிக்கை விட்டார். அண்ணாவோ இதை ஏற்றுக் கொள்ளவில்லை. "ஆகஸ்டு பதினைந்து இந்தியா மீது இருந்த இழிவைத் துடைக்கும் நாள். அது திராவிடருக்குத் திருநாள்" என்றார். இதனால் இருவருக்கும் மனக்கசப்பு ஏற்பட்டது எனினும் செப்டம்பரில் வந்த பெரியாரின் பிறந்த நாள் விழாவில் அவரைப் பாராட்டி எழுதினார்.

1948 அக்டோபர் 23, 24 ஆகிய நாட்களில் நடந்த மாநாட்டில் அண்ணாவை மதித்து போற்றினார் பெரியார் : "எனக்கோ வயதாகி விட்டது. அதனால் வயது வந்த இந்த மூத்த மகனிடம் பொறுப்புகளை ஒப்படைப்பது தான் முறை. அண்ணா அவர்களிடம் உங்கள் அனைவரது முன்னிலையிலும் பெட்டிச் சாவியை ஒப்படைக்கிறேன்" என்றார். அண்ணாவும் "சாவிதான் என்னிடத்தில் இருக்குமே தவிர பெட்டி பெரியாரிடம் தான் இருக்கும்" என்றார்.

அண்ணா முதலமைச்சர் ஆனதும் 1967இல் பெரியாரைப் பார்த்து ஆசிர்வாதம் பெற்றார். "அவரை நான் பிரிகிற போது கூட அவரையேதான் தலைவராகக் கொண்டேன். இன்னும் அவரையே தலைவராகக் கொண்டுதான் பணியாற்றி வருகிறேன்" என்றார்.

1969இல் அண்ணா மருத்துவ சிகிச்சைக்காக அமெரிக்காவுக்குப் புறப்பட்ட போது பெரியார் ரூபாய் 25 ஆயிரம் தர வந்தார். இது அவரது பாசத்தைக் காட்டும்.

## அண்ணாவும் நீதிக்கட்சியும்

பள்ளிப்படிப்பை முடித்த அண்ணா கல்லூரிப்படிப்பை விரும்பினார். ஆனால் பொருளாதார நிலை அவருக்குத் துணை நிற்க மறுத்தது. எனவே காஞ்சிபுரம் நகராட்சி அலுவலகத்தில் எழுத்தராகப் பணியாற்றினார். இந்தக் காலக்கட்டத்தில்தான் அண்ணா நீதிக் கட்சியால் ஈர்க்கப்பட்டார். தியாகராயரின் சிந்தனை, பச்சையப்பன் கல்லூரிச் சூழல், சுயமரியாதை இளைஞர் மன்ற தொடர்பு, தொழிலாளர் இயக்கத் தொடர்பு, நீதிக்கட்சி முன்னோடிகளின் தொடர்பு ஆகியவை ஈர்ப்புக்குக் காரணங்கள். இவரது பிற்காலச் சிந்தனைகளுக்கு இது அடித்தளமாக அமைந்தது.

1934இல் அண்ணா கல்லூரிக் கல்வியை முடித்தார். 1936-ஆம் ஆண்டில் பெத்து நாயக்கன் பேட்டையில் நீதிக்கட்சியின் சார்பாக அண்ணா தேர்தலில் நின்று தோற்றார். எனினும் பொது வாழ்வில் ஈடுபாடு அதிகரித்தது. 'நவயுகம்' செய்தித்தாள் ஆசிரியராகப் பணியாற்றிய அண்ணா, சென்னைத் தன்மான இயக்க இளைஞர் மன்ற ஆண்டு விழாவில் பங்கேற்றார். நீதிக்கட்சியின் செயற்குழு உறுப்பினராகவும் நீதிக்கட்சிக் கருத்துப் பரப்பல் குழு முன்னவராகவும் விளங்கியுள்ளார்.

1937-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி திருச்சி மாவட்டம் முசிரி வட்டத்தில் தன்மான இயக்க மாநாடு நடைபெற்றது. அதில் அவர் தலைமை வகித்துப் பேருரையாற்றினார். சேலம் மூன்றாவது மாநாட்டிலும் அண்ணா மாநாட்டுத் திறப்பாளராக விளங்கியுள்ளார். 1939இல் நீதிக்கட்சியின் பொதுச் செயலாளர் ஆனார்.

தொழிலாளர் சங்கங்களில் அங்கம் வகித்த அண்ணா ஜெபல்பூர் மாநாட்டில் கலந்து கொண்டு ஆற்றிய உரை திரு. ஜம்ருதாஸ் மேத்தாவைக் கவர்ந்தது; பாசுதேவர் அவர்களுடன் கொண்ட தொடர்பு வளர்ந்தது. நீதிக் கட்சியின் தூண்களான டி.வி. நாதனும், பி. பாலசுப்பிரமணியனும் அண்ணாவுடன் நெருங்கிப் பழகினர். 24-8-1940இல் திருவாரூர் நீதிக்கட்சி மாநில மாநாட்டில் திராவிடநாடு பிரிவினைத் தீர்மானத்தை வழி மொழிந்தார். 1944இல் நீதிக்கட்சியைத் 'திராவிட கழகமாக' மாற்றத் தீர்மானம் கொண்டு வந்தார். இது அண்ணாதுரையின் தீர்மானம்.

## இந்தித் திணிப்பு எதிர்ப்பு

இந்தியத் தேசிய காங்கிரசு 'இந்தி' இந்தியாவின் பொது மொழி என்று அறிவித்தது. 1926இல் பெரியார் இதனை எதிர்த்துப் போராடினார். 1937ஆம் ஆண்டு நீதிக்கட்சியின் ஆட்சிக்குப் பிறகு தமிழகத்தில் இராசாசி இந்தியைப் பள்ளிக் கூடங்களில் கட்டாயப் பாடமாக்கினார். இது பெரும் எதிர்ப்பைக் கிளப்பியது. இதில் அண்ணாவும் ஈடுபட்டார். இப்போராட்டமே அண்ணாவின் மொழி உணர்வு சிந்தனைக்கும் கழகத்தின் மொழிகாக்கும் போராட்டத்திற்கும் கருவாக அமைந்தது. தளபதியாக இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டதால் 26-9-38 அன்று 4 மாத வெறுங்காவல் தண்டனையைப் பெற்றார். 1946-மேயில் கட்டாய இந்தி எதிர்ப்புப் படை முதல் தளபதியாக நியமிக்கப்பட்டார்.

1948 சூலை 17இல் இந்தி எதிர்ப்பு அறப்போரில் ஈடுபட்டுச் சிறை தண்டனை அடைந்தார். 1952-ஆகஸ்ட் இந்தி எதிர்ப்பு அறப்போரை ஒட்டி புகை வண்டி நிலையங்கள் உள்ளிட்ட மைய அரசு அலுவலகங்களின் பெயர் பலகைகளில் இருந்த இந்தி எழுத்துகளை அழித்தார்.

"1965 சனவரி 26-ஆம் நாள் முதல் இந்தியாவின் ஒரே ஆட்சிமொழியாக இந்தி விளங்கும். ஆங்கிலம் துணை ஆட்சி மொழியாக இருக்கும்" என்று உறுதி செய்தனர். தி.மு.க. குடியரசு நாளைத் துக்க நாளாகக் கொண்டாட வேண்டும் என்று முடிவு செய்தது. போராட்டம் பெரிதாயிற்று. துப்பாக்கிச் சூட்டில் மாணவர்கள் இறந்தனர். அண்ணா அமைதியை வேண்டினார். அண்ணாவோடு பிற தலைவர்களும் கைது செய்யப்பட்டனர்.

## திராவிட முன்னேற்றக் கழகம்

பெரியார் தமக்குப் பின்னால் இயக்கத்தை ஒழுங்குற நடத்திச் செல்வதற்குத் தமக்கு உதவியாக இருந்த மணியம்மையாரே பொருத்தமானவர் எனக் கருதி, அவரை மணந்து கொண்டு உரிமை வழங்க முனைந்தார். அண்ணாவும் கழக முன்னவர்களும் எதிர்த்து அறிக்கை விட்டனர். எனினும் 9-7-49 அன்று பெரியார் மணியம்மையை மணந்து கொண்டார். இதற்குக் கண்டனங்கள் எழுந்தன. 17-9-49 அன்று கழக மையச்செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது. கே.கே. நீலமேகம் தலைமை தாங்கினார். அண்ணா அறிவுரைக்கேற்ப அமைப்புக்குழு உருவாக்கப்பட்டது. அதன் மூலம் 'திராவிட முன்னேற்றக் கழகம்' தோற்றுவிக்கப்பட்டு அண்ணா கழகப் பொதுச் செயலாளராக்கப்பட்டார். அன்று மாலை இராயபுரம் ராபின்சன் பூங்காவில் துவக்க விழா தொடங்கப்பட்டது.

சமுதாயத் துறையிலே சீர்திருத்தம், பொருளாதாரத் துறையிலே சீர்திருத்தம், சமுதாயக் குறிக்கோள், அரசியல் வடநாட்டு ஏகாதிபத்தியத்தினின்று விடுதலை ஆகிய கொள்கைகள் கழகத்திற்கு உரியதாக இருந்தன அண்ணா இதனை 'ஒட்டுமாஞ்செடி' என்றும் 'தி.மு.கழகம் திராவிடர் கழகத்துக்கு முரணானதுமல்ல' என்றும் குறிப்பிட்டார்.

13-7-1953இல் நடந்த மும்முனைப் போராட்டத்தில் அண்ணா கலந்து கொண்டு கைது செய்யப்பட்டார். 1-9-53இல் மூன்று மாத வெறுங்காவல் தண்டனை பெற்று சிறைக்குச் சென்றார். 5-4-55இல் நாவலரைப் பொதுச் செயலாளர் ஆக்கினார். 31-5-1958இல் நேருவுக்குக் கறுப்புக் கொடி காட்டுவது பற்றி நடைபெற இருந்த கூட்டத்தில் தடையை மீறி பேசுவதற்குச் சென்று கைதானார். இரண்டு நாட்களுக்குப் பின் விடுதலை செய்யப்பட்டார். 19-7-62இல் வேலூரில் விலைவாசி உயர்வு போராட்டத்தில் கலந்ததால் கைதாகி தன் வழக்குக்குத் தானே வாதாடினார். அப்பொழுது அவர் 10 வாரக் கடுங்காவல் . தண்டனை பெற்று 24-10-62இல் விடுதலை செய்யப்பட்டார்.

1960 அக்டோபர் முதல் அண்ணா தி.மு.க. பொதுச்செயலாளராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## முதலமைச்சர் அண்ணா

1967ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 6ஆம் தேதி முதல் அமைச்சர் ஆனார். தி.மு.க. 138 சட்டமன்றத் தொகுதிகளில் வென்றிருந்தது. தமிழில் பதவி ஏற்பு உறுதிமொழியை இவர் எடுத்துக் கொண்டதும் குறிப்பிடத்தக்கது.

ஏப்ரல் 14ஆம் தேதி தமிழ்ப்புத்தாண்டு நாள். அன்று 'தமிழ் நாடு அரசு தலைமைச் செயலகம்' என்னும் பெயர் பலகையைக் கோட்டை முகப்பில் திறந்து வைத்தார். இதனை மத்திய அரசும் தடையின்றி ஏற்றுக் கொண்டது.

ஸ்ரீ, ஸ்ரீமதி, குமாரி என்னும் வடமொழிச் சொற்களுக்கு மாற்றாக திரு, திருமதி, செல்வி என்னும் தமிழ்ச்சொற்களை அரசு மடல்களில் ஆவணங்களில் பயன்படுத்த வேண்டும் என்று ஆணை பிறப்பித்தார். சூன் 9இல் தலைமைச் செயலகத்தில் திருவள்ளுவர் படத்தையும் திறந்து வைத்தார்.

சூலை 17இல் பெரியாரின் சுயமரியாதைத் திருமண முறையைச் செல்லத் தக்கதாக்கிட தமிழ்நாடு சட்டமன்றத்தில் சட்ட வரைவு தாக்கல் செய்தார். 'சீர்திருத்தத் திருமணங்களும் திருமணங்களே. அவை சட்டப்படி செல்லும்' என்று புதிய சட்டத்தை நிறைவேற்றினார்.

1968இல் உலகத்தமிழ் மாநாட்டைக் கொண்டாடினார். தமிழ் வளர்த்த சான்றோர் சிலைகளைக் கடற்கரைச் சாலையில் நிறுவினார். திருக்குறள் ஆராய்ச்சிக்காக பல்கலைக் கழகங்களில் திருக்குறள் துறையைத் தொடங்கினார்.

அண்ணா ஆட்சி பெறுப்பேற்ற பின்பும் மக்களோடு மக்களாக வாழ்ந்தார். அவர்களின் தலைமை பொறுப்பு ஏற்று அவர்களுக்குச் சேவை புரிந்தார். மக்கள் - தலைவர் தொடர்பை ஆடுகள் - மேய்ப்பவன் உறவு போன்றது எனக் கூறித் தனி நபர் வழிபாட்டை வளர்த்துக் கொள்ளும் இன்றைய உலகில், அண்ணாவின் ஜனநாயக மரபுகள் நம்மைப் புல்லரிக்கச் செய்கின்றன. தனிநபர் வழிபாட்டுக்குரிய எல்லா அம்சங்களும் அண்ணாவிடம் இருந்தன. மக்களை நேசிக்கும் அவர் அம்மக்கள் தன்னைப் பாராட்டுவதை விரும்புவதில்லை. 'என்

கடன் பணி செய்து கிடப்பதே' எனப் பொதுத் தொண்டில்-மக்கள் சேவையில் ஈடுபட்டார்.

அவர் பிறந்த நாள் விழாவைக் குறிப்பிட்டு ". . . . நேற்றைய விழாவை என்னைச் சமூகம் மேலும் பணியாற்ற இடும் கட்டளை எனக் கொள்கிறேன்" என்று அடக்கத்துடனும் சேவை உணர்வுடனும் கூறினார்.

அமைச்சராக சிறிய கார்களில் பயணம் செய்தார்; குறைந்த ஊதியம் பெற்றார். ஆடம்பர வரவேற்புகளை வேண்டாமென உதறினார். அரசாங்க நிர்வாகத்திலும் எளிமை காண முற்பட்டார். அலங்காரத்திற்கும் ஆடம்பரத்திற்குமான பதவிகளைப் பயனற்றதெனக் கருதி நீக்கினார்.

"வீட்டிலே உள்ள காலி இடத்தில் கீரையும் பயிரிடலாம். குரோட்டன்சும் வைக்கலாம். குரோட்டன்சு வைப்பது அழகாகத் தான் இருக்கும்; ஆனால் கீரை பயன்படும் அளவுக்குக் குரோட்டன்சு பயன்படாது", என்பார்.

நிதியமைச்சர் என்ற முறையில் ஆடம்பரச் செலவுகளைக் குறைத்தார். செலவு செய்யும் பணம் எவ்வளவு மக்களுக்குப் பயன்படுகிறது என்பதை ஆராய்ந்து செலவழித்தார். தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களின் நலனுக்குச் செலவிட்டார். அந்த அடிப்படையில் தான் படியரிசித் திட்டம் போன்ற பல திட்டங்களுக்கு ஒப்புதல் வழங்கினார். மது விலக்குக் கொள்கையை நிலை நிறுத்தினார்; இலவசக்கல்வி வழங்கினார்; சிறு நில உரிமையாளர்களுக்கு வரிவிலக்கு அளித்தார். (அ.ஒ.ச., ப. 129)

அண்ணா தமது இரண்டாண்டு ஆட்சியில் சீரிய சாதனைகளைச் செய்துள்ளார். அதில் திராவிட இயக்கத்தின் உயிர்த்துடிப்பு அடங்கியுள்ளது.

'தமிழ் நாடு' என்று பெயர் சூட்டியமை மிகுந்த 'உள்ளீடு' நிறைந்த சாதனையாகும். சங்கரலிங்கனார் போன்ற தியாகிகள் தமிழ்நாடு என்ற பெயரை வைப்பதற்காக தமது இன்னுயிரை அளித்தனர். தமிழ்நாடு பெயர் சூட்டு விழாவில் அண்ணா உடல் நலக்குறைவிலும் உணர்ச்சியுரை ஆற்றினார். "இந்நிகழ்ச்சி வரலாற்று சிறப்புமிக்க நிகழ்ச்சியாக இருப்பது கண்டு பெருமிதம் அடைகிறேன். தமிழ்நாடு பெயர் மாற்ற மகிழ்ச்சி விழா நடைபெறும் இன்றைய தினம் நான் பேசுவதாலேயே இந்த உடலுக்கு ஊறு நேரிடும் என்றால் இந்த உடல் இருந்தே பயனில்லை என்று கூறி எனது வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளும்படி மருத்துவர்களிடமும் நண்பர்களிடமும் கேட்டுக் கொண்டேன். இத்தகைய வாய்ப்பு, வாழ்க்கையில் ஒரு முறைதான் வரும். பலமுறை வருவதில்லை. பெறவேண்டும் என்று நினைத்ததைப் பெற்றிருக்கிறோம். அடைய வேண்டியதை நாம் அடைந்திருக்கிறோம்", என்றார்.

அண்ணாவின் இச்சாதனையை ஆங்கிலக் கவிதை எழுதிய ஒருவர், "The son who named his mother" என்று எழுதினார். 1967 ஜூலை திங்கள் 18ஆம் நாள் இத்தீர்மானம் சட்டசபையில் மசோதாவாக தாக்கல் செய்யப்பட்டது.

தமிழ் ஆங்கிலம் ஆகிய இருமொழிகளே போதுமானது. இந்தித் தேவையில்லை என்ற தீர்மானம் சட்டசபையில் நிறைவேற்றப்பட்டது.

கலப்புத் திருமணம் செய்து கொள்கிறவர்களுக்குத் தங்கப்பதக்கம் வழங்குவது என்று தீர்மானித்து அதற்கு ஓர் அறிவிப்பினை அண்ணா செய்தார்.

தந்தை பெரியார் அவர்களின் கலாச்சாரப் புரட்சியின் விளைவாக ஏற்பட்ட சுயமரியாதைத் திருமணங்கள் அண்ணா அவர்களால் தான் சட்ட சம்மதத்தைப் பெற்றன.

## இறுதி நாட்கள்

அயராது உழைத்து வந்த அண்ணாவுக்கு 1968-செப்டம்பரில் திடீர் என்று உடல் நலம் குன்றியது. அவரது உணவுக்குழாயில், சிறு கட்டியொன்று கிளம்பி உணவே உட்கொள்ள முடியாதபடி ஆகி விட்டது. புற்று நோய்க்கான அறிகுறியோ என்று அஞ்சிய நிலையில் அண்ணா சிகிச்சைக்காக அமெரிக்காவுக்குச் செல்வதே நல்லது என்று முடிவெடுக்கப்பட்டது.

அவருடன் இராணி அம்மையார், மகன் பரிமளம், இரா. செழியன், டாக்டர் சி.எல். சதாசிவம் ஆகியோரும் சென்றனர். நியூயார்க் நகரில் உள்ள மருத்துவமனையில் டாக்டர் தியோடர் மில்லர் என்ற புகழ் பெற்ற அறுவை மருத்துவர் சிகிச்சை நடத்தினார். ஒரு மாத ஓய்வுக்குப் பிறகு அண்ணா நவம்பரில் சென்னை திரும்பினார். விமான நிலையத்தில் ஏராளமாக மக்கள் கூடி அவரை வரவேற்றனர். டாக்டர் எச்சரிக்கையையும் மீறி ஓய்வெடுக்காமல் அண்ணா அரசாங்க அலுவல்களில் ஈடுபட்டார்.

எனவே அண்ணாவின் உடல்நிலை நாளுக்கு நாள் மோசமாகியது. 1969ஆம் ஆண்டு சனவரி 25 ஆம் தேதியன்று அவருக்கு அடையாற்றுப் புற்றுநோய் மருத்துவமனையில் இரண்டாவது அறுவை சிகிச்சை அளிக்கப்பட்டது. டாக்டர் மில்லர் இங்கு வந்து கவனித்துக் கொண்டார்.

சனவரி 29ஆம் தேதி புதன் கிழமையிலிருந்து அண்ணாவின் உடல் நிலை கவலைக்கிடமாகியது. அன்று இரவு அவருக்கு மாரடைப்பு ஏற்பட்டது. வியாழக்கிழமையன்று நுரையீரல் கோளாறு ஏற்பட்டது. வெள்ளிக்கிழமையன்று *காலை 10 மணிக்கு* இருதயத் துடிப்பு நின்று நினைவு இழந்தார். பிப்ரவரி மாதம் 2ஆம் நாள் நள்ளிரவு 12-20 மணிக்கு அண்ணாவின் உயிர் அவரது உடலை விட்டு நீங்கியது. லட்சோபலட்சம் மக்கள் கூடி அண்ணாவுக்கு இறுதி அஞ்சலி செலுத்தினர். வரலாறு காணாத கடைசி ஊர்வலம். உடல் அடக்கமான இடத்தில் "எதையும் தாங்கும் இதயம் இங்கே உறங்குகிறது" என்று பொறித்தனர்.

## அண்ணாவின் அன்பு

அண்ணா தன்னைச் சார்ந்தவர்கள் மீது அன்பு கொண்டவர். அவர்களது வாழ்க்கைக்கு உதவும் வகையில் பலமுறை நிதி உதவி செய்துள்ளார்.

1948இல் அழகிரியின் குடும்பத்திற்குக் கலைவாணரைக் கொண்டு நாடகம் நடத்தி ரூ.6000/- நிதி திரட்டி வழங்கினார்.

இதற்கு முன்னார் 1940இல் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுக்கு ரூ.25,000/- நிதி திரட்டி நாவலர் சோமசுந்தர பாரதி தலைமையில் வழங்கினார்.

1957இல் தமிழாசிரியர் இளைய பெருமாள் பண உதவி கேட்டு அண்ணாவிடம் வந்தார். எஸ்.எஸ்.ஆர். மூலம் உதவ விரும்பினார். ஆனால் முடியவில்லை. அண்ணா அவரிடம் ஒரு புத்தகத்தை மட்டும் கொடுத்தார். அண்ணியார் விசாரித்தபோது “ஒன்றுமில்லை. தமிழ்ப் புலவர். ஒரு புத்தகம் கொடுத்தேன்” என்றார். புலவர் வெளியே வந்து புத்தகத்தைத் திறந்து பார்த்த போது அதற்குள் ஒரு நூறு ரூபாய் நோட்டு இருந்தது. (அண்ணா எனும் *அண்ணல், ப.40), அண்ணா பிறர் அறியாமலும் உதவுவார் என்பதற்கு* இது சான்று.

1957-58இல் சிவாஜியின் ‘கட்டபொம்மன்’ நாடகத்திற்கு அண்ணா தலைமை தாங்கினார். அப்போது சிவாஜி கணேசன் அவரது கட்சியில் இல்லை எனினும் அண்ணா ‘எங்கிருந்தாலும் வாழ்க’ என்று வாழ்த்தினார்.

---

# 2

# கவிதைகள்

'கவிதை அல்ல கவிதையாக ஆக்கிக் கொள்ளலாம்' என்ற குறிப்போடு கவிதை எழுதத் தொடங்கினார். 1937இல் 'காங்கிரசு ஊழல்' என்ற தலைப்பில் இசைப்பாடல் எழுதினார். 'மதிட்சயத்திலே' என்ற மெட்டுடன் பல்லவி, அனுபல்லவி, வசனம் எனும் பகுப்புடன் அமைந்துள்ளது.

"காங்கிரசு சாயம் வெளுக்கிறது
அருமைத் தோழர்களே"

என்று இப்பாடல் தொடங்கும். கதைப்பாடல், வாழ்த்துப் பாடல், முகப்பு விளக்கப் பாடல் ஆகியவற்றுடன் இயக்கக் கோட்பாட்டுப் பாடல்களையும், இயக்க உணர்ச்சிப் பாடல்களையும், தேர்தல் நோக்குப் பாடல்களையும் பாடியுள்ளார்.

கிளாடி ஜோசப், ரோஜட்டி, லிஸ்லி, ஓமர், புஸ்கின், வால்ட் விட்மின், ஷெல்லி, வால்டேர், ஜான் மேல்பெல்டு, யூரி மிபீஸ், ஆர்தர் - கியடர்மன், லூயி உண்டர்மேயர், ஜேம்ஸ் ரசல், லோவேல், போர்ட்டில்லன், ஜான் நைஷர்ட், வில்லியன் கல்லன் பிரமான்ட், லாபாயெட்பி போன்றோர் கவிதைகளை மொழி பெயர்த்து தனி நிலையிலும் தலையங்கம், கட்டுரை, கடிதம் ஆகியவற்றிலும் பயன்படுத்தினார்.

'அண்ணாவின் கவிதைகள்' எனும் தொகுப்பு 1981இல் பூம்புகார் பிரசுரத்தால் வெளியானது. இவரது கவிதை ஆக்கம் என்பது பழைய மரபு முறையில் அமையாமல் புதிய முறையில் அமைய அண்ணாவால் முயற்சி செய்யப் பெற்றிருப்பது ஒரு புதியதான அம்சமாகவே படுகிறது என்பார் துரை. சீனிச்சாமி.

அதோடு பழமையின் நிறை வாழ்வைக் கற்பனை செய்து கொள்ளும் அற்புத மனநிலை கொண்ட ஒரு பழமரபு வழிப் புலவன் போலவே கூறும் அண்ணாவின் கவிதைகளில் பழமரபு வழிக் கவிதையின் ஆக்க மரபு மீறப் பெற்றிருப்பது வரலாற்று முக்கியத்துவம் கொண்டது என்கிறார் இவர்.

சுயராஜ்யம், சீறிடும் சிட்டு, சின்னான் சிந்து, தேம்புகிறேன் போன்ற கவிதைகள் குறிப்பிடத்தக்கன. விடுதலை உணர்வு, சாதி வேறுபாடு எதிர்ப்பு, வைதீக எதிர்ப்பு, பொருளாதார வேறுபாடு எதிர்ப்பு போன்றவை இவரது கவிதைகளின் உள்ளடக்கமாகும். கவிதைகளில் பேச்சுமுறைத் தோரணை, ஆடம்பர மற்ற மொழிநடை இருப்பது சிறப்புக்குரியவை.

இசைப்பாடல்களாக, வாழ்த்துப் பாக்களாக, இதழ் வாழ்த்து, பொங்கல் வாழ்த்து என, கதைப் பாடல்களென, மொழிபெயர்ப்புகள் எனத் தமிழ் இதழ்களில் இவரது கவிதைகள் 1937 முதல் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருந்தன

"பாடுகிறான் அண்ணன்
ஓர் கவிதை என்று
பரிவாலே எண்ணிடாதீர்
உடன் பிறந்தோரே
சீர்அறியேன் அணிஅறியேன்
சிந்தை உந்தும்
செய்திதனைத் தெரிவித்தேன்
ஆசையாலே" (1969)

என்பார் அண்ணா. இவர் பெரும்புலவர் அல்ல; யாப்பறிந்த பண்டிதரும் அல்ல. எளிய கவிஞர்; உணர்ச்சி மிக்கப் பாவலர்க் கவிதைக்கு உயிர் உணர்ச்சி என்பதுதான் இவரது கவிதைக் கோட்பாடு.

படித்த நடுத்தர மக்களின் கூர்த்த உள்முக அனுபவ எல்லைகளின் நடப்பியல் பரிமான விரிவுக்கேற்ப, ந. பிச்சமூர்த்தி போன்றோரிடம் புதுக்கவிதை ஒருவகையான திட்பத்துடன் யாப்பை மீறி உருவான அதே காலப் பின்னணியில் பழைய வருணாசிரமக் கலாச்சாரத்தின் வடிவமாகச் செயல்பட்டு வந்த யாப்பு மரபு, அக்கலாச்சாரத்திற்கான புதிய குடியரசு பண்பாட்டுத் தளத்தில் அண்ணா என்ற தனி நபரால் மீறப்பெற்றது. ந.பி. மரபு, அண்ணா மரபு, பு.பி. மரபு என்று யாப்பு மீறல் கவிதைப் போக்கை மூன்று வகைகளாகக் காணலாம்.

அண்ணாவின் கவிதைகளை வாழ்த்து, இசை, கதை, அட்டைப்படம், பல்சுவை என ஐந்து வகைகளாகப் பகுக்கலாம் என்பார் முனைவர் ந. வேலுசாமி.

புறநானூற்று அகவற்பா சாயலில், "இன்று நீ பறந்திடு தமிழரின் தூதனாய் நின்றிடு ஓர் புறம், கூறிடு இம்மொழி" என்று 'பறந்தது ஓர் புறா' என்ற தலைப்பில் கவிதை எழுதியுள்ளார்.

"இனியன கேட்பின்
என்னருந் தம்பி!
இனிது இனிது
இலட்சியம் இனிது
அதனினும் இனிது
அதன் பகைவர்கள்" (அ. கவிதைகள், ப. 199)

என்ற இவரது கவிதை அவ்வையாரின் 'இனியது எது?" என்ற பாடலைப் போன்றது.

"அடுப்பிலிட்ட கட்டைபோல் - அவர்
அனைவரும் தேய்வதா?
அணைத்திட வேண்டாமா?
அண்டை அயலார்களே" (அ. க., ப. 32)

என்ற கவிதை பாரதியின் 'கரும்புத் தோட்டத்திலே' என்ற பாடலைப் போன்றது. அதன் தலைப்பு கூட 'தேயிலைத் தோட்டத்திலே' தான்.

"காலதேவன் கீறிவிட்ட
கோடுகள் - முகத்தில்
முதுகினிலே பெரியசுமை
உலகம் ஏற்றி வைத்தது
மகிழ்ச்சி மாய்ந்து விட்டது
நம்பிக்கை தீய்ந்து விட்டது
அவனுக்கு அக்கதி வரச்
செய்தவர் யார்?
திகைத்து கிடக்கிறான்
சிந்தனை யற்று
எருதுக்கு இவனும்
உடன் பிறப்பாளனோ!" (அ. க., ப. 145)

என்று 'நீங்கள் படைத்த ஏழை' என்ற கவிதையை எழுதியுள்ளார். இது புதுக்கவிதை நடையில் அமைந்துள்ளது.

எனவே அண்ணாவின் கதைகளில் சங்கச் செய்யுள் இலக்கியச் சாயலும் இடைக் கால இலக்கியத்தாக்கமும் பிற்கால இலக்கியத்தாக்கமும் பின்னிப் பிணைந்துள்ளன. சமுதாயச் சீர்திருத்தமும் சமதர்மமும் இவரது கவிதைகளின் அடிநாதம். பாரதியின் பாட்டில் உள்ள அவல உணர்ச்சியும், வசன கவிதையும், அதன் வளர்ச்சியான புதுக்கவிதை உத்தியும் இவருக்குக் கைவந்தது என்பார் முனைவர். ந. வேலுசாமி (அறிஞர் அண்ணாவின் சிந்தனைகள் - ஓர் ஆராய்ச்சி, ப. 140).

"வெள்ளைக்கார கூட்டமெல்லாம்
வெளியேறி போகணும்
சள்ளை பிடிச்ச வாழ்வு போயி
ஒரு சவுரியம் பிறக்கணும்
கொள்ளையிடும் கும்பலது
கூண்டோடு தொலையணும்
பள்ளுபறை என்றபேச்சைப்
பழசாக்கிப் போடணும்"

என்ற 'சின்னான் சிந்து' பலரால் பாராட்டப்பட்டது. இதில் பட்டுக்கோட்டையாரின் சொல்லமைப்பைக் காணலாம்.

"வெள்ளி முளைக்குது
வெண்தாடி அசையுது
வீணரின் விலாவெல்லாம்
வேதனை மீறுது

வெள்ளையரும் அதிர
வெடிவேட்டுக் கிளம்புது
வேதியக் கூட்டமெல்லாம்
வியர்த்தின்று விழிக்குது”

என்று ‘விடுதலை’ இதழில் எழுதியது பெரியாரின் போர்க் குரலாகும். இதில் திராவிட இயக்க உணர்வு மிகச் சிறப்பாக வெளிப்படுகிறது.

அண்ணா மரபில் நிகழ்ந்த புதிய கவிதைக்கான ஆக்க முயற்சியும் குறிப்பிடத்தக்கது. பிற்கால வானம்பாடிக் கவிதை மரபின் போக்கை அண்ணா மரபுத் தொடர்ச்சியாகக் காணலாம் என்பார் முனைவர் துரை. சீனிச்சாமி.

அண்ணாவின் கவிதைகளில் தமிழ்ப்பற்று, பகுத்தறிவு, சீர்திருத்தம் போன்றவை கருத்துக்களாக இருந்தன.

கவிஞர் ஓர் காலக்கண்ணாடி
பழமைச் சாயலின் பிரதிபலிப்பல்ல
உள்ளத்தின் ஆவேசம் உணர்ச்சியில் ‘புயல்’
எழுப்பிடும் அவனது இதயகீதம்
எதுகை மோனை எழில்தரு உவமை
வசீகர வர்ணனை - பழமைக்கு மெருகு
இத்தனையும் தேடி எங்கெங்கோ ஓடி
வார்த்தை முடையும் வலைஞன் அல்ல”

என்று அண்ணா வால்ட்விட்மனின் கவிதையை மொழி பெயர்த்துள்ளார். இது கவிஞனுக்கான இலக்கணம். இதற்கான இலக்கியமே அண்ணா.

“கவிதையல்ல - புலவர் துணை கொண்டு கவிதையாக்கிக் கொள்க” என்பது (17-7-1954) அவையடக்கம் மட்டுமல்ல; அண்ணா என்றாலே அடக்கம் என்று தானே பொருள்.

# 3

# சிறுகதைகள்

அண்ணா பொழுதை ஓட்டுவதற்குச் சிறுகதைகளை எழுதவில்லை. புத்துலகம் காண்பதற்கு - புதிய சமுதாயம் உருவாவதற்கு எழுதினார். சமுதாய மாற்றம், சமூக முன்னேற்றம், ஏற்றத் தாழ்வை அகற்றும் நோக்கம் இவைகளின் அடிப்படையிலேயே அவருடைய கதைகள் யாவும் அமைந்திருந்தன.

"தமிழ் இலக்கிய வளர்ச்சியில் திராவிட இயக்கத்தின் பங்கு மகத்தானது. ஒரு காலகட்டத்தில் தமிழின் தொன்மையை, சிறப்பை, தனித் தன்மையைச் சிதைக்க முயன்ற செருக்கை உடைத்தெறிந்த வலிமை திராவிட இயக்கத்துக்கே உரியது. வடமொழியும் ஆங்கிலமும் விரவிக் கிடந்த தமிழை, நல்ல தமிழ் ஆக்கிய பெருமை திராவிட இயக்கத்தின் தனி உரிமை. அந்தப் பெருமைக்குச் சொந்தக்காரர்கள் பேரறிஞர் அண்ணாவும் கலைஞர் கருணாநிதி அவர்களும் அவர்களைப் பின்பற்றி எழுதிய எழுத்தாளர்களும் தாம்", என்பார் புகழேந்தி. (முன்னுரை, திராவிட இயக்க எழுத்தாளர்கள்).

தமிழில் முதலில் பொழுது போக்குக்காகவே சிறுகதைகளை எழுதினர். பிறகு அதிலே கலை நயமும் மெருகும் தனித்துவமும் சிலரால் உருவாக்கப்பட்டன. தொடர்ந்து உத்தி, உள்ளடக்கம், நடை இவை முக்கிய இடத்தைப் பெற்றன. சிறுகதையின் உருவம் மட்டும் சிதையாமல் இருந்தால் போதும். உள்ளடக்கம் பொருட்படுத்தப்பட வேண்டிய ஒன்று அல்ல என்ற கருத்து இருந்த காலத்தில் பொழுது போக்குக் கதைகளின்-பால் உணர்வுக் கதைகளின் இருப்பிடமாகத் தமிழ்ச் சிறுகதைகள் உருவெடுத்துக் கொண்டிருந்த காலத்தில் முற்போக்கு மற்றும் பொதுவுடைமைச் சிந்தனைகளைத் தம் கதைகளில் அழுத்தமாக வெளிப்படுத்தியவர்கள் திராவிட இயக்கத்தினர். 1947-57இக்கு இடைப்பட்டக் காலத்தில் தமிழர்களிடம் அறிவுத் தாகத்தைத் தூண்டி பத்திரிகை - புத்தகத்தைப் படிக்கும் ஆர்வத்தை ஊக்குவித்தப் பெருமை திராவிட இயக்க எழுத்தாளர்களுக்கே உண்டு.

"அண்ணாவின் இலக்கிய பிரவேசத்துடன் மறுமலர்ச்சி தமிழில் ஒரு புதிய வேகம் தோன்றியதோடு, நடையில் யாப்புக்குப் பொருத்தமான எதுகையும் மோனையும் சேர்ந்து மொழிக்கு ஒலியலங்காரம் கொடுத்ததும் ஒரு முக்கியமான திருப்பம்" என்று கூறுவார், சிட்டி, சிவபாத சுந்தரம். (தமிழில் சிறுகதைகள், ப. 234)

தமிழ்ச்சிறுகதை வரலாற்றில் இதன் தந்தை வ.வெ.சு. ஐயர் என்பர். பாரதியார் இவருக்கு முன்னால் இத்துறையில் நுழைந்தாலும் முத்திரை பதிக்க முடியவில்லை என்பதில் ஓரளவு உண்மை இருக்கும். மாதவையா வரதட்சணைக் கொடுமை, கணிப்பேட்டு பொருத்தம், சாதி வேறுபாடு முதலியவற்றைக் கருப்பொருளாக்கி சிறுகதைகள் எழுதினார்.

இலக்கிய பரிசோதனையை நோக்கமாகக் கொண்ட இலக்கிய இயக்கமாகத் திகழ்ந்தது மணிக்கொடி இதழ். மேனாட்டு முறைகளுக்குகிடையே நவீன தமிழ் இலக்கியத்தை உண்டாக்க விரும்புவோரின் கூட்டணி இது என்பார் கா. சிவத்தம்பி. புதுமைப்பித்தன், கு.ப. ராஜகோபாலன், பிச்சமூர்த்தி போன்ற முன்னணி எழுத்தாளர்கள் மணிக்கொடியில் உருவானார்கள். முதன்முதலாகச் சிறுகதைகளில் சமத்துவக் கருத்துக்கள் இடம் பெற்றன என்பார், பி.எஸ். இராமையா. உலக இலக்கியத் தரத்துக்குப் பேசத்தக்க சிறுகதைகள் இதில் தோன்றின என்பார் நா.பா. இதில் பின்னர் சி.சு.செல்லப்பா, இளங்கோவன், சிதம்பர சுப்பிரமணியன், பி.எம். கண்ணன், மௌனி முதலானோர் எழுதினர்.

புதுமைப்பித்தன் சாதிக் கொடுமை, தீண்டாமை, பசி, பிணி, சாக்காடு, வறுமை, அறியாமை, பொய்மை, போலித்தனம், சமயப்பூசல், கைம்மை, இளமை மணம், விபசாரம், காதலுக்குத் தடைகள், நிலையாமை, தெய்வம் இருந்தும் திக்கற்ற நிலைமை போன்றவற்றைக் கருப்பொருளாக வைத்து கதைகள் எழுதினார். குபரா. வரலாற்றுத் துறையை தொட்டுத் துலக்கினார். குடும்ப வாழ்க்கையை இலட்சியமாகக் கொண்டும், வரலாற்று நிகழ்ச்சிகளையும் புராண இதிகாச வழிகாணும் குடும்ப உறவினை உணர்த்தும் புராண இதிகாசச் சிறு கதைகளையும் மக்களின் உணர்வுகளுக்கு எட்டக்கூடிய நிலையில் படைத்தார்.

கல்கி நகைச்சுவை உணர்வோடு எளிமையும் இனிமையும் கலந்து எழுதினார். பிராமணச் சமுதாயத்தில் காணப்படும் மூட நம்பிக்கைகளையும் கொடிய பழக்க வழக்கங்களையும் காலத்தால் ஒதுக்கப்பட வேண்டிய தொன்னெறிகளையும் சாடினார். சமுதாயச் சீர்திருத்தமும் அரசியலும் இவரது குறிக்கோளாயின.

மணிக்கொடி சாராமலே கு அழகிரிசாமி, லா.ச. ராமாமிர்தம், தி. ஜானகி ராமன் போன்றோரும் எழுதிக் கொண்டிருந்தனர். தேசிய இயக்கத்தின் சார்பாக விடுதலை உணர்வோடு பல எழுத்தாளர்கள் தோன்றியது போலவே தமிழ் மண்வாசனையும், இன உணர்வும், தன்மானக் கொள்கைப் பற்றும் கொண்ட எண்ணற்ற எழுத்தாளர்களும் தோன்றினர். அவர்கள் நீதிக்கட்சியையும் சுயமரியாதை இயக்கத்தையும் சார்ந்தவர்களாக இருந்தார்கள். இவர்களின் நோக்கமாக சமுதாய விழிப்புணர்ச்சி அமைந்திருந்தது. இவர்கள் தம் படைப்புகள் மூலமாக தன்மானச் சிந்தனைகளை வழங்கினர். இவர்களுக்கு முன்னோடியாக அண்ணா விளங்கினார்.

இவரிடம் மணிக்கொடியின் தாக்கத்தை விட இயக்கத்தாக்கம் மிகுந்திருந்தது. மாதவையா, வ.ரா., கல்கி, புதுமைப்பித்தன் போன்றோரின் பாதிப்புகளைக் கொஞ்சம் காணலாம். வ.ரா.வை அண்ணா 'அக்கிரகாரத்து அதிசய மனிதர்' என்று போற்றுவார். கல்கியின் கிண்டல் அண்ணாவைக் கவர்ந்தது. புதுமைப்பித்தனின் புராண, இதிகாச, வரலாற்று மாந்தர்களையும் நிகழ்ச்சிகளையும் கதைகளாகப் புனையும் முறை அண்ணாவுக்குப் பிடித்திருந்தது. இராசாசி இலக்கியத்தைப் போராட்டச் சாதனமாக கொண்டமை அண்ணாவால் கவனிக்கப்பட்டது.

சிறுசிறு உண்மைகளை வைத்துக் கொண்டு அந்தக் காலம், நிலைமை, இவற்றை விளக்கப் பல சம்பவங்களைச் சுவையாகச் சேர்த்துக் கட்டுவது கதை என்று அண்ணா வரையறை செய்துள்ளார். அத்துடன் "வடிவம் என்பது ஆசிரியரின் திறத்தை - ஆற்றலை வெளிப்படுத்தும் வடிகாலாக இல்லாமல் ஆசிரியரின் நோக்கம் வாழ்க்கைச் சுமையில் நலிந்து கிடக்கும் - அறிவுரை பெற்றுப் பயன்பெற வேண்டிய நிலையில் இருக்கும் மக்கள் மனதை எளிதில் சென்று தாக்க வல்லதாக அமையவேண்டும்" என்பார்.

கதை வடிவிலே கருத்துக்களை எடுத்துரைக்கும்போது சுவைப்போர் அதனைக் காட்சிவழி காணுகின்றனர். அப்போது காட்சி கருத்தாகிறது. இனிமை, எளிமை, தெளிவு என்பன இயல்பாக எண்ணத்தில் எழ வாய்ப்பு உண்டாகிறது என்று அண்ணா நம்பினார்.

டாக்டர் கைலாசபதி எழுத்தாளர்களை மூன்று நிலையினராகப் பகுப்பார். முதற்பிரிவினர் சமுதாயச் சிக்கல்கள் இலக்கியத்திற்கு உகந்த பொருள் அன்று என்ற கருத்தினர். இரண்டாவது பிரிவினர் சிக்கல்களை உள்ளவாறு சித்திரிக்கும் கருத்தினர். காலப்போக்கில் சமூகம் திருந்தும் என்ற நம்பிக்கையினர். மூன்றாவது பிரிவினர் வாழ்க்கைப் போராட்டத்தை எடுத்துரைத்து அவற்றிற்கு விடிவு காண முயலுநர். இவர்களில் அண்ணா மூன்றாவது பிரிவினர்.

இவர், "கானாகி உள்ள சமுதாயத்தைத் திருத்தி அமைத்திட வேண்டும் என்ற எண்ணத்தால் உந்தப்பட்டு உள்ளத்தின் படப்பிடிப்பு வேலையை உவகையுடன் உயரிய முறையில் செய்திடும் கடமை உள்ளவர்", என எழுத்தாளர்களுக்கு இலக்கணம் வகுக்கிறார்.

1940களில் வெளியான 'செவ்வாழை' சிறுகதை அண்ணா எழுதிய கதைகளில் மிகச் சிறந்தது என்று கருதப்படுகிறது. ஒரு பண்ணையாரிடம் வேலை பார்க்கின்ற கூலி தன் வீட்டில் ஆசையாய் செவ்வாழையை வளர்க்கின்றான். அவனது பிள்ளைகளின் கனவு முழுவதும் அந்த வாழைக் குலையைச் சுற்றியே பின்னப்பட்டுள்ளது. ஆசையாய் பார்த்து பேசி ரசித்து ஏங்கி வளர்கின்ற குழந்தைகளின் உலகத்தில் இடி விழுந்தது போல பண்ணையார் வீட்டு விசேசத்திற்காக வாழைத்தாரை அறுத்துக் கொண்டு போய் விடுகின்றனர். இந்த நிலையில் செங்கோடனின் மனோநிலையும்

குழந்தைகளின் மன வேதனையையும் எந்த நெருடலும் இன்றி மிகவும் பொருத்தமாக பதிவாகியுள்ளன. (செம்மலர், ஜூன், 95)

சமுதாயத்தின் மேடு பள்ளத்தை, உயர்வு தாழ்வை அப்படியே படம் பிடித்துக் காட்டி, அறியாதவர்களுக்கு அதனை அறிவித்துப் பாடம் புகட்டும் வகையில் செவ்வாழைக் கதையை எழுதினார்.

பண்ணையார் வீட்டுக்குப் போன வாழைக்குலை நான்கு நாட்களுக்குப் பின் கடையில் குலையாகத் தொங்கியது. செங்கோடனின் மகன் அதனைக் கண்டு ஏங்கினான். *'பழம் ஒரு அணா' என்று கடைக்காரன் அவனை* விரட்டினான். வாழையோ பார்வதி பாட்டிக்குப் பாடையாக உதவுகிறது. கரியனோ செவ்வாழையைப் பற்றி நினைத்து பெருமையோடு கூறுகிறான்.

இக்கதையை அண்ணா தொடங்கியுள்ள முறையும் உரையாடல்களும் முடிவும் சிறப்பானவை. "இதோ இந்த செவ்வாழை நமது கொல்லையிலே நாம் உழைத்து வளர்த்தது. எனவே பயன் நமக்குக் கிடைக்கிறது. இது போல நாம் உழைத்துப் பிழைக்க நம்முடையது என்று ஒரு துண்டு வயல் இருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும்? அப்படி ஒரு காலம் வருமா?" செங்கோடனை எண்ணிப் பார்க்க வைக்கிறார்.

பாடையில் போவது பிணமல்ல. ஓர் ஏழை விவசாயியின் ஆசைதான். அழுகுரல்-உழைத்தும் பயனை நுகர முடியாத செங்கோடனின் இதயக் கதறலாக நமக்குக் கேட்கிறது.

புதுமைப்பித்தன், "கதையை வாசிப்பது நமது சிந்தனையின் கவனத்தை ஊக்குவதற்கு ஒரு தூண்டுகோல். கதை முடியும் பொழுது அதைப் பற்றிய சிந்தனை முடிவடைந்து விடாது. இப்படிப்பட்ட கதைகள் முடிந்த பிறகுதான் சிந்தனை ஆரம்பமாகிறது" என்பார். அண்ணாவின் கதைகளும் இப்படித்தான் என்பார் நாகை தருமன். (ப.191) விந்தன் உட்படப் பலர் முன் வைத்த சமுதாயப் பார்வைக்கு அண்ணாவின் கதைகள் முன்னோடியாக விளங்கின.

"உத்தி, உள்ளடக்கம், நடை ஆகிய அம்சங்கள் முழுமையாக அமைந்த பல சிறுகதைகளைப் படைத்தவர் அண்ணா" என்றார் பேரா. டாக்டர் அ. சிதம்பரநாதன். (தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 235)

'கொக்கரக்கோ' தான் அண்ணாவின் முதல் சிறுகதை. 1934 பிப்ரவரியில் வெளிவந்தது. இக்கதை 1973இல் ஆனந்த விகடனில் வந்த போது இறுதியில் உள்ள இரு பத்திகளை நீக்கி விட்டுப் பதிப்பித்தது. இதன் பின்னர் தமிழோசை (இலங்கை), தமிழரசு ஆகிய இதழ்கள் இதை 1980இல் வெளியிட்டன. சௌமியன் என்ற புனைப்பெயரில் அண்ணா எழுதும்போது கல்லூரி மாணவராக இருந்தார்.

சங்கரனின் நண்பன் பத்திரிகை ஆசை பைத்தியமாக்கி விட்டது. 32 பி.ஏ.க்கள் பயங்கரமான விற்பனை, 'கொக்கரக்கோ' பத்திரிகையின் பெயர் சப்த சுவை. விஷயங்களும் சுவையானவை. திடுக்கிடும் சம்பவங்கள், ஆவேசத்தைத் தரக்கூடிய ஆவேச மர்மங்கள், விநோத விசித்திரங்கள்.

'மனிதனுக்கு ஒரு தலை போதுமா' - ராம் சிமித் பிரசாங்கம்
'ஹிட்லர் பட்லர் ஆனால்'
'கருணைப்பிள்ளை நர்த்தனம்'
'பரதநாட்டியம் ஒரு பழங்கலை'

இப்படி பல்வேறு கட்டுரைகள், தூள் கிளப்பின. வைஸ்ராய் அழைப்பதாகக் கூறல்.

பத்திரிகை நடத்துவதன் சிரமத்தை மிகச் சுவையாக அண்ணா சிறுகதை ஆக்கியுள்ளமை, சிறப்புக்குரியது. ஏனென்றால் அவரும் பத்திரிகையாசிரியர் தான் - ஆனால் பைத்தியம் ஆக வில்லை. இதில் கையாளப்பட்டுள்ள இலக்கியத்திறன் எவரும் கையாளாத ஒன்று என்பார் ப. ஆறுமுகம் (முன்னுரை)

'சொர்க்கத்தில் நரகம்' என்ற கதையில் சிறுகதை வடிவம் சிறந்த முறையில் அமைந்திருப்பதைப் பார்க்கலாம். ரம்பை, மேனகா, திலோத்தமை மூவரும் இந்திரலோகத்தில் தேவர்கள் தம்மைக் காமக் கருவிகளாகப் பயன்படுத்துவதைப் பற்றி உரையாடுவதையே உத்தியாகக் கொண்ட இக்கதை உருவமுழுமை கொண்டிருப்பதைக் காணலாம். முடிவில் 'ஓஹென்றி திருப்பம்' அமைந்துள்ளது. சொர்க்கம் நரகமானதைச் சுவையாகச் சொல்லியிருக்கிறார்.

'குமரிக்கோட்டம்' கதையும் சற்று வித்தியாசமானது. தன்னுடைய மகன் ஒரு கிறிஸ்தவப் பெண்ணை மணந்ததை வெறுத்து அவனைப் புறக்கணிக்கிறார் தந்தை. அவர் தானே ஒரு வேற்று சாதிப் பெண்ணை நாடுகிறார். இது முரண்பாடு. இது பெரும் பக்தர் என்றும் தர்மசீலர் என்றும் பெயர் பெற்ற அவரது போலித்தனத்தை எடுத்துக்காட்டுகிறது. இதில் வடிவ உணர்வு பளிச்சிடுகிறது.

'கருப்பண்ணசாமி யோசிக்கிறார்' - இது புதுமைப்பித்தன் பாணியைப் பின்பற்றி எழுதப்பட்டது. மக்களால் அறிஞர் என்று போற்றப்பட்ட அண்ணாவின் பரந்த அறிவும் உத்திச் சிறப்பும் வடிவ முழுமையும் கொண்டு அவர் எழுதிய கதைகளிலேயே மிகச்சிறந்ததாகக் காணப்படுகிறது. இக்கதை பக்தி என்று அறியப்படும் ஈடுபாட்டின் மறுபக்கத்தை விளக்குகிறது. இக்கதையைப் படிக்கும் போது புதுமைப்பித்தனின் 'கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்' என்ற கதை நம் நினைவில் வருவது என்பார் சிட்டி சிவபாத சுந்தரம். (ப. 234)

இக்கதை ஓர் உண்மைச் சம்பவம் ஆகும். 1951ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் புஞ்சை சாங்குடியில் ஊர் ரெண்டு பட்டு கருப்பண்ணசாமியை ஒரு மண்டபத்தில் போட்டு பூட்டி விடுகின்றனர். போலீஸ் உதவியுடன் சாமி மீட்கப்பட்டு கோவிலுக்குப் போய் சேருகிறார். இக்கதை மூலம் அண்ணா பகுத்தறிவு சிந்தனையை எழுப்பியுள்ளார்.

'தனபால் செட்டியார் கம்பெனி' - என்ற கதையும் முக்கியமான கதையாகும். ஒரு கடையில் பணிபுரியும் ஊழியர்களின் வரவு செலவு கணக்குகளை மாத்திரம் வைத்து எழுதப்பட்டது. பற்று வரவு வைத்திருப்பவர்களின் வாழ்க்கை முறையை வெகு சாமர்த்தியமாக

விளக்கியிருக்கிறார். இக்கதை அமைப்பில் ஒவ்வொருவருடைய குறிப்பேட்டை மாத்திரம் பட்டியலாகக் காண்பித்து அவரவர் வரவு செலவில் கண்ட விவரமே அவர்களது வாழ்க்கை நிலையைப் படம் பிடிக்குமாறு காட்டுகிறார். முதலாளி, குமாஸ்தா, குமரப்பன் குறிப்பு, குப்பி குறிப்பு, லோகாமிர்த ஐயர் குறிப்பு எனச் சில குறிப்புகள் கதை அமைப்பாகும் இதற்கு அண்ணா ஒரு முன்னுரையையும் எழுதியிருக்கிறார். தமிழ்மொழியில் வெளிவந்துள்ள சிறந்த சிறுகதைகள் வரிசையில் சேர்க்கத்தக்க அண்ணாவின் சிறுகதைகளுள் ஒன்று 'ராஜபார்ட் ரங்கதுரை'. மேடை நாடகங்களின் மேன்மை குறைந்து திரைப்படங்கள் செல்வாக்குப் பெறத்துவங்கிய காலத்தை இக்கதை கண்முன் கொண்டு வருகிறது என்பார் செ. பக்தவத்சலம் (தற்கால இலக்கியத்தில் முற்போக்குப் பார்வைகள், ப. 98). பாகவதராக இருந்தாலும் இல்லா விட்டாலும், கடை நடத்தினாலும், நாடகம் ஆடினாலும், எந்தக் காரியத்தைச் செய்தாலும் நல்லவனுக்கு - திறமைசாலிக்கு - உண்மை உழைப்பாளிக்கு அவன் எந்த வேலையைச் செய்தாலும் அதிலே அவன் குறிப்பிடத்தக்கவன் ஆவான். இது இயற்கை நீதி. இதை *பொறாமை,* பொச்சரிப்பு, *கலகம் எதுவும் மாற்றாது* என்று ரங்கதுரை கூறுவார். இது கதாசிரியரே கூறுவது போல் உள்ளது.

அண்ணாவின் சிறுகதைகளை ஆராய்ந்தால், அவற்றில் தமிழ் இலக்கியத்தின் நவீன முற்போக்குக் கூறுகளுக்கு உகந்த பல படைப்புகளைக் கண்டு மகிழலாம்.

"மார்க்ட் வெயின், ஆண்டன் செக்காவ் ஆகிய இருவரது படைப்புகளில் ஈடுபாடு கொண்டவர் அண்ணா. அரசியல் கருத்துக்ளை நகைச்சுவையோடு நயமாகக் கதை வடிவில் எழுதுவதற்கு இவ்விரு அறிஞரையும் ஓரளவு பின்பற்றியுள்ளார் என்று கூறலாம்" என்பார் கெ. பக்தவத்சலம்.

வரலாற்றுச் சிறுகதைகளில் வரலாற்றை மேலோட்டமாகப் பார்த்துக் கதைக்குத் தேவையான ஆதாரங்களைத் திரட்டிக் கொள்வதுடன் மட்டுமின்றி ஆழமாக ஆராய்ச்சி செய்து மறைக்கப்பட்ட உண்மைகளை, சாத்திரத்தின் திரைமறைவில் சதிச்செயல் புரிந்து ஒளிந்து கொண்டிருப்பவர்களை, வெளியே கொண்டு வந்தார். 'தஞ்சையின் வீழ்ச்சி'யில் வெங்கண்ணா என்னும் வேதியர் தமிழ் நாட்டை மராட்டிய மன்னர்களுக்குக் காட்டிக் கொடுத்த இரண்டக நிகழ்ச்சியே கதைக் கருவாகும். இதேக் கருவை குபரா. அவர்கள் 'துரோகமா' என்ற பெயரில் வெங்கண்ணாவின் செயலுக்குக் காரணம் தேசபக்தியே என்று நியாயம் கற்பித்தார். ஒரு விஷயத்தை இருவரும் இருவேறு கோணத்திலிருந்து அணுகியிருக்கிறார்கள் என்பதே நாம் அறிய வேண்டிய உண்மை என்பார் முனைவர் மா. இராமலிங்கம் (இருபதாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கியம், ப.141).

"சுயநலமும் சூழ்ச்சித் திறனும் இனவெறியும் வைதீக வெறியும் கொண்டவர்கள் நாட்டுக்கு ஏற்படுத்திய நாசம் ஒன்றிரண்டு அல்ல. உள்ளத்தைக்

குலுக்கக் கூடிய சம்பவங்கள் பலப்பல. தஞ்சை வீழ்ச்சி அது போன்ற சம்பவங்களிலே ஒன்று. சரிதம் தரும் எச்சரிக்கை" என்று முடிப்பார் அண்ணா.

தமிழகத்தைப் பொறுத்த வரை 'சிறுகதை' என்பது சுவீகாரக் குழந்தைதான் அந்தக் குழந்தையை அண்ணா தன் கரத்தில் ஏற்றித் தவழவிட்டிருக்கும் பாங்கும் அதன் மூலம் அவர் வெளிப்படுத்தும் ஒவ்வொரு விஷயமும் விழிப்பை மட்டுமல்ல வெளிச்சத்தையும் தருகின்றது.

மகேந்திர பல்லவன் புலிகேசியிடம் தோற்றான், மகேந்திரன் மகன் நரசிம்மன் புலிகேசியைத் தோற்கடித்தான், கொன்றான். புலிகேசியின் மகன் விக்ரமன், நரசிம்மனின் மகன் பரமேஸ்வரனைத் தோற்கடித்தான். இந்த வரலாற்று நிகழ்ச்சிகளின் இடையே கதை சொல்கிறார் அண்ணா. இந்த விசித்திர வரலாற்றுக்கு ஒரு விளக்கம், எங்கோ ஒரு உண்மை புதைத்திருக்க வேண்டும் - அதைக் கண்டறியும் முயற்சியே மேலே தீட்டியுள்ள வரலாறு கலந்த கற்பனை உரை. "பரஞ்சோதி படைத்தலைவராக இருந்ததால், பல்லவ நாட்டின் இராணுவ பலத்தைச் சாளுக்கியம் உணர முடிந்தது-, வாதாபி வீழ்ந்தது. படைத்தலைவரிற் சிறந்த பரஞ்சோதி சிறுத்தொண்டராகி விட்ட பிறகு, பல்லவநாட்டுப் பலம் சரிந்தது; தோல்வி வந்தது. பரஞ்சோதி சிறுத்தொண்டன் ஆனார் என்பதை நான் ஆக்கப்பட்டார் என்கிறேன். அதாவது பரஞ்சோதியை மன்னன் சைவன் என்று காரணத்தைக் காட்டி பதவியிலிருந்து விலக்குகிறான்" என்று அண்ணா விளக்கம் கூறுகிறார்.

வில்லாளன் எனும் சாளுக்கியன் வில்லனாகிறான் என்பதும் இவரது புனைவுதான். 'பிடிசாம்பல்' என்பது சாளுக்கியத்தின் சாம்பலோடு சைவ திரு நீற்றுச் சாம்பலும் கதையில் சுட்டப்படுகிறது.

'திராவிட நாடு' (6-1-46) இதழில் வெளிவந்த கதை 'இரு பரம்பரைகள்', இது தொடக்க காலச் சிறுகதை. பொருளியல் துறையில் முதுகலைப்பட்டம் பெற்ற அண்ணா பொருளாதார விடுதலையின் தேவையை உணர்ந்து தம் எழுத்துக்களில் வெளிப்படுத்தினார். அவ்வாறு வெளிப்படுத்தப்பட்ட எண்ணங்களின் விதைதான் இக்கதை என்பார் டாக்டர் இரா. சேது (*தமிழ்ச் சிறுகதை*, ப. 29).

தனபாலச் செட்டியாரும் சுகானந்தரும் ஒரு காலத்தில் ஒன்றாக இணைந்து வியாபாரத்தை நடத்தினார்கள். இருவரும் ஒரே சாதியைச் சார்ந்தவர்கள். பழைய நண்பர்கள். இருப்பினும் பொருளாதார ஏற்றம் தன்பாலச் செட்டியாரின் போக்கில் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. நீண்டநாள் நண்பரான சுகானந்தம், நாய்க்குட்டியைக் கேட்ட போது தனபாலச் செட்டியார் சுகானந்தத்திற்குத் தருவதைவிட கலெக்டருக்கோ இன்கம்டாக்ஸ் ஆபீசருக்கோ தருவதில் நாட்டம் காட்டுகிறார். இதனால் தம்முடைய பெயரும் பரவும், லாபமும் ஏற்படும் என எண்ணுகிறார். பணத்தால் செல்வர்களின் போக்கும் நட்பும் மாறுவதை வெளிப்படுத்துகிறார். செல்வர்கள் ஏழைகளின் மீது காட்டும் அன்பெல்லாம் பாசாங்கே தவிர உண்மையானதல்ல என்பதைச் செட்டியாரின்

மகள் தேவா அறிகிறாள். நாய்க்குட்டியைக் காப்பதில் செல்வக்குடியில் பிறந்த தேவாவிற்கும் ஏழை அன்னத்திற்கும் வேற்றுமை தெரிந்தது. ஏழைகளின் உடம்பிலும் உடையிலும் காணப்படும் அழுக்கினைக் கண்டு இழித்துப் பேசும் அருள்குமார் போன்ற செல்வர்கள் அவளைத் துய்க்க விழையும் இழி செயலை எள்ளி நகையாடுகிறார்.

பழைய நட்பானாலும் பணத்தால் மாறுபடும் மனிதர்களையும் சமூகத்தொண்டென்ற பெயரால் கழிகாமத்தில் ஈடுபடும் அருள்குமார் போன்றவர்களின் இருநிலையினையும் படம் பிடித்துக் காட்டுகிறார்.

'தங்கத்தின் காதலன்' 9.7.39 குடி அரசு இதழில் அண்ணாவால் எழுதப்பட்ட சிறுகதை, 1982இல் பூம்புகார் பிரசுரம் பிரஸ் வெளியிட்ட 'கோமளத்தின் கோபம்' என்ற தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது.

கருத்தொருமித்த காதலன் போலக் கன்னியரைக் கைப்பிடித்து பொருளாசை கொண்டு, கைப்பிடித்துப் பெண்ணை கடுந்துயரில் மூழ்க விட்டு, கையில் குழந்தையுடன் காப்பாற்ற துணையின்றிப் பொய்யே துணையாக, மெய்வேடம் போடும் போலி உலகத்தைக் கண்டு கலங்கும் நிலையில் விட்டு, செல்வர் மகளைச் சேர்ந்து, உண்மை காதலுக்குக் கொள்ளி வைக்கும் கொடிய நஞ்சுள்ளம் கொண்டவரை நாடறியச் செய்வது இது.

பொன்னம்பலம் தங்கத்தைக் காதலித்தான் கர்ப்பம் ஆக்கினான். ஆனால் மாமன் மகள் கதம்பத்தை மணந்து கொண்டான். தங்கமோ பிள்ளை பெற்று விட்டு தற்கொலை செய்து கொண்டாள். பொன்னம்பலம் வெளிநாடு போய் மாமனார் பணத்தில் ஐ.சி.எஸ். தேறி கலெக்டராகி விபச்சார ஒழிப்புக்குச் சட்டம் கொண்டு வந்தான். அவனது தங்கத்தின் மகள் சுந்தரி விபச்சாரக் கோலத்தில் நியாயம் கேட்டாள். பொன்னம்பலம் அவளை மகளாக ஏற்றுக் கொண்டதோடு அவளை வைப்பாட்டியாக வைத்திருந்த திருப்பதி சாமிக்கே மணமுடித்து வைத்தார். நடந்தது சுயமரியாதைத் திருமணம். கதை இப்படி முடிவடைகிறது.

"மணம் செய்து கொள்வது மாடு பிடிப்பது போல இருக்கும் வரை, வாழ்க்கையில் பூரா இன்பத்தையும் நுகர முடியாது. அதனால் காதல் இன்பம் சுவைத்தறியாத ஆடவரும் பெண்டிரும் காமச் சேற்றில் புரள்கின்றனர். அதில் விளையும் முட்புதரே விபச்சாரம்" – இது அண்ணாவின் ஆய்வுரை மட்டுமல்ல அறிவுரையும் கூட.

இன்னொருவர் அமைத்துத் தரும் பாதையிலேயே நடந்து நடந்து நாம் பழக்கப்பட்டுப் போயிருக்கிறோம். காதல் பாதை என்பது, அவரவர்களின் சொந்த அமைப்பாக இராமல் பெற்றோர் குறித்தது, சோதிடர் கணித்தது என்பன போன்று ஏற்பட்டு விடுவதாலேயே வாழ்க்கைச் சிக்கல் ஏற்படுகிறது. சிலர் சகிப்புத்தன்மை என்ற கொள்கையின் பேரில் பாரத்தைப் போட்டுவிடுவர். சிலர் 'அவன் விட்ட வழி' என்று கூறிவிடுவர். சிலர் மட்டுமே, என் வாழ்க்கை சிக்கலற்றதாகவும், சுவையுள்ளதாகவும் இருக்கும் விதமாக அமைத்துக் கொள்ளும் உரிமை எனக்கு உண்டு என்று கூறிடுவர். காரியமும் ஆற்றுவர்.

வாலிப விருந்து, புரோகிதரின் புலம்பல், அவள் மிகப் பொல்லாதவள் எனும் கதைகளில் மோகனா, ஏமலதா, சரசா மூவரும் காதல் பாதை தேடியவர்கள்.

'வாலிப விருந்து' மோகனா கிழவனுக்கு வாழ்க்கைப்பட்டு வாழ்வைச் சுவைக்க முடியாமல் தவித்த போது வாலிப டாக்டர் ரகுராமன் விருந்தாகிறான். கிழட்டு ஐயரால் எதுவும் சொல்லவோ செய்யவோ முடியாத நிலை.

புரோகிதர் புண்ணிய கோடீஸ்வர கனபாடிகளின் மகள் ஏமலதா இளம் விதவை, பள்ளி ஆசிரியன் கனக சுந்தரத்தைக் காதலித்து மணமுடிக்கிறாள். பணத்துக்காகக் கல்யாணச் சடங்குகளைச் செய்த புரோகிதர் உண்மை தெரிந்து புலம்புகிறார். ஏமலதா புலம்பலைப் பொருட்படுத்தாமல் பெங்களூர் போய் வாழ்கிறாள்.

இளம் பெண் சரசா அம்மாவின் மனதை மாற்றி கலப்பு மணம் புரிந்து கொள்கிறாள். அதோடு சுப்பைய்யர் புரோகிதரின் மகளான இளம் விதவை கமலாவுக்கும் மறுமணம் செய்து வைக்கிறாள். ஊர் அவளைப் பொல்லாதவள் என்றது.

இக்கதைகள் பெண்ணடிமைத் தனத்தைப் போக்க முயல்கின்றன; புரோகிதப் புரட்டு, மத ஆபாசம், பொருந்தா மணம், விதவை மணம் ஆகியவற்றை வற்புறுத்துகின்றன.

அண்ணாவின் சிறுகதைகளை அவற்றின் கருப்பொருளை ஒட்டி 11 வகைகளாக டாக்டர் பா. உதயகுமார் பகுத்துள்ளார்.

1. மூடநம்பிக்கை ஒழிப்புச் சிறுகதைகள்
2. பெண்ணுரிமை
3. ஆரிய எதிர்ப்பு
4. முதலாளித்துவ எதிர்ப்பு
5. சமுதாய ஒப்பீடு
6. வரலாறு
7. உருவகம்
8. உண்மை நிகழ்ச்சிச் சித்தரிப்பு
9. உளவியல்
10. பாத்திர நோக்கச் சித்தரிப்பு
11. பொதுநிலை

அறியாமையே மூடநம்பிக்கைக்கு அடிப்படை. இது காரண காரியத் தொடர்பை எண்ணாமல் இருக்கச் செய்யும். சமுதாயத்தில் மூடநம்பிக்கை நிறைந்துள்ளமைக்குச் சாதி, மதம், நெறி எனும் அமைப்பு முறைகளே. அண்ணாவின் 'பரிசு' மூட நம்பிக்கைக்கு எதிரானது; 'சிங்கள சீமாட்டி' சாதி உணர்வைச் சாடுவது; 'மதுரைக்கு டிக்கெட் இல்லை' மத எதிர்ப்பினை முன்மொழிவது; 'ஜெபமாலை' மடத்தலைவர்களைக் கேலிக்குள்ளாக்குகிறது; 'சொர்க்கத்தில் நரகம்', 'புதிய நாயனார்' போன்ற கதைகள் புராண எதிர்ப்பைப்

பறைசாற்றுகிறது; 'மனித மந்தை' கதை 'கடவுளை மறுக்கிறது. 'மூன்று கடிதங்கள்' கதை விழாக்களை விமர்சிக்கிறது; 'பலா பலன்' கதை கணிப்பேட்டு நம்பிக்கையைக் கிண்டலக்கிறது; 'யார் மீது கோபித்துக் கொள்வது' கதை பேய் பிசாசு நம்பிக்கையைப் பரிகசிக்கிறது; 'விழுப்புரம் சந்திப்பு' கதை மாந்தரீகத்தை எதிர்த்து முழங்குகிறது.

பெண்ணுரிமைக் கதைகளில் பல்வேறு போக்குகளைக் காணமுடியும். பொருந்தாமணம் பற்றி 'வாலிப விருந்து', 'சுடுமூஞ்சி', 'கன்னி விதவையானாள்' எனும் கதைகள் அவலம் தோன்ற சித்தரிக்கும். கைம்பெண் மணத்தின் தேவையைக் குறித்து 'பாமாவிஜயம்' கூறும். வரதட்சணைக் கொடுமையைப் பற்றி 'சோணாசலம்' கதையும் சொத்துரிமை பற்றி 'உண்ணாவிரதம் ஒரு தண்டனை' கதையும் விவரிக்கும்.

'அறுவடை', 'பேரன் பெங்களூரில்', 'சொல்வதை எழுதேண்டா', 'வேதிகளி' ஆகிய கதைகள் ஆரிய எதிர்ப்புச் சிறுகதைகள் ஆகும். அவர்களின் சுரண்டல், தன்னலம், சூழ்ச்சி, உழைப்பின்மை, இனவாழ்வுக் கண்ணோட்டம் போன்றவை எவ்வாறு அமைந்து தமிழ்ச் சமுதாயத்தை அழிக்கிறது என்பதைக் காட்டுகின்றன.

'செவ்வாழை', 'ரொட்டித்துண்டு', 'பக்த பக்காத் திருடன்', 'பூபதியின் ஒருநாள் அலுவல்', 'பொங்கல் பரிசு' போன்ற கதைகள் முதலாளித்துவத்தின் சமுதாய ஆதிக்க உணர்வு, சுரண்டல் தன்மை, சூழ்ச்சி, பசப்பு, ஏய்ப்பு போன்றவற்றைச் சுட்டுகின்றன.

'இலாபநஷ்டம்', 'நாடோடி', 'உடையார் உள்ளம்' ஆகிய கதைகள் முதலாளித்துவம் என்பது தனக்கு ஒரு நியாயத்தையும் இல்லாருக்கு ஒரு நீதியையும் வழங்கக் கூடியது என்பதைக் கருவாகக் கொண்டவை. இவற்றை ஒப்பீட்டுச் சிறுகதைகள் எனலாம். இவற்றில் ஈட்டலும் இழப்பும், நிலையும் நியாயமும், பகையும் நட்பும், உடையாரும் இல்லாரும், காத்தலும் காட்டிக் கொடுத்தலும், கருவிபாதலும் ஏமாற்றுதலும், சமுதாய ஆதிக்கமும் விளைவும், ஒழுக்கச் சிதைவும் விபச்சார விளைவும் எனும் ஒப்பீடுகள் செய்யலாம்.

'புலிநகம்', 'பிடிசாம்பல்', 'திருமலை கண்ட திவ்யஜோதி', 'தஞ்சை வீழ்ச்சி', 'ஒளியூரில்', 'கொலம்பசு' ஆகியவை வரலாற்றுச் சிறுகதைகள். இவற்றில் அப்சல்கானின் மரண சூழ்ச்சி, பரஞ்ஜோதியின் சமயப்பணி, திருமலை நாயக்கரின் மரணம், வெங்கண்ணாவின் துரோகம் நலந்தாவின் எரி, கொலம்பசின்வடு போன்றவற்றைக் கண்டு கொள்ளலாம்.

'ராஜபார்ட் ரங்கதுரை பாகவதர்', 'மரத்துண்டு' ஆகிய உருவகக் கதைகளையும் எழுதியுள்ளார். இவற்றில் பொது உண்மைகளையும் நீதிகளையும் வற்புறுத்தவும், சமுதாயத்தின் எள்ளல் போக்குகளைச் சுட்டவும் முடிந்தது. இக்கதை அண்ணாவுக்கும் பெரியாருக்குமுள்ள உறவைக் காட்டியது. இதில் இவரே ரங்கதுரை; பெரியார் குருமூர்த்தி.

'நாக்கிழந்தார்', 'கருப்பண்ணசாமி யோசிக்கிறார்' 'சமயபுரத்தம்மன் மானநஷ்ட வழக்கு', 'ஒருவன் தான் பிடிப்பட்டான்' ஆகியவை உண்மை

நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு சித்திரிக்கப்பட்ட கதைகள். இவை நாளிதழ்களில் வந்த செய்திகளாகும்.

'பேய் ஓடிப்போச்சு', 'சாது' ஆகியவை உளவியல் கதைகள் ஆகும். இவை மாந்தர்களின் உணர்ச்சி வாய்ந்த வாழ்வையும் அவர்களின் வேறுபட்ட மனப்போக்கின் விளைவுகளையும் சித்திரிக்கின்றன. இவை என்ன நடந்தது என்பதை விளக்கிக்காட்டி ஏன் நடந்தது என்பதை ஆழ்ந்து நோக்குவதாகும்.

'உபகாரி உலகநாதன்', 'பித்தளையல்ல பொன்னேதான்', 'சுமார் சுப்பையா', 'சொக்கி', 'உடை போட்டதும்' ஆகியவை பாத்திர சித்திரிப்பு நோக்கக் கதைகள். இவற்றில் போலி மாந்தர், கிளிப்பிள்ளை மாந்தர், தியாக மாந்தர், நுண்ணறிவு மாந்தர், சூழல் மாந்தர் ஆகியோரைக் காணலாம்.

அரசியல் எள்ளல், வடநாட்டுச் சுரண்டல், சட்டத்தின் நிலை, இதழாளர், எழுத்தாளர், தமிழ்ப் புலவர்போக்கு, நெசவாளர் நிலை, மருத்துவர் போக்கு, பாச உணர்ச்சி, கள்ள வியாபாரம் போன்ற பலவற்றைக் கருவாகக் கொண்டும் சிலகதைகள் அமைந்துள்ளன.

அண்ணாவின் சிறுகதைத் தலைப்புகள் எளிய தொடர்களால் ஆனவை; செறிவு நிறைந்தவை; உட்பொருள் கொண்டவை; ஆர்வம் ஊட்டக்கூடியவை; புதிய பார்வை உடையவை. எள்ளல், அங்கதம், நகைச்சுவை, உருவகம், ஒப்பீடு, நேரடிப் புலப்பாடு போன்ற பண்புகள் கொண்டவை.

இவரது சிறுகதைத் தொடக்கங்களை, உரையாடல் தொடக்கம், அறிமுகத் தொடக்கம், ஆர்வத் தொடக்கம், நேரடித் தொடக்கம், குறிப்புப் பொருள் தொடக்கம், முன்னுரைத் தொடக்கம், செய்தித் துணுக்குகள் தொடக்கம், பாத்திரக் கூற்றுத் தொடக்கம், அஃறிணையோடு உரையாடும் தொடக்கம், மடல் தொடக்கம், வினாவிடைத்தொடக்கம், பாத்திரக் கூற்றுத் தொடக்கம் எனப் பகுப்பார் டாக்டர் பா. உதயகுமார்.

இதுபோல முடிவுகளையும் தொடக்க இயைபு, தொடக்க முரண், சிக்கல் தீர்வு, கருத்துரை, சிந்தனைத் தூண்டுதல், சூழ்ச்சி, திடீர் திருப்பம், குறிப்புப் பொருள் நல்கல் எனப் பகுத்துள்ளார்.

மடல், நாட்குறிப்பு, குறிப்பேடு, தொலைபேசி, மேடைப்பேச்சு, வானொலி, உரையாடல், பின்னோக்கு, நினைவோட்டம், மனச்சான்று, கனவு, முத்திறம், திருப்புரை எனப் பல்வேறு உத்திகளை அண்ணா தம் சிறுகதைகளில் கையாண்டுள்ளார்.

"சிறுகதையை இலக்கியத் துறையிலிருந்து பிரித்தெடுத்து ஒரு சமுதாய விமர்சன கருவியாகப் பயன்படுத்தியவர். சிறுகதையைப் பிரச்சாரக் கருவியாகப் பயன்படுத்தினாலும் சிறுகதையின் வடிவத்தைச் சிதைக்காதவர். உத்தி, உள்ளடக்கம், நடை ஆகிய அம்சங்கள் அமைந்த சிறுகதைகளைப் படைத்த அண்ணாதுரையை மணிக்கொடிக்கு அடுத்த காலத்தில் சிறுகதையை வளர்க்க உதவிய ஆசிரியர்களுள் ஒருவராகக் கருதலாம்" என்பார் அ.கா. பெருமாள்-எஸ் ஸ்ரீகுமார் (த.இ.வ., ப. 281)

"விடுதலை உணர்வோடு தேசிய இயக்கத்தின் சார்பாக எண்ணற்ற எழுத்தாளர்கள் தோன்றியதைப் போலவே தமிழ் மண்மணமும், இன உணர்வும், தன்மானக் கொள்கைப் பற்றும் கொண்ட எண்ணற்ற எழுத்தாளர்கள் நீதிக்கட்சியிலும் சுயமரியாதை இயக்கத்திலும் தோன்றினார்கள். சமுதாய விழிப்புணர்ச்சியையே நோக்கமாகக் கொண்ட இவர்களுள் படைப்பிலக்கியங்கள் வாயிலாகத் தன்மானச் சிந்தனைகளை வழங்கிய முன்னோடியாகத் திகழ்ந்தவர் அண்ணா அவர்கள்" என்பார் டாக்டர் பா. உதயகுமார்.

மணிக்கொடி இதழ் தோற்றுவித்த சிறுகதை இயக்கமும் பல்வேறு இதழ்களும் சிறுகதை என்பதையே இலக்கியச் சூழலாக ஏற்படுத்திய காலக்கட்டத்தில் அண்ணா எழுத்துத் துறையில் புகுந்தார். சிறுகதை வழியே சமுதாயச் சிந்தனைகளுக்குக் கலைவடிவம் தந்துள்ளார். மாதவையா, வரா. ஆகியோரிடம் சமுதாயச் சீர்திருத்தப் போக்கு இருந்தது. கல்கியிடம் வாசகனிடம் நேரடியாக உரையாடுவதும், கதை மாந்தர் மற்றும் நிகழ்ச்சி குறித்தும் கருத்துரைப்பதும் எழுத்தில் கிண்டல், கேலி, நகைச்சுவை, தெளிவு, நளினம், கலகலப்பு ஆகியவற்றைக் கலப்பதும் உண்டு. புதுமைப்பித்தன், கு.ப.ரா. போன்றோர் புராண இதிகாச வரலாற்று மாந்தர்களையும் நிகழ்ச்சிகளையும் கதைகளாகப் புனைந்தனர். வ.வே.சு. ஐயர், இராசாசி போன்றவர்கள் உவமைக்கதைகள் மூலம் தம் இயக்கக் கொள்கைகளை மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு, கதர் இயக்கம், நாட்டுப் பற்று போன்ற நோக்கங்களுக்காகப் பயன் படுத்தினர். இவை அத்தனைச் சிறப்புத் தன்மைகளையும் அண்ணாவிடம் காணலாம்.

"பழமை புதுமை என்ற இரு சக்திகளுக்கும் போர் நடக்கிறது. எழுத்தாளர்களின் பேனா முனைகளே அப்போரிலே உபயோகமாகும் போர்க்கருவிகள். இலக்கியம் என்னுடைய பிரச்சனையல்ல வாழ்க்கை தான் என்னுடைய பிரச்சினை. வாழ்க்கையில் இன்பத்தைப் பெருக்க வேண்டும். வேதனையைக் குறைக்க வேண்டும். இதுதான் என் இறுதி இலட்சியம். ஒரு தெளிவான சமூகக் குறிக்கோள் உள்ள எழுத்தாளன் நான். இந்தச் சமூக உறவு தான் என்னை எழுத வைக்கிறது". என்பார் அண்ணா. (தி. சடகோபன் & கனகசபை (தொகு) அறிஞர் அண்ணாதுரை, ப.8).

ஏற்கனவே நாவலிலும் நாடகத்திலும் பழக்கப்பட்ட அண்ணா தமது காலத்தில் வாசகர்களிடையே சிறுகதையின் செல்வாக்கு அதிகரித்து வருவதைக் கண்டு இந்த இலக்கிய வடிவத்தைக் கையாள முயன்றார். ஆயினும் அதனைப் பயன்படுத்தியது கலை நோக்கில் அல்ல. அவர் தனது ஆசான் பெரியாரிடமிருந்து பெற்ற கொள்கையையும் வரலாற்று அடிப்படையில் தாம் சொந்தமாகச் சிந்தித்துக் கண்டு பிடித்த உண்மைகளையும் சிறுகதை வடிவத்தின் மூலம் எடுத்து விளக்கலாம் என்று புரிந்து கொண்டார்.

அண்ணாவின் தொடக்ககாலக் கதைகள் சிக்கல்களுக்குத் தீர்வு காட்டின. எடுத்துக்காட்டாக 'பொய் இலாப நஷ்டம்', 'கபோதிபுரக்காதல்' முதலியவற்றைக் குறிப்பிடலாம். இடைக் காலத்தில் எழுந்த கதைகளில் சிக்கல்கள் விளக்கப்பட்டன. 'யார் மீது கோபித்துக் கொள்வது?'. 'பல்லிளிக்கும் பரம்பிரம்மங்கள்' முதலியன இவ்வகையின. பிற்காலக் கதைகளில் படிப்போரின் சிந்தனையைத் தூண்டிச்செயல்படுமாறு சிக்கல்களை அமைத்தார். 'விழுப்புரம் சந்திப்பு', 'கடைசிக்கனவு' போன்ற கதைகள் இதற்குச் சான்றுகளாகும்.

---

# 4

# புதினங்கள்

" சீர்திருத்த இயக்கத்தில் பகுத்தறிவுப் பாதையில் பெரியாரின் வழியில் வந்தவரான அண்ணா சாதி ஒழிப்பு, பொருந்தாமணக் கொடுமை, போலிச் சமய வாதிகளைத் தோலுரித்தல், கலப்பு மண ஆதரவு ஆகிய பொருள் பற்றி பல நாவல்களைப் படைத்தார்". என்பார் அ.கா. பெருமாள் - எஸ். ஸ்ரீகுமார். (த.இ.வ., ப.315).

1939இல் சூலை குடியரசு இதழில் அண்ணாவின் 'கோமளத்தின் கோபம்' என்னும் முதல் குறு நாவல் வெளி வந்தது. 1940 மார்ச் 23 குடியரசு இதழில் 'வீங்கிய உதடு' என்னும் தொடர் கதையை எழுதினார். திராவிட நாடு இதழில், 1948இல் 'என் வாழ்வு' என்ற பெயர் பெற்றது.

சென்ற நூற்றாண்டிலிருந்து தமிழில் வளமுடன் வளர்ந்து வருவது நாவல் இலக்கியம். வேத நாயகம் பிள்ளையின் 'பிரதாப முதலியார் சரித்திரம்', 'சுகுண சுந்தரி சரித்திரம்', குருசாமி சர்மாவின் 'பிரேம கலாவத்யம்', மாதவய்யாவின் 'சாவித்திரி சபதம்', ச.ம. நடேச சாஸ்திரி எழுதிய 'தீனதயாளு' போன்றவை தொடக்கக் கால நாவல்கள். வடுவூர் துரைசாமி ஐயரின் நூல்கள் ஆங்கில நாவல்களைத் தழுவி வெளிவந்தன. ஜே.ஆர். ரங்கராமு, பி.டி. சாமி துப்பறியும் நாவல்கள், வை.மு. கோதைநாயகி அம்மாளின் நாவல்கள், கல்கியின் தொடர் நாவல்கள் குறிப்பிடத்தக்கவை.

அண்ணா தனக்கென தனி பாணியில் நாவல்களை எழுதினார். அவை திராவிட நாடு இதழ்களில் (கலிங்க ராணி, ரங்கோன் ராதா, குமஸ்தாவின் பெண், பார்வதி பி.ஏ.,) வந்த போதும் நூல் வடிவில் வந்த போதும் வாசகர்கள் உற்சாகமாக வரவேற்றனர்; வாங்கிப் படித்தனர். எண்ணிக்கை குறைவு எனினும் நிறைவானவை. நவரசமும் நிறைந்திருக்கும்; நல்ல கருத்துகளை வலியுறுத்தும்; குழப்பமற்ற தெளிவான நடை - விறுவிறுப்பான கதையோட்டம்.

அண்ணாவின் கதைகளைப் புதினம், குறும்புதினம், சிறுகதை என மூன்றாகப் பகுக்கலாம். இவர் 6 புதினங்கள் எழுதியுள்ளார். 'விடுதலை' இதழில் இவர் எழுதிய 'வீங்கிய உதடு' தான் முதல் புதினம் 'ரங்கோன் ராதா' நூலாக வந்த முதல் புதினம். ஆறில் மூன்று புதினங்கள் முடிவு பெறாதவை. அவை 'வீங்கிய உதடு', 'தசாவதாரம்', 'இன்ப ஒளி' ஆகியனவாகும். அண்ணா எழுதிய

குறும்புதினங்கள் ஒன்பது. இவற்றில் முதல் குறும்புதினம் 'கோமளத்தின் கோபம்'; கடைசி குறும்புதினம் 'அப்போதே சொன்னேன்.'

பிறமொழிக் கதைகளைத் தழுவி அவர் எழுதிய படைப்புகளும் உள்ளன. "20ஆம் நூற்றாண்டுத் தமிழக மறுமலர்ச்சி என்பது மிகப்பெரிய அளவில் திராவிட இயக்கத்தையே சார்ந்துள்ளது. அண்ணா கருத்துக்களைக் கட்டுரையாகத் தீட்டியதோடு எளிய மக்களும் விரும்பிப் படிக்கும் கதை வடிவிலும் தந்தார். இன்றையத் தமிழக மறுமலர்ச்சியைத் தோற்றுவித்ததில் இவரது கதைகள் ஆற்றிய பங்கு தனிச்சிறப்பு பெறுகிறது.

பெரியார், இங்கர்சால், வால்டேர், ரூசோ முதலிய முற்போக்கு எண்ணம் படைத்தவர்களின் கருத்துகளும் பழந்தமிழ் இலக்கியங்களும் இவரைச் சமுதாய மறுமலர்ச்சியாளராக உருவாக்கின" என்பார் டாக்டர் சேது.

இந்துமத வர்ணாசிரமக் கோட்பாடுகள், கடவுள்முறை, புராணக் கதைகள் இவற்றின் வழி அமைந்த வாழ்க்கை முறையை மாற்ற முனைந்தார். பகுத்தறிவுக்கொவ்வாத சமயச் சடங்குகள், மனிதனின் சிந்தனையைச் சிறை படுத்தும் மூட நம்பிக்கைகள், மனிதர்களுக்குள் பேதங்கள் உண்டாக்கும் வருணாசிரம தத்துவங்கள் ஆகியவையே தமிழின் வீழ்ச்சிக்குக் காரணம் என்பதை உணர்ந்தார். தமிழ் மக்கள் மீது திணிக்கப் பெற்ற ஆரியக் கருத்துக்களில் இருந்து விடுவித்து, மறைந்து கிடக்கும் தமிழ் நாகரிகத்தை உணர்த்தி, தமிழ் மக்கள் மறுமலர்ச்சிச் சிந்தனை பெற உழைத்தார் என்றும் அவர் குறிப்பிட்டார். (அண்ணாவின் கதை இலக்கியம், ப. 42-44).

## கோமளத்தின் கோபம்

பரதன் என்னும் புனைப்பெயரில் 'குடி அரசு' இதழில் 16-7-39 முதல் 6-8-39 முடிய தொடர் ஓவியமாக வந்த கற்பனைச் சித்திரம். 16-3-75 முதல் 4-5-75 வரை 'காஞ்சி'யிலும் மறுபதிப்பாக மலர்ந்தது. பூம்புகார் பிரசுரம் பிரஸ் 1982இல் நூலாக்கியது.

பார்ப்பனீயத்தால் கைப்பொருள் இழந்து, கைகட்டிப் பணியாற்றும் கூலியாகி, கோமளம் என்னும் பார்ப்பனப் பெண்ணின் மோகவலையில் சிக்கி, கொலைகாரனாகிக் கொடுஞ்சிறையில் சென்று விடுதலை பெற்று வந்த லிங்கத்தைச் சமுதாயம் தற்கொலை செய்து கொள்ளத் துரத்துகிறது. சிங்கப்பூரில் அவனது உடன்பிறந்தாள் விட்டுச் சென்ற ஒரு கோடி செல்வம் லிங்கத்தை வாழ வைக்கிறது. அவள் செல்வம், மதிப்பு ஆகியவற்றை இழந்து விலை மகளாகி விடும் முடிபினைக் காட்டுவது இக்கதை.

லிங்கம் தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்யும் காட்சியில் அவன் பேசும் தனி மொழியின் நாடகப் பண்பு மனித உள்ளத்தினை எழுத்தில் வடித்துத் தரும் அண்ணாவின் படைப்புத் திறனை விளக்குவதாகும்.

"நான் ஏன் இருக்க வேண்டும். பொருள் இழந்தேன், பொன் இழந்தேன், பெற்றோரை இழந்தேன், கொலை செய்தேன், சிறை புகுந்தேன், இன்று

சீந்துவாரில்லை. மண் தின்று வாழ்வதா? பிச்சை எடுத்து பிழைப்பதா? என்ன செய்வது? அலையில் அகப்பட்ட சிறுகுழந்தை, நெருப்பில் விழுந்த புழு, ஆடிக்காற்றில் சிக்கிய பஞ்சு போலவன்றோ எனது நிலை இருக்கிறது. நான் ஏன் வாழ வேண்டும்" இப்படி உள்ளத்தில் பொங்கி வரும் இன்னலை வெளிப்படுத்த உவமைகளை அடுக்கித்தரும் அண்ணாவின் ஆற்றல் தமிழுக்குப் புதுவரவு" என்பார் ப. ஆறுமுகம் (முன்னுரை).

திரு மெய்கண்டான் இக்குறும் புதினத்தைப் புதினம் என்றே வகைப்படுத்தியுள்ளதும் கவனிக்கத்தக்கது.

## கபோதிபுரக் காதல்

பெற்றோரின் வறுமையினால் இளம் பெண்களைக் கிழவர்கட்கு மூன்றாந்தாரமாக்கும் கொடுமையை இந்நாவல் காட்டும். இது பரதன் என்ற புனைப்பெயரில் 'குடி அரசு' இதழில் 12-11-39 முதல் 3-3-40 முடிய தொடர் ஓவியமாக வந்த குறும்புதினம் ஆகும். இளமை நலமும் மணமும் கமழும் எழிலரசி சாரதாவைச் சருகாகிவிட்ட பழுத்த கிழவனுக்கு மணமுடித்து, அவள் காதலைக் கருக்குவதோடு விபசாரி ஆக்கிடும் சமுதாயத்தைக் கருத்துக் கண்ணுள்ளோர் காணச் செய்வது இக்கதை. கண்ணிழந்த பின்னரும் பரந்தாமன் காதல் ஒளி வீச கற்பிழந்தாள் எனினும் காதலிக்கு வாழ்வு தரும் புரட்சிப் பொறி வீசிக் கருத்துக் கதிர் பரப்புகிறான்.

வேதவல்லி மகள் சாரதா. அவள் பரந்தாமனைக் காதலித்தாள். ஆனால் அவள் அவனது தாத்தா மாரியப்பப் பிள்ளையை மணந்து அவனுக்குப் பாட்டியானாள். சாரதா தவித்தாள். கருப்பையா அவளைத் தன் கைப்பாவை ஆக்கி காம இச்சையைத் தீர்த்துக் கொண்டான். சிங்காரவேலனோ இந்த இருவரையும் புகைப்படம் எடுத்து உடனே 1000 ரூபாயும் மாதந்தோறும் 200 ரூபாயும் கேட்டு மிரட்டினான். வேறு வழி இல்லாமல் கருப்பையா தூக்குமாட்டித் தற்கொலை செய்து கொள்கிறான். பரந்தாமனோ சிங்கர வேலனின் மிரட்டலை அறிந்து புகைப்படங்களை அபகரித்து சாரதாவுக்கு உதவ வர சாரதா கொடுத்த அபினால் கிழவர் இறக்க விதவையாகிறாள். விதவையை அம்மை நோயால் கண்போன நிலையிலும் மணந்து கொள்கிறான் பரந்தாமன். இதுதான் கபோதிபுரக் காதல்.

"பார்வதி - பரமசிவன் ஜோடிக்கு என்ன குறை? லட்சுமி - விஷ்ணு இந்த ஜோடி தான் என்ன லேசானதா? சாமிகளெல்லாம் பலே ஆசாமிகளப்பா? அவர்கள் பேரைச் சொல்லிக் கொண்டு நாம் தான் இப்படி இருக்கிறோம்" - இது புலம்பல் அல்ல; புரட்சிக் குரல்.

"செக்கு இழுத்து இழுத்து மாடு கெட, எண்ணெயைத் தடவித் தடவி பிறர் மினுக்குவதைப்போல்" - சாரதாவின் சங்கடத்துக்கு இதைவிடப் பொருத்தமான உவமை வேறு இல்லை.

## பரிசு

இது அண்ணாவால் 1940இல் பரதன் என்னும் புனைப்பெயரில் குடியரசு வார இதழில் தொடராக எழுதப்பட்டது. அப்போது அவர் இக்கதைக்கு வைத்தப் பெயர் ‘சிங்களச் சீமாட்டி’. இது நூல் வடிவம் பெறும் போது 1958இல் ‘பரிசு’ என்ற பெயரைப் பெற்றது.

மங்கம்மாள் ஒரு நாடக நடிகை ‘சிங்களச் சீமாட்டி’ என்ற நாடகத்தில் நடித்து பெரும் பெயர் எடுத்தவள். சங்கரனின் மாமன் இவளைக் காதலித்தார். இவர்களின் பிள்ளைதான் மலர்க்கொடி. இவளைச் சங்கரன் காதலித்தான். அவளது தாயும் சம்மதித்தாள். ஆனால் எச்சரிக்கையாக இருக்கும்படி சொன்னார். நாடக நடிகையின் மகள் என்று தெரிந்ததும் மணந்து கொள்ளத் தயங்கினான். நண்பன் சதாசிவம் அவன் மனதைக் கலைத்தான். தனது கூத்தி ஜீவாவுடன் தொடர்பை உருவாக்கினான். சங்கரன் ஜீவாவோடு வாழத்தொடங்கி விட்டான். அவளது தோழி பார்வதி. அவளோடும் சங்கரனுக்குத் தொடர்பு ஏற்பட்டது. ஜீவா கண்டித்தாள். கர்ப்பமுற்ற அவள் தன் குழந்தையைப் பார்வதியிடம் ஒப்படைத்து விட்டு இறந்து போகிறாள். மலர்க்கொடியும் தாயோடு சிலோனுக்குப் போய்விடுகிறாள். அப்போது சங்கரன் கிராமத்தில் உள்ள மாமன் வீட்டில் மறைந்து வாழ்ந்தான். அவனது மாமன் சங்கரனின் சரித்திரத்தை அறிந்து, தன் கதையைக் கூறி அவனுக்கும் தன் மகள் மலர்க்கொடிக்கும் திருமணம் செய்து வைக்கிறார். தன் மகள் குமுதாவையும் சேர்த்துக் கொள்கிறான். எல்லோரும் ஒரே குடும்பமாக வாழ்ந்தனர். இதுதான் கதை.

இக்கதை 12 பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒரு இளைஞனின் காமக்களியாட்டமே இதில் விவரிக்கப்படுகிறது. “ஐயோ, இவளை நான் மணம் புரிந்து கொள்வதா? நாடு நகைக்காதா? கூத்தாடிச் சிறுக்கியை கொங்கு வேளாளக் குடிபிறந்த நானா மணப்பது; என் குடிப் பெருமை என்னாவது. சிச்சீ! ஐயோ” என்று விசாரப்படுகிறான் சங்கரன். காதலைச் சாதி உணர்வு வெல்கிறது. மாமன் மகள் என்றதும் மறுக்காமல் மணந்து கொள்கிறான்.

> “திருவெற்றியூர் தேர்வருகுது
> திரும்பிப் பாரடி கண்ணே திரும்பிப்பாரடி
> உன் மடியில் இருக்கும்
> மக்காச் சோளத்தைத் தின்னுபாரடி”

என்ற நாட்டுப்புறக் குழந்தைப் பாடலும் இக்கதையில் சேர்க்கப்பட்டுள்ளது.

## கலிங்க ராணி

வரலாற்று நாவல் எழுதுவது சிரமம். வரலாற்று ஆதாரங்களின் அடிப்படையில் கற்பனையாகக் கதையை உருவாக்க வேண்டும். கற்பனையில் வரலாற்று ஆதாரங்கள் ஊனமடைவதோ வரலாற்றால் கதைப்போக்கில் தளர்ச்சி ஏற்படுவதோ கூடாது. அண்ணா இந்த வகையில் கவனமாகக் கையாள்கிறார். கால வேறுபாடு, நடையுடை பாவனை மாறுபாடு இவைகளால்

பாதிக்கப்பட்டாலும் எழுத்தாற்றலால் நம்மை அந்தக் காலச் சூழலுக்கு இட்டுச் செல்கிறார்; *சரித்திர காலத்துடன் சங்கமமாகி ரசிக்கும்படி* செய்வதில் அண்ணா முன்னணியில் நிற்கின்றார்.

"சோழ மன்னன் குலோத்துங்கன். அவனது குதிரைப் படைத்தலைவன் வீரமணி. இவன் நடன ராணியைக் காதலிக்கிறான். இவன் கலிங்க நாட்டின் மீது படையெடுத்துச் செல்ல நேரிடுகிறது. அங்கு வெற்றி வாகை சூடுகிறான். உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் ஒருவனின் கடைசி நேர ஆசையைத் தீர்க்க அவனோடு செல்கிறான். அவன் தனது மகளைக் கண்டு பிடித்து அவளிடம் தன் பொக்கிஷத்தை ஒப்படைக்கும்படி வேண்டுகிறான். நீலமணி காதணியை அடையாளமாகத் தருகிறான். தேடிவந்த சோழ வீரர்கள் வீரமணியைச் சதிகாரனோ என்று சந்தேகிக்கின்றனர். நாட்டில் நுழைய அவனுக்குத் தடை. குலோத்துங்கனின் மகள் அம்மங்கை. அவளது தோழி நடனராணி. பொறாமை கொண்டாள் கங்காபாலா. இருவரையும் பிரிக்க முயன்றாள்.

"நடனராணி காதலன் நிலைக்காகக் கலங்கி நோய் வாய்ப்பட்டாள். வைத்தியர் அவள் மீது ஆசை கொள்ள அது தோல்வியுற கங்காபாலா அவன் மூலம் நடனராணியைக் கொலை செய்ய முயல்கிறாள். விஷத்தை அம்மங்கைக்குக் கொடுக்கிறான். சூது வெளிப்பட கங்காபாலா அகப்பட்டுக்கொள்கிறாள். நடனராணி தன் காதலனைத் தேடி பாண்டிய நாட்டிற்குப் போகிறாள். பல சோதனைகள். வீரமணி கலிங்க வீரனின் மகளைத் தேடி *மலர்* புரிக்கும் போகிறான். ஆரியப்பூசாரியின் சூழ்ச்சியால் அரசியைக் கொல்ல முயன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டு சிறைபடுகிறான். அங்கிருந்து தப்பி கிழவியால் பைத்தியமாக்கப் படுகிறான். அப்போது நடனராணியைக் கண்டு பைத்தியம் தெளிகிறது. நீலமணி மூலம் நடனராணியே கலிங்க வீரனின் மகள் என்பது தெரிகிறது. பாண்டிய மன்னனே மாறு வேடத்தில் குலோத்துங்கனிடம் போய் வீரமணி குற்றமற்றவன் என்பதை நிரூபிக்கிறான். நடனராணி கலிங்கராணி ஆகி வீரமணியை மணந்து கொள்கிறாள்.

ஆவலைத் தூண்டும் கட்டங்கள், திடுக்கிட வைக்கும் நிகழ்ச்சிகள், உள்ளத்தை உருக்கும் சம்பவங்கள், விறுவிறுப்பாகவும் குழப்பமின்றிச் செல்லும் கதையோட்டம், இனிய தமிழ்நடை, வரலாற்று ஆதாரங்கள், இடையிடையே கருத்துக் குவியல்கள் இத்தனையும் நிறைந்த அரிய படைப்பு.

இப்புதினம் தோன்றிய காலக்கட்டத்தில் (1942-43) அறிவு இருள் சூழ்ந்த தமிழர் நெஞ்சில் மனப்புரட்சியை மலர வைக்கவும் ஆரியப்புரட்டுகளை அம்பலப்படுத்தவும் பழந்தமிழ் இலக்கிய மறுமலர்ச்சியைத் தோற்றுவிக்கவும் விடுதலைக் கனலை மூட்டவும் இதுபோன்ற வேறோர் இலக்கியம் தோன்றவில்லை. இப்புதினம் இதய எழுச்சிக்கும் இன்ப கலை உணர்வுக்கும் ஓர் அரிய விருந்தாகும். அறியாமையால் ஆரியப்படுகுழி வீழ்ந்து அல்லலுறும் மலர்புரி அரசி மருதவல்லி; அவள் அழியப்போகும் வேளை விழிப்பாய்

வீரங்காட்டி ஆரியத்தை வீழ்த்திய உத்தமன்; இழிந்தோரின் ஏமாற்றால் திசைமாற்ற வாழ்வு பெற்றோருக்கு நல்வாழ்வளிக்க அரசுடைமையும் துறந்த பாண்டியன் என ஒவ்வொரு கதை மாந்தரும் புதினப் பெட்டகத்தின் மணிகளாய்க் காட்சியளிக்கின்றனர். அழிவு தரும் ஆரியம் தமிழ் மக்களை இழிவுபடுத்தும் இயல்பு புராண இதிகாசங்களுக்குக் கருவாய் அமைந்தன. இதனை எதிர்த்துப் புதியதோர் உலகிற்கு வழிகாட்டும் நெறிகளைத் தரும் இலக்கியம் படைப்பதில் முனைவு கொண்டார் அறிஞர் அண்ணா. அம்முனைப்பின் இலக்கிய வடிவமே கலிங்கராணி" என்பார் பி. இரத்தினசபாபதி. (முன்னுரை)

இந்நாவல் 1942இல் 'திராவிட நாடு' இதழில் தொடராக எழுதப்பட்டது. பின்னர் 1974இல் நூலாயிற்று.

## ரங்கோன் ராதா

பணத்தாசையால் பெண்கள் படும்பாட்டைக் கூறும் ஒரு நாவல் இது. சோதிடப்பித்து, பூசைபோடுதல், பெண்களைப் பேய்பிடிக்கும் என்ற நம்பிக்கை, ரட்சை, தாயத்து, மந்திரித்த கயிறு, குளிகை ஆகியவை மக்களை ஆட்டிப் படைப்பது போலவே பித்தளையைப் பொன்னாக்கும் இரசவாதம் மக்களை மயக்கி வாழ்வைக் குலைப்பதையும் நரபலி இடுவதையும் காட்டுகிறார். இதனால் சமூகம் வெறும் சாக்கடைச்சேறு நிரம்பிய இடம் எனக்காட்டி அதனைத் தூய்மைப்படுத்த பகுத்தறிவே தக்க வழியாகக் காட்டுகிறார் அண்ணா என்பார் முனைவர் தா.வே. வீரசாமி.

தன்னைக் காட்டிலும் அழகும் இளமையும் கொண்ட தன் தங்கையை மணந்து வாழத் துடிக்கும் பேராசை பிடித்த கொடுமைக்காரக் கணவனைக் கொலைக் குற்றத்திலிருந்து காப்பதற்காகக் கைக்குழந்தையான தன் மகனை அவனிடம் விட்டுவிட்டு தான் இறந்து விட்டதாக நம்ப வைக்கிறாள் தங்கம். பரதேசிக் கோலத்தில் ஊர்ஊராய்த் திரிந்து ரங்கூன் வரை சென்று வழி தவறிய அவல வாழ்வின் சின்னமாக ஒரு மகளையும் பெற்றுக் கொண்டு திரும்பி வருகிறாள். அங்கே தன் மகனைக் கொண்டு அவனது நல்ல நண்பனைத் தன் மருமகனாக்கி மகளுக்குச் சீரான வாழ்க்கை அமைவதைக் காணும் ஒரு பெண்ணின் கதை இது.

சமுதாயத்தில் மலிந்து காணப்பெறும் மூடப்பழக்க வழக்கங்களால் குடும்பங்கள் குலைவுறும்; பெண்கள் துன்பநிலை அடைவர் என்ற சமுதாயச் செய்தியை எதிரொலிக்கும் கருத்தோவியமாக இந்நாவல் திகழ்வதால் கருத்தமைவு நாவல் (**Novel of Ideas**); கருத்துடன் நிகழ்ச்சி அடிப்படையிலும் நோக்க சீர்திருத்த நாவல் (**Novel of Manners**) என்ற நிலைக்கு வந்து விடுகிறது. இது இயற்கையான தன்மைக்கும் மூடப்பழக்கத்திற்கும் இடையே முரண்பாடு காட்டிப் பகுத்தறிவுக் கொள்கை கூறும் நாவலாகும் என்பார். பி. தட்சிணா மூர்த்தி. (நாவல் ஆய்வு, ப. 27).

சாதி வேற்றுமை, மூட நம்பிக்கை, பெண்ணடிமை போன்ற சமுதாய நிலைகளைச் சித்திரித்துள்ளார். கதையின் நிலைக்களம் செங்கற்பட்டு மாவட்டம் கோட்டையூர் என்ற சிற்றூர்.

கதையை ஆரம்பத்திருக்கும் விதம் மிகவும் நேர்த்தி. தொடக்கத்தில் தங்கத்தையும் அவளது மகன் நாகசுந்தரத்தையும் சந்திக்க வைக்கிறார். ஏங்கம் மகளிடம் கதையைச் சொல்லுகிறாள். ஆரம்பத்திலும் முடிவிலும் நாகசுந்தரத்தின் நண்பன் பரந்தாமன் நடந்ததைச் சொல்கிறான்.

பாத்திரங்கள் தெய்வாம்சம் பொருந்தியவைகளாக கதைக்கென்று அளவுக்கு மீறிய சிறப்போ குறைபாடோ உடையவையாக உருவாக்கப்படவில்லை. இயற்கையாக உள்ளன இவை. பாத்திரங்களுடன் ஒன்றி அனுபவிக்கும் வகையில் சிறந்த நாவலாகப் படைக்கப்பட்டுள்ளது.

## குமஸ்தாவின் பெண்

அண்ணா, இந்நாவலில் ஏழைப்பெண்ணின் காதல் கருகி, வயோதிகனுக்கு வாழ்க்கைப் பட்டு விதவையாகி, அக்கொடுமையிலிருந்து விடுதலை பெற விபசாரி ஆகி அங்கும் இன்பம் காணமுடியாமல் கொலையாளியாகும் பெண்ணின் துன்ப வாழ்வை வெளிப்படுத்தினார்.

டி.கே.எஸ். சகோதரர்களின் 'குமஸ்தாவின் பெண்'ணைப் பார்த்து அதன் போக்கு பழம் போக்காக இருப்பதை உணர்ந்த அண்ணா அக்கதையைக் கொஞ்சம் மாற்றி குமஸ்தாவின் பெண்ணுக்குப் பகுத்தறிவு பாதையைக் காட்டினார். சமுதாயத்தை எதிர்க்கும் பெண்ணாகக் காந்தாவை மாற்றுகிறார். சமூகக் கொடுமைகளைக் களைந்தெறிய முற்பட்டுத் தூக்கு மேடை ஏறவும் அவள் அஞ்சவில்லை. ஆனால் உண்மைக் காதலுக்கு உதவ முடியாதவையாக மதம், சாதி, பூர்வ கர்மபலன் ஆகியவை விளங்குவதையும் இவற்றையெல்லாம் எதிர்த்துப் பேசுபவனை நாத்திகன் என்று பழிப்பதையும் அண்ணா இந்நாவலில் வெளிப்படுத்துகிறார்.

இதற்கு இவர் 'குமஸ்தாவின் பெண் அல்லது கொலைகாரியின் குறிப்புகள்' என்ற பெயரை முதலில் 1942இல் எழுதியுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

## பார்வதி பி.ஏ.

பார்வதி பி.ஏ. எனும் இந்நாவல் இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்த காலத்தை அன்றைய அரசியல் நிலையைப் பின்னணியாக வைத்து எழுதப்பட்டது. அரசியல் நாவல்கள் தமிழில் அதிகமில்லை என்ற குறையைப் போக்கும் வகையில் அழுத்தமான அனுபவ முத்திரைகள் புதுமையான கதைப்போக்கு இவைகளால் இது சிறந்த நாவலாக விளங்குகிறது.

பார்த்திபன் ஏமாற்றுக்காரன், பார்வதி புதுமைப்பெண், பொதுப்பணியில் நல்லெண்ணமும் நாணயமும் தேவை எனக் கருதுபவள் கதை இருவரையும் சுற்றி படர்கிறது.

இது பல்வேறு வகைப்பட்ட மக்களைக் காட்டிப் படித்த பெண் எப்படி உலகில் தன்னைக் காத்துக் கொள்வாள் என்பதை வெளிப்படுத்தும். சீர்திருத்த இயக்கத்தைப் பரப்பும் பாவையாகப் பணிபுரிந்து நாட்டுத் துரோகிகளை வெளிப்படுத்தி தான் விரும்பியவனையே பதிவுத் திருமணம் செய்யும்

தன்மையில் நாவல் முடிகிறது என்பார் தா.வே. வீராசாமி (தமிழ் நாவல் இயல், ப.82). அத்துடன் கருத்தோட்டமே மிக்கிருப்பதால் நாவலுக்குரிய பிற பகுதிகள் பின்புலத்திற்குச் சென்று விடுகின்றன என்பதையும் குறிப்பிடுகிறார்.

தேவையான போது இச்சித்து சுவைத்து அனுபவித்து எச்சிலாக்கி பலியான பிறகு மட்டும் உயர்சாதித் துடுக்கைக் காட்டி ஒதுங்கி விடும் கொடுமையை இந்நாவல் கண்டிக்கும் நிலை நம்மை நெகிழவைக்கிறது. அத்தகைய பகுதிகளைப் படிக்கும்போது நம் நாடி நரம்புகளும் குருதியும் கொதிப்பேறுவதை - அறம் காக்க அவை துடிப்புறுவதை நம்மால் உணரமுடியும். அண்ணாவின் எழுத்தாற்றலுக்கு இதைவிட வேறென்ன சான்று வேண்டும்?" என்பார் மா.ரா. இளங்கோவன் (ப. 10).

பெண்கள் விழிப்பாக இருக்க வேண்டும். கொள்கை பேசுவோரின் வெளிப் பகட்டில் மயங்காது அவர்தம் செயல் கொண்டு அவரை மதிக்க வேண்டும் என்ற உணர்வை இந்நாவல் ஊட்டியது.

## குமரிக்கோட்டம்

குமரிக்கோட்டம் எனும் நாவலில் மனித வாழ்வைச் சாதி எப்படி சாய்க்கிறது என்பதைக் காட்டுகிறார் அண்ணா. கலப்பு மணம் புரிவதைப் பகுத்தறிவு ஏற்பதையும் வைதீகம் பதைபதைப்பதையும் தெளிவாகக் காட்டுகிறார். கோயிலாகக் காட்டியதை மாற்றி விடுகிறார். கோயிலின் ஆயிரங்கால் மண்டபம் சிறுவர்க்குப் பள்ளிக்கூடமாகிறது. கோயில் பிரகாரம் பாட்டாளி மக்களின் வீடுகளாகின்றது. திருக்குளம் மக்கள் குளிக்குமிடமாகிறது. குமரக்கோட்டம் குமரிக் கோட்டமாகி அன்பும் அறிவும் பரப்பும் அறிவுநிலையம் ஆகிறது.

"காலம் மாறுகிறது என்பதை அறியமறுக்கும் வைதீகர்களில் சிலருக்குத் தமது சொந்த வாழ்க்கையிலேயே நேரிடும் சில பல சம்பவங்கள் மனமாற்றத்தை ஆச்சரியகரமான விதத்திலும் வேகத்துடனும் தந்து விடுகின்றன. 'குமரிக்கோட்டம் ' இக்கருத்தை விளக்கும் ஓர் கற்பனை ஓவியம்.

"இதிலே காணப்படும் சீறும் தந்தை, வாதிடும் மகன், வசீகர மங்கை, ரோஷம் நிரம்பிய அண்ணன், இவர்களை நீங்கள் எங்கு வேண்டுமானாலும் காணலாம். பெயர்கள் குழந்தை வேலர் என்றிராது; குமரி என்று இருக்காது. ஆனால் இவ்விதமான நிலைமையில் உள்ளவர்களை நாட்டிலே காணமுடியும்" என்பார் அண்ணா.

குழந்தைவேல் செட்டியார் ஒரு வைதீகப்பழம். வேறு சாதியைச் சேர்ந்த நாகவல்லி என்ற காதல் நங்கையைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று தன் ஒரே மகன் பழனியை வீட்டை விட்டு வெளியேற்றினார். பிறகு தானே குமரி என்ற பெண்ணிடம் மையல் கொண்டதினால் அதே வைதீகத்திற்கு விடை கொடுத்தார். இதுதான் கதை. இதில் பகுத்தறிவால் வரும் சிக்கனத்தையும் வைதீகத்தால் வரும் பெருஞ்செலவையும் அண்ணா சித்திரமாகத் தீட்டியுள்ளார்.

## மக்கள் தீர்ப்பு

இது, 'பொது ஜன விரோதி' என்ற தலைப்புடன் ஜிப்சன் எனும் பேராசிரியர் தீட்டிய மூலத்தை அடிப்படையாகக் கொண்டு பின்னப்பட்ட ஒரு அரசியல் கற்பனை கதை. இத்தழுவல் நாவலைப் பரிமளம் பதிப்பகம் (காஞ்சீபுரம்) வெளியிட்டது.

"மக்கள் எத்தனை முறை தாங்களே செய்த தீர்ப்பைத் தாங்களே மாற்றிக் கொண்டனர் தெரியுமா? ஜுலியஸ் சீசர் மகாவீரன், ரோமாபுரிக்கு அவனே தக்க காவலன், என்று உன் 'பொது ஜனம்'தான் தீர்ப்பளித்தது. அதே பொது ஜனம் பின்னர் சீசர் சர்வாதிகாரி, முடிதரிக்க முயல்கிறான், குடியரசைக் குலைக்கிறான் என்று கொக்கரித்தது. சீசர் கொல்லப்பட்டான். அழுகுரலிலே அறிவையும் கலந்தான் அண்டனி. உடனே உன் 'பொது ஜனம்' என்ன செய்தது? சீசரைக் கொல்ல சதி செய்தவர்களின் இரத்தத்தைக் குடிக்காவிட்டால் ஆவேசம் அடங்காது என்று ஆர்ப்பரித்தது" எனக் கூறி "எந்த பொது ஜனம் உன்னைப் பாராட்டுகிறதோ அதே மக்கள் உன்னைப் பொதுஜன விரோதி என்று தூற்றும்படி செய்யமுடியும்" என்று அண்ணன் தம்பியிடம் கூற, டாக்டரான தம்பி மறுக்கிறான்.

அண்ணன் நகரசபையின் அங்கத்தினன், காண்ட்ராக்டர் தொழிலில் லாபமும் செல்வாக்கும். தம்பி முனிசிபல் டாக்டர். குளிக்குமிடம் திட்டம் ஒன்றை இவன் சொல்ல பாராட்டு குவிகிறது. அதிலும் லாபம் தேட அண்ணன் முயல்கிறான். தம்பிக்கு ஆதரவு பெருகியது. சுயநலவாதிகள் இதனால் லாபம் அடைந்தனர். குளிக்கும் தண்ணீர் தகுதியற்றது என்று ஆராய்ச்சியாளர் கூற தன் திட்டத்தைத் தம்பி வாபஸ் வாங்க முற்பட அண்ணனோ தன் லாபம் போவதை எண்ணி வருத்தப்பட்டான். எதிர்த்தான். டாக்டர் இது பற்றி கட்டுரை தீட்டி பத்திரிகைக்குக் கொடுக்க அண்ணன் அதைத் தடுத்து விடுகிறான். பத்திரிகை ஆசிரியர் வேலை இழந்து டாக்டர் மக்களிடம் உண்மையைச் சொல்ல முயன்று தோல்வி அடைய மக்கள் அவனைப் பொதுஜன விரோதியாக எண்ணுகின்றனர். அண்ணனின் திட்டம் வெல்கிறது. பத்திரிகையாளன் மனம் மாறி டாக்டரிடம் மன்னிப்பு கேட்க விரும்புகிறான். விழா தடைபடுகிறது. பொது மக்கள் உண்மை அறிந்தனர். மக்கள் நகராட்சி மன்றத்தைத் திருத்தி அமைத்தனர். "மக்களாட்சியை ஏமாற்றுவது இனி முடியாத காரியம் என்று தெரிந்து கொண்டார்" எனக் கதை முடிகிறது.

## பவழபஸ்பம்

இக் குறும்புதினம் 1954இல் எழுதப்பட்டது. இதனை பூம்புகார் பிரசுரம் பிரஸ் 1986இல் வெளியிட்டது.

மருதவல்லி அகவல் அம்பலவாணக் கவியின் மகள். வணிகர் நவகோடிக்கு வாழ்க்கைப் பட்டாள். அவளது மனம் தந்தையின் கருத்துப்படி ஏழைகளின் மீது இரக்கம் கொண்டு மக்கள் மன்றத்தில் ஈடுபாடு கொண்டாள்.

மக்கள் மன்றம் புத்தமதத்தின் அமைப்பு. மன்னன், நவகோடியாரை மனம் மாற்றி மனைவியைக் கண்டிக்குமாறு தூண்டினான். மருதவல்லி கணவனால் எச்சரிக்கப்படவே, கணவனிடமிருந்து 'விடுதலை' பெற்றாள். நவகோடியார் அரண்மனைப் பணிப்பெண் வெண்ணிலா அழகில் மயங்கி அடிமையானார். மருதவல்லி மடாலயத்தில் சேர்ந்து மக்கள் பணி ஆற்றிடவே, வெறுப்புற்ற அரசன் அவளைச் சிறையில் அடைக்கிறான். விசாரணைக் கூடத் தலைவன் தானப்பன் நவகோடியை ஏமாற்றிப் பணமும் வெண்ணிலாவை ஏமாற்றி இன்பமும் பெற்றான். மருதவல்லியைப் பைத்தியமென்று நாடகமாடி விடுதலை செய்கின்றனர். அவள் மீண்டும் மக்கள் சேவையும் மருத்துவ சேவையும் செய்கிறாள். பவழ பஸ்பம் கொடிய நோயைப் போக்கிட தேவைப்படுவதாக மருத்துவர் சொல்ல பவழம் இல்லாமல் பரிதவிக்கிறாள் மருதவல்லி. தானப்பனால் ஏமாற்றப்பட்டு செல்வம் குறைந்துவிட மீண்டும் மருதவல்லியிடம் வர அவளும் மடத்தை விட்டுவிட்டு புருசனிடம் போய் அடைக்கலமாகிறாள். வைதீக மதத்தினர் போற்றிப் புகழ்ந்து கோவிலில் விழா கொண்டாட விரும்புகின்றனர். கணவனிடம் பவழமாலை வாங்கி அணிந்து கொண்டு விழாவில் கலந்து கொள்கிறாள். அதோடு அப்பவழங்களைப் பஸ்பத்திற்காக அப்பாவிடம் ஒப்படைத்து விட்டு விஷம் அருந்தி இறந்து போகிறாள். இதுதான் கதை.

வைதீக மதத்திற்கும் பௌத்த மதத்திற்குமான போராட்டத்தை இந்தக் குறும்புதினம் சிறப்பாக விவரிக்கின்றது.

## சந்திரோதயம்

சாதிக்கும் வைதீகத்திற்கும் நீண்ட நாட்களாகப் பால் வார்த்து வந்த சிங்காரவேலு முதலியாரே அவற்றை ஒழிக்கும் முயற்சியில் ஈடுபட்ட வரலாறுதான் நாவல். அவரது மகள் சந்திராவின் கதையானதால் 'சந்திரோதயம்' என்ற பெயர் பெற்றது.

சாம்பசிவம் போன்ற இளைஞர்களை ஈர்த்து பகுத்தறிவுப் பணியில் ஈடுபடுத்தியவன் துரைராஜ் என்ற கொள்கையாளன். அவன் ஏற்படுத்திய அமைப்பு புத்துலகக் கழகம். அதுவே அவனுக்குப் பாசறை. அவன் விளைவைப் பற்றிக் கவனிக்காமல் கவலைப்படாமல் தனக்கும் சமுதாயத்திற்கும் நலம் பயப்பதைச் செய்து வருகிறான். பிறருடைய புறக்கணிப்பையும் வசைமொழிகளையும் பொருட்படுத்துவதில்லை. துரைராஜ் மயேந்திரர் என்று மாறுவேடம் போட்டுக் கொண்டு அனாதை விடுதிகள், பள்ளிக்கூடங்கள், படிப்பகங்களுக்குத் தம் பணத்தை அள்ளி வீசுகிறார். வேலை நிறுத்தக் காலத்தில் தொழிலாளர் குடும்பங்களுக்கு உதவுகிறார். பணத்திற்காக எதையும் செய்யத் துணிந்த வைதீக வாஞ்சிநாதரைச் சிங்கார வேலர் புரிந்து கொள்ளுமாறு செய்து 'இனி நான் வஞ்சகத்திற்கு இடம் கொடுக்க மாட்டேன் பகுத்தறிவு பரப்புவேன். ஜாதிபேதம் ஒழிப்பேன். மூடநம்பிக்கை ஒழியட்டும்; புரட்டர்களின் கொட்டம் அழியட்டும்' என்று ஆவேசப்படவைக்கிறார். வாஞ்சி நாதரைச் சிங்கார

வேலர் கொல்ல அக்குற்றத்தைத் தானே ஏற்றுக் கொண்டு, காவல் துறையிடம் சிக்காமல் நஞ்சுண்டு மாள்கிறார் துரைராஜ்.

"நமது பணி பலன் தருகிறது. நம்மை ஊரார் கவனிக்கிறார்கள். தூற்றலின் பொருள் அதுதான். தொடர்ந்து பணியாற்றினால் தூற்றுபவர்களே தொண்டாற்ற முன் வருவார்கள்" என துரைராஜ் சொல்கிறார். இதுதான் அண்ணாவின் அசைக்க முடியாத நம்பிக்கை. இது 1955இல் எழுதப்பட்டது.

## புதிய பொலிவு

இக் குறும்புதினம் 1956இல் எழுதப்பட்டது. பூம்புகார் பிரசுரம் பிரசில் 1980இல் நூல்வடிவில் முதல் பதிப்பாக வெளிவந்தது.

அந்தக் கிராமத்தில் வேலப்பனும் செல்லாயியும் காதலர்கள். அவர்களது திருமணத்துக்குச் செல்லாயியின் தந்தை சடையாண்டி ஒப்புதல் தருகிறார். அவனோ விவசாயத்தில் வென்று மணந்து கொள்ளலாம் என்று குச்சிக்கிழங்கு பயிர் செய்கிறான். விலை இறங்கிப் போனதால் பெரும் நஷ்டமாகி கிராமத்தில் வாழ முடியாத நிலை ஏற்படுகிறது. ஓவியர் வடிவேலன் மரத்தடி, மாந்தோப்பு, மணம், ஏர் உழவர் பாடல், ஏற்றப் பாட்டு, நாத்து நடும் பெண்கள், பசுமை எல்லாவற்றையும் ரசிக்கிறான். வேலப்பன் நிலத்தை விற்று நகரத்துக்குப் போய் கள்ளச்சாராயம் விற்று காசுக்காரனாகி, முத்தையன் உதவியோடு தாராசங்கம் தமயந்தியுடன் தொடர்பு வைத்துக் கொள்கிறான். செல்லாயியை மறந்துபோய், வாத்தியார் விரோதத்தால் ஓராண்டு சிறைவாசமும் பெறுகிறான். கிராமத்தை ரசித்த வடிவேலன் செல்லாயியையும் ரசித்து மணக்க விரும்ப, வேலப்பனின் நிலை அறிந்த சடையாண்டி தன் மகளை ஓவியனுக்கே மணமுடித்து வைக்கிறான். மோகம் வடிந்த பிறகு வடிவேலன் ஊர்மிளாவைக் காதலிக்கிறான். அவளோடு கிராமத்துக்குப் போய், சடையாண்டிக்குச் சங்கடத்தை உருவாக்கியதுடன் வேலப்பனைச் சந்தித்து மனைவியின் பழங்கதையை அறிகிறான். ஊர்மிளாவோ செல்லாயியைச் சோரம் போனவள் என்று குற்றம் சாட்டி விவாகரத்து பெற யோசனை கூறுகிறாள். மனம் மாறி வடிவேலன் ஊர்மிளாவை அடித்துத் துரத்திவிட்டு மனைவியை மார்புறத் தழுவிக் கொள்கிறான். அவன் தீட்டிய ஓவியம் புதிய பொலிவு பெற்றது போல் காட்சியளித்தது என்று கதை முடிவடைகிறது.

காதல் வேறு கல்யாணம் வேறு, இதுதான் உலகவிதி என்பதை இப்புதினம் விவரிக்கின்றது.

## தழும்புகள்

விஜயா பதிப்பகம் அண்ணாவின் 'தழும்புகள்' முதலான 10 குறுநாவல்களைத் தொகுப்பித்து 'தழும்புகள்' என்ற தலைப்பிலேயே நூலாக்கி 1995இல் வெளியிட்டது. புலவர் சா. மருதவாணன் இக்குறுநாவல்களைத் திராவிட நாடு, காஞ்சி ஆகிய இதழ்களில் தொகுத்ததாகக் குறிப்பிடுகிறார். இது 1965இல் எழுதப்பட்டது.

தழும்புகள், சந்திரோதயம், கடைசிக் களவு, பாவையின் பயணம், உடையார் உள்ளம், காலிழந்தான், கண்ணாயிரத்தின் உலகம், ஆடிய பாதம், ஏழை, இதயம் இரும்பானால் ஆகிய குறுநாவல்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

"காரிருள் சூழ்ந்த இந்த வேளையில் பேரறிஞர் அண்ணாவின் கதைகள் கதிரவனால் ஒளி பாய்ச்சுவதை உணர்வீர்கள். அண்ணாவின் எழுத்தோவியங்கள் குமுகாய அடித்தளத்தையே மாற்றுகின்ற குறிக்கோளுடன் எழுதப்பெற்றவை. நல்ல எழுத்துக்கள் என்பவை கற்பவர்களைத் தட்டி எழுப்புவதற்கே - மக்களை நெறிப்படுத்துவதற்கே, மறுமலர்ச்சியைத் தோற்றுவிப்பதற்கே - கேடுகளைக் களைவதற்கே, நாட்டுப்பற்றை வளர்ப்பதற்கே - நல்ல எண்ணங்களை உருவாக்குவதற்கே" என்பார் புலவர் சா. மருதவாணன்.

தழும்புகள் வீரத்தின் வெளிப்பாடு; தியாகத்தின் தடயம்; இதனை மாகாளி பலமுறை பெறுகிறார். எட்டு வயது சிறுவனாக ஓட்டலில் வேலைபார்க்கும்போது இட்லி மாவில் மல்லி விழுந்ததைப் பார்த்துச் சொன்னதற்காக விறகுக்கட்டையால் அடிபட்டு தழும்பு பெற்றான். மிராசுதார் ஒரு பெண்ணை ஏமாற்றிவிட்டு தப்பித்தபோது அபலைப் பெண்ணுக்காகப் போராடி அடியாட்களால் அடிபட்டு பெருந்தழும்புகளை அடைந்தான். நளினியை ஏமாற்றிய சோமுவை அவளோடு சேர்த்து வைக்க முயன்றபோது அவனது மாமனது ஆட்களால் அடிபட்டு ஆஸ்பத்திரியில் விழுந்து தழும்புகளைப் பெற்றான். வள்ளியின் பாசத்தைப் பெற இன்னும் தழும்பு பெறத் தயார் ஆனான். ஆனால் அவளது கணவனால் விஷம் வைத்து கொல்லப்படுகிறான். கதை "அவன் மறைந்தாலும் அவன் பெற்ற தழும்புகள் எவர் மனதையும் விட்டு மறையக் கூடாது அவை உணர்த்தும் பாடங்களும் மங்கக் கூடாது" என்று முடிகிறது. இடையில் நாடக வடிவமும் உள்ளது.

### வண்டிக்காரன் மகன்

இது ஆகஸ்ட் 1980இல் முதல் பதிப்பாக வெளிவந்தது. இதற்கு முன்னால் இது 1966இல் தொடர்கதையாக எழுதப்பட்டது.

சொக்கலிங்கம், வண்டிக்காரன் சடையனின் மகன். தன்னைப் போலத் தன் மகன் அடிமையாக இருக்கக்கூடாது என்று அவனைக் கோலாரில் அருணகிரி என்பவரிடம் வளர்க்க அனுப்ப, டேவிட் துரையின் உதவியுடன் அவன் படித்து பட்டம் பெறுகிறான். ஆப்பக்கார அன்னம்மாவின் மகள் காவேரி அவனை விரும்ப, அவனோ தந்தை விருப்பப்படி தான் வேலைபார்க்கும் ஜமீன்தார் ஜம்புலிங்க பூபதியின் வீட்டு வாத்தியார் வேலைக்குப் போய் சேருகிறான். ஜமீன்தார் அவனை மரியாதையோடு நடத்த இளைய மகள் உமா காதலிக்க, லிங்கமான சொக்கலிங்கமோ பெற்றோரோடு உரிமை கொண்டாட முடியாமல் உழல்கிறான். இறுதியில் தந்தையின் மரணத்தில் உண்மை தெரியும்போது ஜமீன்தார் அவனை வெறுக்க நார்மன் துரை அவனை வெளிநாட்டுக்கு அழைக்க, அவனோ மறுத்துவிட்டுத் தன்னைக் காதலித்த மானேஜர் மகள் கோகிலாவை மணந்து கொண்டு உடன் செல்கிறான். இதுதான் கதை.

"என் அப்பாவைச் சாகடித்தது துப்பாக்கிக் குண்டு அல்ல; என் மடமை-சமூகத்திலே கப்பிக் கொண்டுள்ள குருட்டு அறிவு. இந்த மடமையும் குருட்டுத் தனமும் ஒழிய வேண்டும்; ஒழிக்கப்பட வேண்டும். அதற்கு நான் இருக்க வேண்டிய இடம் இலண்டன் அல்ல. இங்கு என் நாட்டில்; தாய் நாட்டில். என் நாட்டு மக்களிடம் ஜாதி குலம் சமயம் செல்வம் என்பவைகளின் பேரால் இரும்புப்பிடியாக இருந்து வரும் மடமையைத் தொலைத்திட நான் பணியாற்றத் தீர்மானித்து விட்டேன்" என்பது சொக்கலிங்கத்தின் முடிவு மட்டுமல்ல; அண்ணாவின் அறிவுரையும் அதுதான்.

## திருமலை கண்ட திவ்யஜோதி

"மதுரை மன்னன் திருமலையின் மாயமரணம் பற்றிய குறிப்புகளைக் கொண்டு சித்தரிக்கப்படும் ஓவியம் இது. இட்டுக்கட்டியதோ என்று ஐயப்படுவோருக்கு எம்.எஸ். சுப்பிரமணிய ஐயர் தீட்டிய 'கன்னியர் வீரம்' என்ற சிறு நூலில் பட்டர் புதல்வி என்னும் சிறுகதையைப் பார்க்கும்படிக் கேட்டுக் கொள்கிறோம்" என்னும் குறிப்போடு கதை ஆரம்பமாகிறது.

கதை இதுதான்.

மதுரை மீனாட்சி அம்மன் கோவில் பிரதம பட்டர் சந்திரசேகரர். அவரது பெண் சுந்தரவல்லி. அவள்மீது குழந்தைப் பருவம் முதலாகவே மன்னர் திருமலை மிகவும் பிரியத்தோடு இருந்து வருகிறார். ஊரே மெச்சுகிறது. பட்டருக்கும் பெருமைதான். அவள் வளர்ந்து பருவப் பெண்ணாகிறாள். மன்னர் மனம் அவள் மீது இச்சை கொள்கிறது. ஏற்கனவே அவருக்கு அந்தப்புரத்தில் முன்னூறு அழகிகள். அவர்கள் அனைவரிலும் இவள் பேரழகி. யாருமில்லா நேரம். அவருக்கு அவள் இரையாகிறாள். அவளும் மறுக்க முடியாமல் மனைவியாகலாம் என நம்பி இணங்கிவிட்டாள். இது தொடர்கிறது. அவள் கர்ப்பமாகிட பட்டர் பதறுகிறார். உண்மை தெரிந்ததும் மன்னனைப் பழிவாங்க லிங்கண்ணாவோடு கூட்டு சேர்ந்து அரசர் கிறிஸ்துவ மதத்திற்குச் சாதகமாக இருக்கிறார் என்று நிலவரையில் இரகசியமாக நெருப்பிட்டு கொன்று விடுகிறார். மன்னர் ஜோதியில் கலந்துவிட்டாராம். என்னே பக்தியின் பெருமை என்று பக்தர்கள் மனமுருகினர்.

ஆசிரியர், பட்டர், லிங்கண்ணா, திருமலை, பக்தர்கள் என்று ஐவர் கூற்றாகக் கதையை அண்ணா அமைத்துள்ளார். நல்ல உத்தி. இதில் மதமோசடியையும், மன்னரின் காமக் களியாட்டத்தையும், மக்களின் மடமையையும், ஜாதிபேதக் கொடுமையையும் விளக்கியுள்ளார்.

## அப்போதே சொன்னேன்

'அப்போதே சொன்னேன்' என்ற குறும்புதினம் இவரது கடைசிப் புதினம். இதனைப் பூம்புகார் பதிப்பகம் 1986இல் கொண்டு வந்தது.

காவேரிக்கு மூன்று பிள்ளைகள். மூத்தவன் சாத்தப்பன்; இளையவன் தங்கப்பன்; வடிவு இரண்டு பேருக்கும் தங்கச்சி. ஒன்றாக இருந்த குடும்பம்.

நொடித்துப் போனது. சகோதரர்கள் நன்றாகப் படித்தனர். சாத்தப்பன் தருமுவைக் காதலித்தான். தாழைப்பட்டியார் அவளது தந்தை. அவரோ தங்கப்பனுக்குத் தர விரும்பினார். சாத்தப்பன் ஊரைவிட்டு ரசவாதம் ரங்கலாலோடும் அவனது தங்கையோடும் ஓடிப் போனதாக ஊர் எண்ணியது. ஒரு நாள் சாத்தப்பன் பெரிய பணக்காரனாகி மிகப் பெரிய காரில் வருகிறான். மகனைக் கண்டு மகிழ்ந்த தாய் அம்மகிழ்ச்சியிலேயே இறந்து போகிறாள். தம்பிக்கு உதவி நீதிபதி வேலை வாங்கித் தந்து தன்னை செல்வாக்கு உள்ளவனாகக் காட்டிக் கொள்கிறான் சாத்தப்பன். அவன் தங்கை வடிவுக்கு அன்பளிப்பாகக் கொடுத்த மாலை களவுப் பொருள் என்று தெரிகிறது. அது யாருமே எதிர்பார்த்திராத ஒன்று. முத்துமாலை சாத்தப்பனின் பரம்பரை சொத்து. அதனை ஒரு சாமியார் களவாடிச் சென்றான். அவனிடமிருந்து சம்பள பாக்கிக்காக, கூட வேலை பார்த்தவன் அபகரித்துக் கொண்டான். அவன் தங்கப்பனுக்கு ஒரு வழக்குக்காக லஞ்சமாகக் கொடுத்தான். அவனிடமிருந்து சாத்தப்பன் எடுத்து தங்கைக்கு அன்பளிப்பாகக் கொடுத்தான் என்று புதிர் முடிகிறது. இறுதியில் சாத்தப்பன் விடுதலை அடைகிறான். தங்கப்பன் உப நீதிபதி பதவியை ராஜினாமா செய்துவிட்டு அண்ணனோடு வியாபாரம் செய்யத் தொடங்கினான்.

இந்தக் கதையின் ஒவ்வொரு திருப்பத்திலும் அண்ணனைப் பற்றியும் தம்பியைப் பற்றியும் தங்களுக்கு எல்லாம் தெரிந்தமாதிரி 'அப்போதே சொன்னேன்' என்று ஊர் குளத்தங்கரை மாநாட்டிலே பேசிக் கொள்கின்றனர். அவர்களின் கூற்று முரண்படுவதுதான் சுவாரஸ்யம்.

## இரும்பு முள்வேலி

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்று கட்டளையிட்டான் மகாகவி பாரதி. சாத்திரமல்ல, மேனாட்டுச் சரித்திரத்தையே தமிழுக்குக் கொண்டு வந்து காட்டியவர் அண்ணா. எல்லா நாட்டுச் சரித்திரங்களையும் அதனைத் தழுவிய சுவையான - உருக்கமான சம்பவங்களையும் தமிழ் மக்கள் அறிய வேண்டுமென்ற ஆவலின் காரணமாக அண்ணா தீட்டிய ஓவியங்கள் கொஞ்சமல்ல. மேனாட்டு வரலாற்றைக் கதை வடிவில் சொல்வதென்பது சாதாரண விஷயமல்ல. அது ஒரு கலை. அந்தக் கலையில் வல்ல டாக்டர் அண்ணா அவர்கள் படைத்தவற்றில் 'இரும்புமுள்வேலி' என்னும் தலைப்பிலுள்ள அழகோவியம் தனிச்சிறப்புமிக்கதாகும்.

இனம் கடந்த, மொழி கடந்த, மதம் கடந்த, ஏன் எல்லாமே கடந்த ஒன்று உலகில் இருக்கிறதென்றால் அது காதலாகத் தான் இருக்க முடியும். வேறு எதற்குமே அந்தச் சக்தி கிடையாது. அப்படிப்பட்ட ஒரு புனிதமானதொரு ஈர்ப்புச் சக்தி படும் உயிர்வதையை இருவேறு இனத்தைச் சார்ந்த ஆண் பெண் இடையே கல்லும் கரையும் வண்ணம் சுவையான கதையாக்கிக் காண்பித்துள்ளார் (பதிப்புரை). இது பூம்புகார் பிரசுர பிரஸ் வெளியீடாக 1980இல் வந்தது. ஆனால் ஏற்கனவே காஞ்சி இதழில் தொடராக வெளிவந்தது.

"தமக்குரிய இடத்தில் பிறர் நுழையாது தடுத்திட முள்வேலி [illegible]றார்கள். இது இடத்[illegible] போட[illegible] முள்வேலியைப் பற்றிய

கதையல்ல. இது இதயத்திற்குப் போடப்பட்டுவிடும் முள்வேலி பற்றியது" என்பார் அண்ணா.

ஜெர்மனிக்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கும் ஏற்பட்டிருந்த கொடும்பகை உணர்ச்சிக்கும் இதயத்தின் அடியிலே மறைந்திருக்கும் அன்பு உணர்ச்சிக்கும் இடையே நடைபெறும் போர் பற்றிய கதை; எனினும் ஆங்க்கார் - மோனா காதல் கதை, அவர்கள் கடலில் விழுந்து கரைந்தனர் என்று கதை முடியும். உண்மையான காதல் இப்படித்தான் முடியும்.

## வெள்ளை மாளிகையில்

அண்ணா 'காஞ்சி' இதழில் தொடர்ச்சியாக எழுதி வந்த கற்பனை ஓவியம்தான் இந்த நூல். இதனைப் பரதன் பதிப்பகம் 1970இல் வெளியிட்டது.

வெள்ளைமாளிகை அமெரிக்க நாட்டு ஜனாதிபதியின் மாளிகை இதுவரையில் அந்த வெள்ளை மாளிகை, கருப்பு இனத்தவரான நீக்ரோவரை, தன்னுள் அது டக்ளஸ் டில்மனைத் தலைவராக ஏற்றுக் கொள்ளவில்லை. அண்ணா அவர்களது கற்பனை கண்ணில் ஒரு நீக்ரோவர் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுவிடுகிறார். எவ்வளவு உயர்ந்த பதவியில் இருந்தாலும், கருப்பர் இனம், அதற்கு இழைக்கப்படும் கொடுமைகளிலிருந்து தப்ப முடியவில்லை என்பதை அந்தப் பதவி நமக்கு எடுத்துக் காட்டுகிறது நிகழ்ச்சிகள் கற்பனையேயானாலும் இன்றைய வரையில் நிலைமைகள் அப்படியேதான் இருக்கின்றன என்பதை அறிய முடியும். கருப்பு இனத்தவரைப் பற்றி அண்ணா பல்வேறு நூல்களிலிருந்து செய்திகளைத் திரட்டியுள்ளார். ஆங்கில எழுத்தாளர் இர்விங் வாலஸின் 'மனிதன்' என்ற நூல்தான் இந்நூல் எழுத தூண்டுதலாக அமைந்தது என்பார், அண்ணா.

"உரிமை சமத்துவம் கேட்டுக் கேட்டு அலுத்துப் போய்விட்டது. வெள்ளையர் நாட்டிலே கருப்பருக்கு உரிமையும் சமத்துவமும் கிடைத்திடாது. ஓநாய்களுக்கு மத்தியில் ஆடுகள் நிம்மதியாக வாழ்ந்திட முடியாது"

"சுடு! இல்லையானால் சுடப்படுவாய். கொல்லு. இல்லையானால் கொல்லப்படுவாய். கொளுத்து இல்லையானால் கொளுத்தப்பட்டுவிடுவாய். வெட்டு இல்லையானால் வெட்டப்பட்டுவிடுவாய். தட்டு. திறக்க மாட்டார்கள்! *உடை! தன்னாலே வழி திறந்து காணப்படும்! கேள்வி தொடுக்க மாட்டார்கள்!* பறித்துக் கொள். தடுத்திட இயலாது!! இந்த விதமான பலாத்காரம் வெடித்துக் கிளம்பிற்று" என்று அண்ணா எழுதினார்.

ஆபிரகாம் லிங்கனை எந்த இனவெறி கொன்றதோ அதே இனவெறி டில்மனையும் கொல்லச் சதிசெய்தது. அதற்கு ஒரு நீக்ரோ அழகி அமர்த்தப் படுகிறாள். *இதிலே அனைத்தையும் ஆட்டிப்படைப்பது காதல் உணர்வுதான்.* ஆனால் அதையும் நிறவெறி விஞ்சிவிடுகிறது என்பதுதான் கதை.

தமிழ்ப் புதின உலகில் கேட்கும் குரல்களில் தனித்துவம் வாய்ந்த குரலாக ஒலித்துக் கொண்டிருப்பது அண்ணாவின் குரல் என்பார் சி. பாலசுப்பிரமணியம் (இலக்கிய இன்னமுது, ப. 136).

நாவல் வரலாற்றில் அறிஞர் அண்ணாவுக்கும் சிறப்பான இடம் உண்டு. அரசியல் தலைவராகவும் மேடைப்பேச்சாளராகவும் அவருக்குக் கிடைத்தப் புகழ் பேரொளியில் படைப்பாற்றல் மிக்க எழுத்தாளர் அவர் என்னும் உண்மை அதிக வெளிச்சம் தராத விளக்கொளி போல் அடங்கிப் போய் நின்றது எனலாம்" என்றார் மு. இளமாறன். (நாவல் வளர்ச்சி, ப. 111).

அண்ணா தம்முடைய இயக்கக் கொள்கைகளை மக்களிடையே பரப்ப உயிரோட்டமான கதைப் பாத்திரங்களைப் படைத்தார். அண்ணாவின் கதை மாந்தர்களான பார்வதியும் (பார்வதி பி.ஏ.) வீரமணியும் (கலிங்க ராணி), பகுத்தறிவுக் கருத்துக்களைப் பரப்பப் பயன்படுத்தப் பட்டுள்ளனர். 'குமாஸ்தாவின் பெண்' என்ற நாவலில் பெண்ணுரிமையை வலியுறுத்துகிறார். பொருந்தாமணத்தைக் கண்டித்தும் விதவை மணத்தை ஆதரித்தும் இப்புதினம் விரிகிறது. இவரது 'காதல் ஜோதி' பகுத்தறிவிற்கு வித்திட்டு பார்ப்பனியத்தைச் சாடுகிறது. 'கலிங்கராணி' சமுதாய விழிப்புணர்ச்சி ஊட்டியது. பணக்காரக் கொடுமையையும் மூடநம்பிக்கையையும் சாடுகிறது 'ரங்கோன் ராதா'.

இந்நாவல் மூலம் "இன்றைய ரியலிச படைப்பாளர்களுக்கு அண்ணாவே வழிகாட்டியாவார்' என்பார் மா.ரா. இளங்கோவன் (இலக்கிய உலகில் அண்ணா, ப. 8). இது தொடர்கதையாக வந்தபோது அரசியல் பணிகளால் திடீரென முடிக்கப்பட்டது. நூல் வடிவம் தரும்போது இறுதியில் இரு இயல்களை எழுதிச் சேர்த்துள்ளார்" (அ.அ.த., ப. 15).

"இலக்கிய ஏடுகள் மக்களின் மார்க்கெட்டிலே மலிந்து நடமாட வேண்டுமானால், இலக்கியம் கோபுர உச்சியிலிருந்து குப்பைமேட்டுக்கு வரத் தயாராய் இருக்க வேண்டும். கற்றோரும் மற்றோரும் பண்டிதரும் பாமரரும் பணக்காரனும் ஏழையும் படித்துணரும் பாங்கிலே எளிய நடையிலே இயற்கைக் கருத்தைக் கவின்பெற எடுத்துரைக்கும் ஏடுகள் எழுதப்பட வேண்டும்," என்பது அண்ணாவின் ஆசை. (நாடும் ஏடும், ப. 12).

இவர் கல்லூரியில் படிக்கும்போதே கதை படிக்கும் ஆர்வம் வளர்ந்தது. அடையாறு மருத்துவமனையில் இருக்கும்போதும் (1969) 'புரட்சித்துறவி' நாவலையே படித்துக் கொண்டிருந்தார். தன் கட்டுரைகளிலும் மேடைப் பேச்சிலும் தான் படித்த, தனக்குப் பிடித்த கதைகளையும் சேர்த்துக் கொள்வதுண்டு. சிறையிலும் சில கதைகளை எழுதியதுண்டு.

---

# 5

# நாடகங்கள்

"சங்கரதாஸ் சுவாமிகள், பம்மல் சம்பந்த முதலியார், சதாவதானம் கிருஷ்ணசாமிப் பாவலர் ஆகியோர் போன்று அண்ணாவும் தமிழ்நாடக உலகில் ஒரு புதிய சகாப்தத்தை உண்டாக்கினார் என்றால் அது மிகையாகாது. இவர் சிந்தனையைத் தூண்டும் தம் சீரிய நாடகங்களால் தமிழ் நாடக மேடையில் ஒரு புத்துணர்ச்சியையும் ஒரு புதிய திருப்பத்தையும் உண்டு பண்ணியிருக்கிறார்" என்பார் நாரணதுரைக் கண்ணன் (தமிழில் நாடகம், ப. 122).

"தமிழ் நாடகத்துக்கு இவருடைய நாடகங்கள் புதிய வேகத்தையும் துரித எழுச்சியையும் ஊட்டின. தூங்கிக் கிடந்த தமிழுணர்ச்சி துள்ளி எழுந்தது. பதுங்கி இருந்த பகுத்தறிவு பாய்ந்து பெருகியது. அடங்கி இருந்த அகத்துணர்வு ஆறாகப் பாய்ந்து", என்பார் முனைவர் ஏ.என். பெருமாள் (இருபதாம் நூற்றாண்டில் தமிழ் நாடகம், ப. 570).

நாடகங்கள் புராணப் படைப்புகளாக - பக்தி ரசம் சொட்டும் வகையில் இருக்க வேண்டும்; ஆண்டவனைப் பற்றியதாகவோ இல்லையேல் குறைந்தபட்சம் ஒரு அரசனைப் பற்றியதாகவோ இருக்க வேண்டும் என்று கருதப்பட்ட காலக் கட்டத்தை மாற்றியமைத்தவர் அண்ணா. இவரது நாடகங்கள் பகுத்றிவின் பகைவர்களுக்குப் பலத்த அடியாயிற்று.; மடமையில் ஆழ்த்தும் பழமையாளர்களுக்கு மரண அடியாயிற்று.

வேலைக்காரி, ஓர் இரவு, சந்திரோதயம், சிவாஜி கண்ட இந்து ராஜ்யம், நீதி தேவன் மயக்கம் போன்றவை தமிழ் நாடகத் துறையில் மறுமலர்ச்சியையும் மக்கள் மனத்தில் புதிய எழுச்சியையும் கருத்துப் புரட்சியையும் உண்டாக்கின. சமுதாயத்தின் அடித்தளத்தை உற்று நோக்கச் செய்பவை அண்ணா படைத்த பாத்திரங்கள்.

பெரும்பாலும் மக்களின் கருத்தை ஒட்டியே நாடகங்கள் எழுதப்பட்டு வந்தன. அந்த முறையை மாற்றி மக்களைத் திருத்துவதற்கு நாடகங்கள் பயன்படுமாறு செய்த பெருமை அண்ணாவைச் சேர்ந்ததாகும். சமுதாயத்தைச் சித்தரித்துக் காட்டுவதுடன் அதை மாற்றவும் முயன்றார். கற்பனை மிகுந்த கதைபோக்கும் தேனொழுகும் நடையில் எழுதும் கருத்துள்ள வசனங்களும் பாத்திரங்களின் தன்மை மாறாது, மனப்பண்புகளைச் சித்தரிக்கும் முறையும் [illegible]ரியவை என்பார் நடிப்பிசைப் புலவர் கே.ஆர். ராமசாமி.

அண்ணாவை நாடகாசிரியராகவே தமிழ் இலக்கிய உலகம் ஏற்றுக் கொண்டுள்ளது. இவர் முதன்முதலில் குடியரசு இதழில் 'காங்கிரசு வாலா' 1936 மாடலும், 1938 மாடலும் என்னும் ஓரங்க நாடகத்தை எழுதினார். இது ஓர் அரசியல் அங்கத நாடகம். இதில் காங்கிரஸ்காரர்கள் பதவிக்கு வருமுன் மக்கள் மன்றத்தில் பேசிய பேச்சும், பதவிக்கு வந்தபின் பேசிய பேச்சும் போக்கும் மாறிவிட்டதை விவரிக்கும். வீடு, சொற்பொழிவு மேடை, சட்டமன்றம், தாளிகை உலகம் எனும் நான்கு இடங்களை நிகழ் இடங்களாக்கிப் புனைந்துள்ளார்.

'காமிராவுக்குத் தப்பிய காட்சிகள்'
'ஊரார் உரையாடல்'
'ஏர்முனை'
'கிராமத்தில் இன்று'

போன்றவையும் ஓரங்க நாடகங்களாகும். இவ்வாறு 40க்கும் மேற்பட்டவை உள்ளன.

இவரது பெருநாடகங்கள் எட்டு. அவை:

1. சந்திரோதயம் (1943)
2. சிவாஜி கண்ட இந்து சாம்ராஜ்யம் அல்லது சந்திரமோகன்' (1945)
3. வேலைக்காரி (1947)
4. ஓர் இரவு (1948)
5. நல்ல தம்பி (1948)
6. காதல் ஜோதி (1953)
7. சொர்க்கவாசல் (1955)
8. பாவையின் பயணம் (1959)

என்பவையாகும். நுட்பமான காட்சித் திறனும் அவற்றுள் எடுத்துச் சொல்லும் இனிய எளிய அழகும் பழகு தமிழும், ஈடற்ற பீடுநடையும், மாந்தர் பண்பினை எடுத்துக் காட்டும் கலையுணர்வும் ஆழ்ந்த எண்ணங்களின் வண்ணமும் இவரது படைப்பாற்றலை உயர்த்தியுள்ளன.

பெரியாரின் சிந்தனைகளுக்கெல்லாம் இலக்கிய வடிவம் கொடுத்ததோடு கலைவழியாகவும் தன்மான இயக்கக் கருத்துக்களை எடுத்து உரைத்து வந்தார். 'சந்திரோதயம்' நாடக நாயகன் தன்மான இயக்கத்தவன். அண்ணாவும் நாடகங்களில் நடித்து தன்மான இயக்கக் கொள்கைகளைப் பரப்பினார். வேலைக்காரி, நல்லதம்பி மூலமும் இப்பணியைத் தொடர்ந்தார். இவரது பெரும்பாலான கதைகளும் நாடகங்களும் பெரியாருடன் இருந்தபோது எழுதியவைதான்.

கருத்துப் பரப்பும் கலைக் கருவிகளில் நாடகத்தினை அண்ணா தலை சிறந்ததாகக் கொண்டார். அவர் எழுதிய நாடகத் தமிழ் உரைநடை நாடகக் கலைக்கே புத்துயிர் அளித்தது.

ஏறத்தாழ 1945 ஆம் ஆண்டிலிருந்தே திராவிட இயக்க நாடகங்கள் புகழ்பெறத் தொடங்கின. நாடகக் கலைஞர்களுடைய பார்வை திசை திரும்பி

திராவிடக் கழக நாடகங்கள் மீது பதியத் தொடங்கியது. புகழ் மிக்க நாடகக் கலைஞர்கள் திராவிட இயக்க நாடகங்களில் நடிக்கத் தொடங்கினர். கதர் ஆடையை அணிந்து கிருஷ்ணசாமிப் பாவலரின் நாடகங்களை உணர்ச்சியுடன் நடித்துவந்த கலைஞர்கள் அண்ணாவின் நாடகங்களில் நடித்துத் திராவிடக் கழகக் கொள்கையின் பிரச்சார எந்திரங்களாக மாறினர். இறைப்பற்றுடன் புராண நாடகங்களை உணர்ச்சித் ததும்ப நடித்த நடிகர்கள் அவற்றை ஒதுக்கித் தள்ளிவிட்டுப் பகுத்தறிவு விளக்க நாடகங்களை நடிக்க முன் வந்தனர். நாடக அரங்கம் திராவிடக் கழகக் கொள்கைகளைச் சுவையுடன் விளக்கி எளிதாகப் பரப்பும் இனிய சாதனமாக மாறியது.

அண்ணா, கொள்கைகளை அழுத்தமாகப் பரப்பும் பல நாடகங்களைச் சொல்லழகு சிறக்க எழுதினார். எள்ளலும் கிண்டலும் நாடகங்களில் எக்காளம் ஊதின. கொள்கை கருத்துக்கள் திரண்டன

விதி, மேல் உலக வாழ்வு, குலத்துக்கோர் நீதி என்பவற்றை நாடகமேடை மூலம் தந்தனர். இந்தக் கருத்துகள் இன்று தேவையற்றன. தீமை பயப்பன, நீதியற்றன, நேர்மையற்றன, சமுதாயப் பொது நலனுக்கு ஊறு தருவன எனக் கண்டறிந்து, புதிய எண்ணங்களைப் புது உலகுக்குத் தேவையான எண்ணங்களைக் கொண்ட கருத்துக்களை நாடக மேடைகள் தரவேண்டும் என்று கூறினர்; குறிப்பிடத்தக்க வெற்றியும் பெற்றனர்" என்பார் அண்ணா. (நாடகத்தில் மறுமலர்ச்சி, வானொலி பேச்சு).

"எலும்பு பெண்ணுருவிலான அருட்கதைகளைப் பற்றிப் பாடியும் ஆடியும் நம் பெண் மக்கள் எலும்புருவானது தவிரப் பலன் ஏதும் இல்லை. இனிப் பெண்கள் எலும்புருவாகும் பரிதாப வாழ்வைச் சித்தரிக்கும் நாடகங்களை நடத்துங்கள். கண்ணைப் பெயர்த்தெடுத்து அப்பிய கண்ணப்பர் கதையை ஆடியது போதும். இனிக் கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்பவன், ஊரிலே கொள்ளையடிக்கும் விஷயத்தை விளக்கும் நாடகத்தை நடத்திக் காட்டுங்கள். ஏழையின் கண்ணீர், விதவையின் துரோகம், மதத் தரகரின் ஏய்ப்பு ஆகியவற்றை விளக்கும் அறிவு வளர்ச்சி நாடகங்களை நடத்துங்கள்" என்பார் அண்ணா.

"நாடகம் என்பது நள்ளிரவுச் சத்தமல்ல - நடையாலும் விழியாலும் மொழியாலும் அரைத்தூக்கத்தில் இருப்பவர்களுக்கு ஆனந்தம் தர முயற்சிக்கும் வெறும் ஆடல் பாடல் அல்ல. நாடகம் இன்று நாட்டுக்கு ஒரு நல்லாசானாக முன் வந்திருக்கிறது. துணிவுடன் நாட்டு நலிவு நீங்கி, நல்வழி கண்டு, நல்வாழ்வு வாழச் செய்யும் எளியதும் நம்பகமான பலனளிப்பதுமான சாதனம் இந்த நாடகக் கலைதான் என்பது உலகம் கண்ட மெய்மை" என்பது அண்ணா அறிந்த உண்மை. அதற்கான முயற்சிகளிலும் ஈடுபட்டார்

## சந்திரோதயம்

1943இல் பாவேந்தர் பாரதிதாசன் தலைமையில் சந்திரோதயம் நாடகம் அரங்கேற்றப்பட்டது. இது தமிழ் நாடக வரலாற்றில் கொள்கை பரப்புக் கருவிகளில் நாடகம் தன்னிகரற்றது எனும் உண்மையை உணர்த்தியது.

"இது கதை அமைப்பால் கருத்தூட்டும் திறத்தால், நடிப்பால் ஒரு திருப்பு மையமாக அமைகிறது" என்றார் தி.க. சண்முகம்.

இதுதான் அண்ணா எழுதிய முதல் நாடகம் என்பர் இது புதுமை விரும்பிகளுக்கு ஏற்ற விருந்தாகும்; பழமை விரும்பிகளுக்குத் தக்க மருந்தாகும். இதனால் வைதீகப் பிரிவினரின் அஸ்திவாரம் ஆட்டம் கண்டது.

சந்திர சேகர அய்யரின் மகள் டாக்டர் அருணா தங்கவேலுவையும் தாண்டவராயன் என்னும் ஏழையின் மகள் பொன்னி பொன்னனையும் மணந்து கொள்கின்றனர். இருவரும் விதவையர். இவர்கள் மறுமணம் அதிலும் கலப்பு மணம் புரிந்து கொள்வது குறிப்பிடத்தக்கது.

இந்நாடகத்தில் தீண்டாமை ஒழிப்பு, பார்ப்பனியத்தின் சூழ்ச்சி, மேட்டுக் குடியினரின் அக்கரையற்ற போக்கு, மடாதிபதிகளின் போலி வேடம் ஆகிய கருத்துக்கள் உள்ளன. இதில் சிங்காரவேலன் குடும்பக்கதை, வாஞ்சி நாத சாஸ்திரி குடும்பக்கதை, சைவ வைணவ எதிர்ப்பு வர்க்கம், கந்தபூபதி, முருகதாசன் வழி மடாதிபதியின் கதை, பரம தயாளு கதை, பஞ்சபாண்டவர் கேலி, கடவுளின் மனைவிமார்கள் கேலி எனப் பல்வேறு கதைக்கூறுகள் உள்ளன. இதில் 'புத்துலகக் கழகம்' என்பது திக., தி.மு.க. வின் குறியீடாகும்.

குலப்பெருமை, குடும்ப கௌரவம் இவைகளைக் காட்டி காதலை அழிக்க முடியாது; காதல் ஜோதியின் முன்னே இவை கருகிவிடும் என்பதை வலியுறுத்துகிறார். இது அறியாமையையும் வைதீகத்தையும் அழிக்கும் அற்புத நாடகம். பூவாளூர் அ. பொன்னம்பலனார், "தமிழர் ஆட்சியும் தமிழர் வீரமும் தமிழர் ஒன்றுபட்டால் எதையும் செய்யும் வல்லார் என்பதையும் தெளிவாகக் காட்டுவது" என்பார் (திராவிடநாடு, ஜுன் 5, 1943).

## சந்திரமோகன் அல்லது சிவாஜிகண்ட இந்து சாம்ராஜ்யம்

'சந்திரமோகன்' நாடகம் முதலில் 'மகுடாபிஷேகம்' என்ற பெயரில் திராவிடநாடு ஏட்டில் (14-1-1955) கதை வடிவில் அண்ணாவால் எழுதப்பட்டது. மராட்டிய மாநில சிவாஜி குடியானவர் வகுப்பில் பிறந்தவர். இவர் கல்யாண், புரந்தர் முதலிய கோட்டைகளை வென்று வாகை சூடி இறுதியில் இந்து மதத்தைக் காக்க இந்து சாம்ராஜ்யம் அமைக்க கங்குப் பட்டர் என்ற ஆரியரை அணுகுகிறார். அப்போது பிராமணர்கள் வேதச் சடங்கு என்ற முறையில் எதிர்ப்பு தெரிவிக்கின்றனர். இது ஓர் அரிய வரலாற்று ஓவியம்.

நால்வகைப்பட்ட வருணாசிரமத்தின் நிலைக்களன் வேதம், சாஸ்திரம், சடங்கு என்பன. அவை அழியாத வரையில் அரசியல் அதிகாரத்திற்காகப் போரிடும் பிற்படுத்தப்பட்ட சாதியினர் எவரும் அரசதிகாரத்தில் நிலைபெற முடியாது. அத்தகைய வேத சாஸ்திர சடங்குகளின் உயர்வு குறித்து மக்களின் பொதுப் புத்தியை மாற்றியமைத்தலே உடனடி செயல்பாடாக இருக்க முடியும் என்றும் அன்றைய திராவிடர் கழகக் கருத்தியல் நிலைப்பாட்டை இந்நாடகம் வெளிப்படுத்தியது.

வீர உணர்ச்சியை இலக்கியச் சுவையுடன் அண்ணா எழுதியுள்ளார் நகைச்சுவைப் பகுதிகள், நாடக ஆக்கம், பாத்திரப் படைப்பு எல்லாம் சிறப்புடன் அமைந்துள்ளன.

சந்திரமோகன், சிவாஜியிடம் "மராட்டிய மண்டலத்தைக் கமண்டல நீர் தெளித்து அவர்கள் உண்டாக்கவில்லை. மராட்டியரின் ரத்தத்தைச் சிந்தி இந்த மண்டலத்தைப் பெற்றோம். யாகக் குண்டலத்தின் விளைவல்ல மராட்டியம். தியாகத்திலே தோன்றிய தேசம்", என்றான். மன்னன் பதில் சொல்லவில்லை

"ஆயிரக்கணக்கான சந்திரமோகன்களை நீ ஊருக்கு ஊர் சென்று உருவாக்கி வா. அதுவரையில் இந்த வேதியர் சொற்படி நடந்து நான் ஆட்சியில் ஒட்டிக் கொண்டிருக்கிறேன். பதவிக்காக அல்ல; நம்மவர்கள் மனத்தளவில் திருந்தி சிந்திக்கத் தொடங்குவதற்காக" என்கிறார் மன்னன். இந்நாடகம் ஊர்தோறும் தன் சமுதாயப் பணியை ஆற்றி வந்தது.

## வேலைக்காரி

இது 1944ஆம் ஆண்டு ஜுன் மாதம் 21ஆம் தேதி அரங்கேற்றப்பட்டது. இந்நாடகம் கே.ஆர். இராமசாமியால் தொடர்ந்து நூற்றுக்கணக்கான நாட்கள் நாடகமாக நடத்தப்பட்டது. பழம்பண்டிதர்களும் வைதீக எழுத்தாளர்களும் கூட இதோ ஓர் இப்சன், பெர்னார்ட்ஷா என்று அண்ணாவைப் போற்றினர்.

இதில் 54 காட்சிகள் உள்ளன. இது அங்கங்கள் அற்ற தொடர் காட்சி முறையைக் கொண்டது. நேரடி அரசியல் பிரச்சாரத்திலிருந்து மாறுபட்ட நாடகம் இது.

"வேலைக்காரி" என்ற தலைப்பும் வர்க்கப் படிநிலையை நோக்கியே இடப்பட்டுள்ளது. படித்த பெண்கள் பெண்ணுரிமை பேசும் பெண் தண்டிக்கப்படுவதும் அறிவில் குறைந்த ஆண்களை நம்பியிருக்கும் பெண் காப்பாற்றப்படுவதும் பாரதியின் ஆணாதிக்கத் தன்மையை உறுதிப்படுத்துகிறது என்பார் கிராமியன். (ஆய்வேடு)

சாதாரணமாக வேலைக்காரியை உணர்வும் உள்ளமும் பொருந்திய ஜீவனாகப் பல மேட்டுக்குடியினர் நினைப்பதேயில்லை. வீடு பெருக்கும் துடைப்பத்தை போல, உண்டுவிட்டு எறியும் உண்கலம்போல, எச்சில் இலைபோல நினைத்து வந்த காலத்தில் 'வேலைக்காரி'க்கு ஒரு இலக்கிய அந்தஸ்து கொடுத்ததோடு, அந்த இனத்திற்கே ஓர் உயர்வைத் தேடித் தந்தார் அண்ணா.

"ஏழையின் மனம் ஓர் எரிமலை"

இது ஆனந்தனின் கூற்று.

"பூ விற்றால் பூக்காரி, பிச்சை எடுத்தால் பிச்சைக்காரி, சிங்காரித்துக் கொண்டல் சிங்காரி. நீ வேலை செய்கிறாய் அதனால் வேலைக்காரி" என்பான் பரமானந்தம்.

இதில் வேலை செய்வதைப் பொறுத்து ஒருத்திக்கோ ஒருவனுக்கோ பெயர் வருகிறது. எனவே இதில் மானக்கேடு எதுவுமில்லை என்ற கருத்து புலப்படுகிறது.

இதில் வக்கீலாக நடிக்கும் கே.ஆர் ராமசாமி, தன் கட்சியை வழக்கு மன்றத்தில் அடுக்கடுக்காக நீண்ட நேரமாக விவாதிக்கிறார். நாடகப் பாணியில் வசனத்தைச்சொற்பொழிவாக்குவதைக் 'கோர்ட்' அனுமதிக்காது. இது அண்ணாவுக்குத் தெரியும். எனினும் நாடக அமைப்புக்கு அது தேவை. விமர்சகர்கள் அதைக் குறைகூறக் கூடும் என்று எதிர்பார்க்கிறார். எனவே எதிர்தரப்பு வக்கீலைக் குறுக்கிட வைத்து ஆட்சேபிக்கிறார். இதுதான் அண்ணாவின் பாணி. பிரச்சாரத்தையும் இலக்கியத்தையும் எப்படிப் பக்குவம் கெடாமல் இணைப்பது என்பது இவருக்குத் தெரியும்.

காளிகோயில் வழிபாட்டு மறுப்பால் மத எதிர்ப்புப் பிரச்சாரமும் மடாதிபதி ஹரிஹரதாஸ் பாலியல் உறவு நடத்தைகளால் மதக்கேலியும் அண்ணாவால் செய்யப்பட்டுள்ளது. இந்நாடகம் பார்ப்பன எதிர்ப்பு மற்றும் நாத்திக வாதம் ஆகியவற்றிலிருந்து விலகியுள்ளது. வடவர் எதிர்ப்பை வலியுறுத்துகிறது.

"வேஷமணியாத வேதாந்தி, மோடி செய்யாத மாது, ஜோடியில்லாத மாடப் புறா, சேடி இல்லாத ராஜகுமாரி இருக்க முடியாதாம்"

"ஊரை ஏமாற்றி பணத்தை மிச்சப்படுத்தி என்னய்யா சுகத்தைக் கண்டீர்? தங்கத்தினாலே அரிசி செய்து சமைத்து, கோமேதகக் கூட்டும், வைர வறுவலும், முத்துப் பச்சடியும், மோர்க் குழம்பிலே கெம்புமா கலந்து சாப்பிட்டு வந்தீர்" என்பது போன்ற நயமான உரையாடல்கள் இந்நாடகத்தில் உள்ளன.

## ஓர் இரவு

ஓர் இரவு 1948ஆம் ஆண்டில் எழுதப்பட்ட நாடகம். இதனை அவர் ஒரே இரவுக்குள் எழுதி முடித்தார் என்பதும் இந்நாடக அமைப்பில் ஓர் இரவில் நடக்கும் நிகழ்ச்சிகளின் தொகுப்பாக இருப்பதும் குறிப்பிடத்தக்கது.,

இதில் 49 காட்சிகள் உள்ளன. கதை நடக்கும் காலஅளவாகிய 3 மணிநேர நிகழ்ச்சியைக் கொண்டது. இது ஒரு குடும்பத்தின் கதை. கருணாகரத்தேவர், அவரது மகள் சுசிலா, மகளின் காதலன் டாக்டர் சேகர், தேவரின் முதல் மனைவி சொர்ணம், அவள் மகள் ரத்தினம், எதிரியான மைத்துனன் ஜெகவீரன் எனப் பல்வேறு பாத்திரங்கள்.

"பொருளாளி திருடர்களை விளைவிக்கிறான்" என்ற புரட்சிக் கவிஞரின் பாடலை இதில் எடுத்துக் காட்டியுள்ளார். செல்வர்களில் பலர் தனது காம இச்சைகளைத் தீர்த்துக் கொள்வதற்கு ஆசைமொழி கூறி, இளமை மாறாத அபலைகளைத் தன்நிலை தடுமாறச் செய்து பின் நன்றி கெட்ட முறையில் தங்கள் அந்தஸ்து கெட்டுவிடும் எனப் பயந்து நடுத்தெருவில் விடும் காரணத்தால் ஆதரவற்ற நிலையில் அவர்கட்குப் பிறக்கும் குழந்தைகள் சமூகத்தில் ஒதுக்கப்பட்டு வாழத் தகாதவர்களாகத் தூற்றப்படுகின்ற நேரத்தில் வாழ வேறு வழியின்றி இம்மாதிரி திருட்டுத் தொழிலில் இறங்குகின்றனர். ஆனாலும் அவர்களும் மனித உள்ளம் கொண்டவர்கள்; சமயம் நேர்ந்தால் நல்லவர்களாக மாறுவார்கள்.

"சந்திரன் எனும் மணாளன், அல்லிப் பூவாகிய தன் மனையாளுடன் விளையாட ஆரம்பிக்கிறான். சந்திரன் உதித்ததும் அல்லி மலருகிறதல்லவா காதல் விளையாட்டுத்தானே அது அல்லியும் சந்திரனும் இப்படிச் சரசமாடுவதைக் கண்டதும் பத்மாவுக்கு வெட்கம்; கண்களை மூடிக் கொள்கிறாள்".

"நிலாதான்டி, ஏழை பணக்காரன் என்கிற வித்தியாசம் பார்க்காமல் இருக்குது" இப்படி வசனங்கள் அழகும் ஆற்றலும் கொண்டு விளங்குகின்றன

இந்த நாடகத்தைப் பார்த்தபிறகுதான் பேராசிரியர் கல்கி. 'அண்ணா ஒரு தென்னாட்டு பெர்னாட்ஷா' என்று பாராட்டினார்.

"இரண்டு வாரத்திற்கு முன்பு திருச்சியில் 'ஓர் இரவு' என்னும் நாடகத்தைப் பார்த்தேன். பார்த்ததின் பயனாக "இதோ ஓர் பெர்னாட்ஷா தமிழ்நாட்டில் இருக்கிறார். இப்சனும் இருக்கிறார்; இன்னும் கால்ஸ்வொர்த்தியும் கூட இருக்கிறார் என்று தோன்றியது. நாடகக் கதையும், கதையை நாடகமாக அமைத்திருந்த பாணியும் கட்டுக்கோப்பும் காட்சிகளின் அமைப்பும் சம்பாஷணையும் அப்படி ஒன்றுக்கு மேல் ஒன்று சிறந்து விளங்கி என்னைத் திணற அடித்துவிட்டன" என்பார் கல்கி (அறிஞர் அண்ணா, ப.47).

'இராத்திரி வேளைன்னா சங்கீதம், சரசம், குடும்பத்தில் சந்தோஷம் இவைகள் தான் இருக்குமென்று நினைக்கிறீர்கள். இவைகளைத்தான் பார்த்திருப்பீர்கள். இரண்டு உலகமல்லவா இருக்கிறது. உங்க உலகிலே இரவு பத்து மணி அடித்ததா தீர்ந்தது. சந்தடி கிடையாது. எங்க உலகமிருக்கே, அதுக்கு இரவு மணி பத்தானாத்தான் பொழுது விடியுதுன்னு அர்த்தம். தெருக்கோடிச் சண்டை, வீட்டுமேலே கல் வீசுவது, கலகம், கத்திக்குத்து எல்லாம் அப்போதுதான் ஆரம்பமாகும். நீங்களெல்லாம் காலையிலே காப்பி சாப்பிட்டதும் சுறுசுறுப்பா வேலை செய்வீங்க. எங்க உலகத்திலே சுறுசுறுப்பு ராத்திரி பத்து அடிச்சதும் கள்ளோ, சாராயமோ போட்டுக்கிட்டா தீர்ந்தது, கோட்டை எல்லலாம் தூளாகும்," என்று ரத்தினம் சேகரிடம் கூறுவான். இந்த இருவேறு உலகத்தைத்தான் அண்ணா நாடகம் முழுவதும் நயம்படப் படம்பிடித்துள்ளார்.

## நல்லதம்பி

இது சிரிப்பை மூட்டிச் சிந்திக்க வைக்கும் நாடகங்களில் மிகச் சிறந்தது. சமுதாயத்தில் மலிவாகக் கிடைக்கும் குறுஞ்செயல்கள் பலவற்றை ஒன்றாகத் திரட்டி அவற்றை ஓர் அங்கதமாக்கி 'நல்ல தம்பி' என்று பெயரிட்டார். நடப்புச் சமுதாயத்தை நையாண்டி செய்து நகைப்பதற்கு அளவே இல்லை. மதுவிலக்கு, கூட்டுப் பண்ணை முறை, ஜமீன்தாரி ஒழிப்பு ஆகிய சமூகச் சீர்திருத்தக் கருத்துக்கள் தூவப்படுகின்றன.

கலப்புத் திருமணம், விதவைத் திருமணம் ஆகியவை இதில் ஆதரிக்கப்படுகின்றன. ஏழை மக்களைக் கடுமையாக நடத்தி அதிகம் வேலை

வாங்கிவிட்டு உரிய ஊதியம் கொடுக்காமல் இருக்கும் போக்கு வன்மையாகக் கண்டிக்கப்படுகிறது. பழமையான போக்குகளும் நம்பிக்கைகளும் குறைகூறப்படுகின்றன. பகுத்தறிவுடைய புதுமையான வாழ்வு ஆதரிக்கப்படுகிறது

இது சமூக நாடகமாயினும் அரசியல் குறிப்புகளும் நிறைந்து காணப்படுகின்றன. உண்மையாகவும் ஆற்றலுடனும் மக்களின் நலம்நாடிப் பாடுபடும், உன்னதமான தலைவன் உருவாக வேண்டும் என்ற கருத்தும் இந்நாடகத்தில் முறையிடுகிறது என்பார் ஏ.என். பெருமாள்.

1948இல் எழுதப்பட்ட இந்த நாடகம் சினிமாவாகவும் தயாரிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. திராவிட முன்னேற்ற கழகத்தில் அண்ணன், தம்பி, உடன்பிறப்பு எனும் உறவுச் சொற்களுக்குத் தனித்த அர்த்தங்கள் உள்ளன. அண்ணா, தன்னைவிட வயது குறைந்த கழகத் தோழர்களை எல்லாம் தம்பி என்று தான் அழைப்பது வழக்கம். இதில் 'நல்லதம்பி' என்பது நல்ல அர்த்தத்தில்தான் கையாளப்பட்டுள்ளது.

## காதல் ஜோதி

1953இல் வடஆர்க்காடு மாவட்ட தி.மு.க. மாநாட்டில் 'காதல்ஜோதி' நாடகம் அரங்கேற்றப்பட்டது. இதில் பார்ப்பனன், பார்ப்பனரல்லாதார் என்ற இருமை கட்டப்பட்டுள்ளது. சந்திரசேகரஐயர், அவரது மகன் அருண்குமார், மகள் சுகனா போன்றோர் பார்ப்பனப் பாத்திரங்களாகவும், பொன்னன், பொன்னி, தங்கப்பன், பொற்கொடி போன்றோர் பார்ப்பனரல்லாதார் பாத்திரங்களாகவும் உள்ளனர். விதவை மணம் வற்புறுத்தப்படுகிறது; கலப்பு மணம் கௌரவிக்கப்படுகிறது.

இதில் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் பார்ப்பனருக்கும் மண இணைவு ஏற்படுதலே மாற்றம் என்னும் கருத்தியலடிப்படையில் அமைக்கப்பட்டது. இது பிற நாடகங்களிலிருந்து இரு தனித்த, வேறுபட்ட, ஆணாதிக்க நிலையிலிருந்து விடுபடும் முயற்சி எனலாம். சாதியம் என்னும் பார்ப்பனியம் கடந்த கதையாடலாகக் கட்டப்படும் முயற்சி என்றும் கூறலாம்.

"சமுதாயத்தைத் திருத்தி அமைத்தாக வேண்டும்" என்ற கருத்தை மறுக்கும் ஒரு சில 'மகானுபவர்கள்' இருக்கத்தான் செய்கிறார்கள் எனினும் திருத்தியமைத்தாக வேண்டும் என்பதற்கான ஆதரவுதான் களிப்பூட்டும் அளவுக்கு இருக்கிறது. வளர்ந்த வண்ணமும் இருக்கிறது. சமுதாய அமைப்பு சில பழங்காலக் கருத்துகளின் மீது கட்டப்பட்டிருக்கிறது. அந்தக் கருத்துகள் நீண்டகாலமாக-தலைமுறையாக இருந்து வருவன-எனவே, மக்கள் அவைகளுக்கான-காரணம் பொருள் அவைகளால் ஏற்படக் கூடிய பலன்கள் ஆகியவைப் பற்றி எண்ணிப் பார்ப்பதில்லை. வேதனை தரும் எதிர்ப்புகளைச் சமாளித்துக் கொண்டு சீர்திருத்தக்காரர்கள் காலத்துக்கு ஒவ்வாத அந்தக் கருத்துக்களைக் களைந்தெறிய அரும்பாடு படுகிறார்கள். 'காதல் ஜோதி'

அத்தகையதொரு முயற்சி. வைதீகம், அறியாமை ஆகியவற்றின் போக்கையும் காதல் ஜோதியைச் சுட்டுப்பொசுக்கவல்ல வலுவுடையது என்பதையும் விளக்க முற்படும் நாடக நூல்" என்பார் அறிஞர் அண்ணா. (ஒருவார்த்தை)

### சொர்க்கவாசல்

இந்த நாடகம் 1955இல் எழுதப்பட்டு 1980இல் பூம்புகார் பிரசுரம் பிரஸ் மூலம் நூலாக வெளிவந்தது. இதில் பலவிதமான சிந்தனைக் கருத்துக்கள் சிதறிக் கிடக்கின்றன.

"பல ஆயிரம் நட்சத்திரங்கள் வான மண்டலத்திலே இருக்கும் போது, நான் வேறு தேவையா என்று சந்திரன் கேட்கிறானா? அடக்கம் தேவைதான் மதிவாணா, ஆனால் ஆமையாகி விடக் கூடாது. தோகையை விரித்து ஆட மறுக்கும் மயிலாக இருக்கக் கூடாது" என்று முத்து மதிவாணனிடம் கூறுவான்.

தன் முனைப்பு வேண்டும் என்பதை அண்ணா இதன் மூலம் விவரிக்கிறார். அத்துடன் சுயமரியாதைக் கொள்கையையும் வற்புறுத்துகிறார் இந்நாடகத்தின் மூலம். இதனை 71ஆவது காட்சியில், "நாட்டின் கீர்த்தி, நமது கீர்த்தி நாசமாகலாமா? தலையா போய்விடும்? போவதானால்தான் என்ன? தலையைக் குனிந்து கொண்டு வாழ்வதைவிடத் தலையை இழப்பது மேல், வீரமும் அதுதான், விவேகமும் அதுதான்" என்று படைத் தலைவர் மூலம் கூறுகிறார்.

"நாட்டிலே நரகம் இருக்கிறது-நாற்றமடித்துக் கொண்டு. அதை ஒழிக்காமல் சொர்க்க வாசல் கட்டுவது படுமோசம், நயவஞ்சம்" என்று மதிவாணன் கூறுவது தான் நாடகக் கதை.

இது சினிமாவாக்கப்பட்டு வெண்திரையையும் வெப்பக் காடாக்கியதைக் குறிப்பிடவேண்டும்.

### பாவையின் பயணம்

1959இல் 'பாவையின் பயணம்' எனும் இந்நாடகம் எழுதப்பட்டது. பெண்களின் உரிமைக்காக வழக்காடும் ஒரு வாழ்விலக்கியமாக விளங்குகின்றது. இதில் பல பின்னோக்குக் காட்சிகள் நாடகக் கருத்துத் தெளிவிற்கு மிகவும் உதவும் படியாக அமைந்துள்ளன. இதில் நெப்போலியனும் அவனுடைய மனைவி சோசபைனும் உரையாடும் உணர்ச்சி மிக்க காட்சி இடம்பெறுகிறது. இதை அண்ணா நாடக ஓட்டத்தில் இணைத்துள்ள முறை அவருடைய கட்டுக்கோப்புத் திறனையும் படைப்பு ஆற்றலையும் செவ்வனே விளக்கிக் காட்டுவதாகும். காலத்தைக் கடந்து இசைக் காட்சியாக இந்நிகழ்ச்சி இணைக்கப்பட்டுள்ளது. இது ஒரு சிறந்த உத்தியாக அமைந்து நாடகத்தின் வெற்றிக்குத் துணைநிற்கிறது.

## ஓரங்க நாடகங்கள்

அண்ணா பல்வேறு ஓரங்க நாடகங்களை எழுதியுள்ளார். ஒரு பிரச்சனையை மையமாகக் கொண்டு அதனை மிகவும் நுட்பமாக அணுகிக் குறுகிய கால ஓட்டத்துக்குள் ஓர் உணர்ச்சி பூர்வமான தீர்வை காண்டுபிடிப்பதை இந்த ஓரங்க நாடகங்களில் காணலாம். அண்ணா தான் எடுத்துக் கொண்டுள்ள பொருளைப் பற்றி நல்ல தெளிவுடன் கருத்து கூறுவதில் திறமையுடையவர். உலக நடப்பைக் காட்சிப்படுத்துவதுடன் நடக்க வேண்டும் என்று விரும்புவனவற்றை நாடகப் படமாக்குவதிலே அவருடைய தனித்திறமையினைக் கண்டு உணரலாம் என்பார் முனைவர் ஏ.என்.பெருமாள்.

நீதி தேவன் மயக்கம், நன்கொடை, கண்ணீர் துளி, புதிய மடாதிபதி, அவன் பித்தனா, இளங்கோவின் சபதம், துரோகி கப்ளான், சன்மானம், அம்பாள் மோட்சம், இரக்கம் எங்கே, சுயேட்சியாகிவிடு, இன்பநாளில் இதயம் பாடுது, பாரதம், சோனாசலம், தேவலோகத்தில், காசுரார் கருணை, எத்தன் திருவிளையாடல், கண்ணாயிரத்தின் உலகம், ராகவாயணம் என 40 நாடகங்களுக்கு மேல் எழுதியதாகத் தெரிகிறது. இது பற்றி விவரமான பட்டியல் இதுவரை எவராலும் தொகுக்கப்படவில்லை.

அண்ணாவின் நாடகங்களில் சில அவ்வப்போது தொகுக்கப்பட்டன. அவற்றில் 1971இல் தொகுக்கப்பட்ட 'அண்ணாவின் நாடகங்கள்' குறிப்பிடத்தக்கது. இது பரிமளம் பதிப்பகத்தால் தமிழ்நாடு சங்கீத நாடகச் சங்கத்தின் நிதி உதவியுடன் வெளியிடப்பட்டது. இதில் ஓர் இரவு, வேலைக்காரி எனும் நாடகங்களோடு, நீதிதேவன் மயக்கம், நன்கொடை, கண்ணீர்த்துளி, இரக்கம் எங்கே, கல்சுமந்த கசடர், ராகவாயணம், புதிய மடாதிபதி, கண்ணாயிரத்தின் உலகம் எனும் எட்டு நாடகங்களும் உள்ளன.

## நீதி தேவன் மயக்கம்

அரசியல் காரணங்களுக்காகவும் வேறு பலசூழல்களின் உந்துதல்களாலும் கம்பனுக்கு எதிராகப் போர் தொடுக்க வேண்டிய ஒரு தேவை அண்ணாவுக்கு ஏற்பட்டது. எனினும் அந்தப் போரை இலக்கியத் தரத்தோடு அமைத்துக் கொண்டார்.

கம்பனின் பாத்திரப்படைப்புகளை-அந்தப் படைப்புகளின் முரண்பாடுகளை 'நீதி தேவன் மயக்கம்' என்று நாடகமாக்கியுள்ளார். இது கம்ப இராமாயணம் என்ற நூலுக்கு அண்ணா எழுதிய விமர்சனம்தான். இதுவரை எவரும் இலக்கிய விமர்சனத்தை நாடகவடிவில் செய்ததில்லை என்பர். நூல் ஆசிரியர் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தப்பட்டு, நாடகப் பாத்திரம் ஒன்றினால் குறுக்கு விசாரணை செய்யப்படுகிறார். இராவணன் என்ற பாத்திரத்திற்கு நூலாசிரியர் முறையான நீதி வழங்கவில்லை என்பதை நடுநிலையான ஒரு வாசகனை நீதி தேவனாக உட்கார வைத்து வாதங்களுக்குப் பதில் சொல்ல முடியாமல் முடிவில் மயங்கி விழுந்து விடுவதாகக் காட்டினார். [illegible] திறனாய்வுக் கலையின் நுணுக்கத்திற்கு ஒரு சிறமா[illegible]

கம்பரைப் படிக்காதவர்களும் இதன் மூலமாகக் கம்பனின் காவிய பாத்திரங்கள் பற்றி சர்ச்சை செய்திடும் சூழ்நிலையினை அண்ணாவால் உருவாக்க முடிந்தது திறனாய்வுத் துறையில் இத்தகைய சாதனையை வேறு எந்த நாட்டிலாவது எந்த மொழியிலாவது எந்தக் காலத்திலாவது யாராவது சாதித்து இருப்பார்களா என்பது சந்தேகமே.

இது திராவிட நாடு இதழில் 8-3-1947இல் எழுதப்பட்டு 14-7-47இல் அரங்கேற்றப்பட்டது. இதுவோர் ஓரங்க நாடகம். கம்பர் இராவணனை மட்டும் 'இரக்கமற்ற அரக்கன்' என்று பாடியது குற்றம் என்பதை வழக்குமன்ற காட்சிகள் மூலம் நிரூபிக்கிறார். நீதி மன்ற சட்ட திட்டங்களையும் வழக்காடு முறைகளையும் அடிப்படையாகக் கொண்டு புராண இலக்கியப் பாத்திரங்களை நவீனத் தர்க்கங்களைக் கொண்டு மேடைப்பேச்சில் விமர்சித்ததன் நீட்சியாகவே இந்நாடகம் அமைந்துள்ளது. கற்றவர்களால் போற்றப்பட்டது.

## கல் சுமந்த கசடர்

இந்த நாடகம் 1950இல் தி.மு.க.முதல் மாநாட்டில் அரங்கேறியது. நாவலர் நெடுஞ்செழியன் சேரன் செங்குட்டுவனாக நடித்தார். இது சிலப்பதிகாரத்தின் வஞ்சிக் காண்டத்தை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது. கனகவிசய மன்னர்கள் தமிழர்க்கு எதிரான வடவர்கள் என்ற புனைவைக் கொண்டு இந்தி, காங்கிரஸ், பார்ப்பனர் என்னும் எதிர் நிலை அடையாளங்களையுடைய அன்றைய தமிழகக் காங்கிரசாரை எதிர்க்க இந்நாடகம் அவருக்குப் பயன்பட்டது.

தமிழரின் வீரம், மான உணர்வு, தன்னம்பிக்கை ஆகிய தன்மைகளை அழகாக எடுத்துக் காட்டும் நாடகமாக இது விளங்கியது.

"சிங்கத்தைக் கேலி செய்யும் செந்நாயைக் கண்டதில்லை. விழி பழுதானவன், வழி காட்டுவோனைக் கேலி செய்ததில்லை வீணர்கள் வீரர்களைப் பழிக்கின்றனர்" என்பது போன்ற உணர்ச்சி மிக்க உரையாடல்கள் உள்ளன.

## நன்கொடை

இது அருமையான அரசியல் எள்ளல் நாடகத்துக்குச் சிறந்த எடுத்துக் காட்டு. ஜவுளி ஜம்புலிங்கம், காங்கிரஸ் எம். எல். ஏ., அவரது மகள் வனிதா, அவரது தம்பி தருமலிங்கம், அவரது மகன் மன்னன், அவரது கடை மானேஜர், பீரங்கி பீமாராவ் நாயுடு, காங்கிரஸ் பிரசாரகர் எனும் பாத்திரங்கள்.

"எடுத்ததை எல்லாம் கடவுளாக்கி வழிபட்டு கோயில்களின் எண்ணிக்கையை அதிகரிக்கும் விசித்திர வழக்கம் இந்தியாவில் இருக்கிறது. பெயரளவில் பக்தி பண்ணி விட்டு நடைமுறையில் நேர்மாறான செயல்களைச் செய்வதும் நம்மவர் வழக்கமாகி விட்டது" என்ற நேருவின் வார்த்தைகளைப் பொன் மொழியாக்குவது நாடகம்.

### ஜனநாயக சர்வாதிகாரி

இதில் மக்களாட்சியின் பெயரால் பதவிப் படியேறி அநியாயத்துக்குத் துணை நின்று அபலையரைத் தண்டித்துக் கொடுங் கோலாட்சி நடத்தும் சர்வாதிகாரப் போக்கை அண்ணா மிக வன்மையாகக் கண்டிக்கிறார். அதிகாரத்தில் இருப்போர் சுயமாகச் சிந்திக்கும் திறமுடையவரைத் தண்டிக்கும் போக்கை சாக்கிரட்டிஸ் காலம் தொட்டு தற்காலம் வரை நன்கு விளக்கியுள்ளார்.

### ராகவாயணம்

அபஜெய காண்டம், அமளிக் காண்டம், உபதேசக் காண்டம், பாடாபிஷேக காண்டம், பணாபஹரண காண்டம் என ஐந்து காண்டங்களில் ராகவாச்சாரியார், காமாட்சி, ரங்கநாதர், கமலா, சங்கரசிவம் எனும் பாத்திரங்களால் படைக்கப்பட்ட நாடகம். இது கதா காலட்சேபம் பற்றிய கதையாகும்.

### கண்ணீர்த்துளி

காமராஜர் தமிழகத்தின் முதலமைச்சர் ஆனதை திராவிடர் கழகம் ஆதரித்தது. இதனை எதிர்த்து அண்ணாவால் எழுதப்பட்ட நாடகம் இது. இது 1947இல் அச்சிடப்பட்டுள்ளது.

பெரியாரால் திமுக. வினர் 'கண்ணீர்த்துளி' என்று விமர்சிக்கப் பட்டனர். பெரியார் பற்றிய இந்நாடகத்துக்குப் பெயரும் பொருத்தமாக உள்ளது. மூன்றே காட்சிகளில் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லி முடித்து விடுகிறார்.

### அம்பாள் கடாட்சம்

இந்நாடகம் 1955இல் எழுதப்பட்டது. இது புராணத்தில் உள்ள புரட்டுத் தனத்தை வெளிப்படுத்த முயல்கிறது. அம்பாளின் பெயரைச் சொல்லி மக்களை ஏமாற்றுவதை இது கண்டிக்கிறது. மூட நம்பிக்கையை விட்டு விட்டு முன்னேற்றச் சிந்தனையோடு மக்கள் சிறப்படைய வேண்டும் என்பது அண்ணாவின் ஆசை.

### புதிய மடாதிபதி

மடாதிபதிகளின் போலித்தனத்தை வெளிச்சம் போட்டுக் காட்டப் பகுத்தறிவுக் காளை ஒருவனே புதிய மடாதிபதியாக வேடமிட்டு மடாதிபதியை அவனை நம்பும் பக்தர்களைக் கொண்டே அடித்துக் கொல்லச் செய்தது போல் நகையும் சிந்தனையும் இழையப் பின்னப்பட்ட நாடகம் இது.

"ஊரிலே எவ்வளவோ மக்கள் உழைத்து அலுத்துக்கிடக்க உண்டு கொழுத்து ஊன் சுமந்து திரிகிறீர்களே. உங்களுக்கு வெட்கம் மானம் இல்லையா?" என்று சாவடியில் படுத்துக் கிடந்தவன் கூறுவது அனைத்து போலிச் சாமியார்களுக்கும் பொருந்தும் வகையில் உள்ளது.

### இரக்கம் எங்கே

ராஜ்கண்ணு உண்மையைச் சொல்லிக் கதறும் போதும் டாக்டர், மிராசுதார், சுடலை, போலீஸ் கான்ஸ்டபிள்கள் 34,38 ஆகிய எவர்களுமே

இரக்கம் காட்டவில்லை. கடைசியில் அவன் காவல்துறையையே ஏமாற்றத் திட்டமிட்டான் என்பது நாடகமுடிவு.

இரக்கம் இல்லையா? ஏனய்யா இவ்வளவு கல்மனம்? இரக்கம் கொள்ளாதவனும் மனிதனா? சர்வ சாதாரணமாகக் கேட்கப்படும் கேள்விகள். ஆனால் பலரால் பலசமயங்களில் இரக்கத்தைக் கொள்ள முடியவில்லை ஏன் வாழ்க்கையின் அமைப்பு முறைதான் அதற்கு முக்கியமான காரணம்.

## கண்ணாயிரத்தின் உலகம்

இவரது 'கண்ணாயிரத்தின் உலகம்' என்ற நாடகம் உலகில் பணம் கொள்கையை வெல்லும் திறம் கொண்டதாக உள்ளது என்ற கருத்தை விவரிக்கின்றது. இந்நாடகத்தை 1980இல் பூம்புகார் பிரசுரம் பிரஸ் நூலாக வெளியிட்டுள்ளது.

"தந்தை உண்டாக்கிய உலகில் தனயன் இடம் பெற்றுச் சுகபோகம் அனுபவிக்கிறான். அங்கிருந்து கொண்டே வேறொரு உலகை அவன் கண்டு குமுறுகிறான். ஆனால் அதற்குள் அவனால் ஆழமாகக் காலூன்ற முடியவில்லை. மாறுபட்ட இருவேறு உலகில் நின்று கொண்டு அவதிப்படும் ஒருவனின் பரிதாபத்தின் வாயிலாக ஒரு புதிய ஞானத்தை போதிக்கும் பொன்னோவியம்" என்பது பதிப்புரை.

சீமான் சிங்காரவேலன் முதலாளி வர்க்கத்தின் மொத்த உருவம். இவரது மகன் கண்ணாயிரம் அப்பாவுக்கு நேர் விரோதம். எனினும் நாட்டியக்காரி நாடியாவோடு சகவாசம். பாட்டு, கூத்து, நாட்டியம், நாடகம் என்று அவன் போக்கே தனி. குடிபோதையில் அவளது கைப்பையோடு வந்து வேலைக்காரனிடம் கொடுக்க, பின் களவு போனதாகப் புகார் செய்து, வேலைக்காரன் கைது செய்யப்படுகிறான். வழக்கு திசை மாறுகிறது. நாடியாவே வந்து தன் பை இல்லை என்று கூறுகிறாள். அதற்காக சீமான் அவளிடம் ஒரு நாடகமே நடத்துகிறார். கண்ணாயிரம் பொய்யைச் சரியாகச் சொன்னதால் தப்பிக்கிறான். இருந்தாலும் பொய் சொன்னதற்காக வருத்தப்படுகிறான். குளம் பெருகி கரும்புத்தோட்டம் அழியாமல் இருக்க கரையை வெட்டி குப்பத்துக்குள் திருப்பி விட்டு ஏழை மக்களை அழித்துவிடுகிறார். அதனை மகன் கண்டிக்க தந்தை ஆத்திரமடைகிறார். அதனால் மயக்கமடைகிறார். மகனோ கண்ணீர் மட்டும் விடுகிறான். அவனால் முடிந்தது அவ்வளவுதான்.

## இன்ப ஒளி

இந்த நாடகக் கதை பல்லாண்டுகளுக்கு முன்பு 'விஞ்ஞானி' என்ற தலைப்பில் 'திரைப்படமாக' வெளிவர இருந்தது. அறிஞர் அண்ணா இந்தக் கதையைக் குறிப்புக்களாகவும் சில இடங்களில் உரையாடல்களாகவும் சில இடங்களில் நிகழ்ச்சிச் சித்திரமாகவும் முழுக்கதையையும் எழுதி இருக்கிறார். 1968ஆம் ஆண்டு காஞ்சி பொங்கல் மலரில் இதனைத் தொடர்கதையாக எழுதத் தொடங்கினார். நாடக வடிவத்திலிருந்து உரைநடை வடிவமாக்கி

கதையில் சில புதிய திருப்பங்களையும் புகுத்தி, மூலப் பிரதியிலிருந்து மாறுபாடு பெறும் தன்மையில் சில சிறிய மாற்றங்களைச் செய்திருந்தார்கள். கதைவடிவத்தையும் நிகழ்ச்சிக் குறிப்பு வடிவங்களையும் உரையாடல் வடிவத்தையும் ஒன்றாய் இணைக்கும் போது ஏற்பட்ட முரண்பாடுகளைத் தவிர்க்கும் 1968 பொங்கல் மலரில் தொடங்கிய உரைநடை முறையினை மூலப் பிரதிக்கு ஒத்த வடிவத்திலே, நாடகமுறையிலே மாற்றப்பட்ட வடிவம். இதனைப் பூம்புகார் பிரசுரம் பிரஸ் 1980இல் நூலாக்கியுள்ளது.

திருநாட்டுக்கும் வெண்ணாட்டுக்கும் போர். பாதுகாவலன் விக்கிரமன்: பத்து வயது மன்னன் குமாரவேலன். விக்கிரமன் அதிகாரத்தைக் கைப்பற்ற விரும்புகிறான். திருமுடியார் ராஜகுரு. அவரும் அரசு அதிகாரத்தைக் கைப்பற்ற விரும்புகிறார். அறிவானந்தர் ஆய்வாளர். மக்கள் பசிப்பிணி தீர கண்டு பிடிப்புக்குள் இறங்குகிறார். அவரது மகனும் மகளும் ஒத்துழைக்கின்றனர். புண்ஏற்படும் பொடியைக் கண்டு பிடிக்கின்றனர். அதன் ரகசியத்தை விக்ரமனும், திருமுடியாரும் மல்லநாட்டு படைத்தலைவரும் பெற சதிசெய்கின்றனர். அறிவானந்தர். அழிவுக்கு அதைப் பயன்படுத்த விரும்பவில்லை. எதிரியை அழிக்காமல் அச்சுறுத்தவே பயன்படுத்துகிறார். திருமுடியாரின் மோசடியால் மக்களால் கொல்லப்படுகிறார். அறிவானந்தரோ விக்கிரமனால் கொல்லப்படுகிறார். எனினும் அவரது கண்டு பிடிப்பின் விளைவால் பசிப்பிணி தீர்க்கும் மருந்தின் வெற்றிச் செய்தி வருகிறது. அறிவானந்தரின் மகன் குணாளன் பாதுகாவலனாகிட சீடன் ஆய்வாளர் ஆகிறார். இது இன்ப ஒளியாக விளங்குகிறது.

## ரொட்டித் துண்டு

ராம்லால் என்பது ராமலிங்கத்தின் இன்னொரு பெயர். வட நாட்டுத் தொடர்புக்கு இது பயன்பட்டது. பெரும் வியாபாரி: பாட்டாளிகளின் விரோதி. அவரது மகன் பாரத்பூஷன் 'ரொட்டித்துண்டு' என்ற கதை எழுதியதற்காக பாராட்டப்படுகிறான். அவனது தமிழாசிரியர் பெருமையோடு பாராட்டு விழாவில் போற்றினார்.

ராம்லாலுக்கோ தன் மகன்மீது கடுங்கோபம். தன்னைக் கேவலப்படுத்தும் அவன் கதைக்காக அவர் வெறுப்பு கொண்டார். ஆனால் அவரது வேலைக் காரர்களோ அக்கதையை விரும்பி வாசித்தனர். பலர் அவனது தந்தைக்குப் பாராட்டுச் சொல்லவே அவரது கோபம் மேலும் மிகுந்தது. தன் மகனை நேரடியாகச் சந்தித்த வேளையில் ராம்லால் கண்டிக்கும்போது அக்கதை பற்றிய மர்மம் வெளியானது. அக்கதையை எழுதியவர் பாரத்பூஷனின் நண்பன் கதிரவன். வறுமையின் காரணமாக இருபது ரூபாய் கடன்வாங்கிக் கொண்டு தன் பெட்டியை விட்டுவிட்டுப் போனான். அதனுள் இருந்த கதையைப் பாரத்பூஷன் தன் பெயரில் வெளியிட்டு விட்டான். அதன் மூலம் பேரும் புகழும் மட்டுமல்ல பணமும் அவனுக்குக் கிடைத்தது. கதிரோ பைத்தியக்காரன் என்ற பட்டத்துடன்

அடைக்கப்படுகிறான். ராம்லாலோ தன் மகனைப் புகழ்ந்து 'துப்பாக்கி வயத்திலே பீரங்கிடீ, அவன் என்மகன்' என்று பேசுகிறார்.

முதலாளித்துவத்தின் மோசடியும் ஏழைகளின் ஏமாற்றமும் அண்ணாவால் மிகச் சிறப்பாக நாடகமாக ஆக்கப்பட்டுள்ளது

அண்ணாவின் நாடகங்கள் நடிப்பதற்கும் படிப்பதற்கும் ஏற்றவை, இலக்கிய நயமிக்கவை. இனிய நடையில் அரிய கருத்துகளை நாடக மேடையில் நல்ல விருந்தாகத் தரும் தகுதியுடையவை. சொல்லழகும் கருத்துச் செறிவுமிக்க உரையாடல்கள் கேட்டவர்களையும் படிப்பவர்களையும் கவர்ந்து இழுக்கக் கூடியவை. மந்திரம் போன்று மனதில் பதிந்து இயந்திரம் போன்று மனிதனை ஆட்டும் வல்லமை உடையன.

பேச்சு வழக்கு, நயமான உரை, உவமை உருவகம், வாத எதிர்வாதம், வருணனை முதலிய பலவிதமான மொழி நடை உத்திகளை அவருடைய நாடகங்களில் கையாண்டு மக்களைக் கவர்ந்துள்ளார்.

அண்ணாவின் நாடகங்கள், தமிழ் நாடகங்கள் ஒரு பெரும் சமுதாய மாற்றத்தைச் செய்யத் தகுந்த ஆற்றலாகவும் இயக்கமாகவும் விளங்கின. அவை இன்று தமிழ் இலக்கியச் செல்வங்கள். மொழி பெயர்ப்புச் செய்யப்பட்டால் உலக அரங்கில் அவை ஓர் உயர்ந்த இடத்தைப் பெறும் என்பது உறுதி என்பார் டாக்டர் ஏ.என்.பெருமாள்.(நாடகச்சிந்தனை, ப. 166).

சேக்ஸ்பியரை, பெர்னாட்ஷாவை, வேர்ட்ஸ் ஒர்த்தை, இங்கர் சாலை, ரூசோவைப் போன்ற பல அறிஞர்களை மேல்நாட்டு ஒவ்வொரு துறையும் ஒரு அறிஞரைப் பெற்றிருக்கிறது. ஆனால் நமது தமிழகம் அந்த அறிஞர்கள் அத்தனை பேரையும் உள்ளடக்கிய ஒரே அறிஞர் அண்ணாத்துரையை பெற்று விட்டது என்று நடிப்பிசை புலவர் கே.ஆர். ராமசாமி கூறியுள்ளார். இது வெறும் புகழ்ச்சி மட்டுமல்ல என்பதை இவரது நாடகங்களை அறிந்தவர்கள் அறிவர்.

"அண்ணாவின் நாடகங்கள் அனைத்தும் தம் உற்பத்தி விநியோகச் சூழலை ஒட்டியே கட்டமைக்கப்பட்டுள்ளன. கற்றவர்க்கான நாடகமாக மாறிய பம்மல் சம்பந்த முதலியாரின் சிறு நகர மற்றும் நகர நடுத்தரவர்க்கப் பார்வையாளர்களுக்கென உருவாகிய நாடகத்தளத்தில் சீர்திருத்த வகையாக வளர்த்து வந்த தொடர்ச்சியைச் சார்ந்தவை சந்திரோதயம், வேலைக்காரி, ஓர் இரவு, காதல் ஜோதி ஆகியவை. சந்திரமோகன், நீதி தேவன் மயக்கம், கல் சுமந்த கசடர் ஆகியவை நேரடி அரசியல் பிரச்சார நாடகங்கள்.

"அண்ணாவின் வரலாற்றுப் பதிவுகளின் விவரிப்பு நாடகங்களாகக் கல்சுமந்த கசடர், சந்திர மோகன் நாடகங்கள் ஆகும். இவரது நாடகங்களில் பம்பல் சம்பந்த முதலியாரின் கூத்து மரபை ஒட்டிய முதலாளி, வேலைக்காரன் நகைச் சுவை பகுதி, கூத்து மரபின் நாயகன், கட்டியங்காரன் தன்மையின் இன்னொரு தளமேயாகும். எதுகை மோனையோடு அமைந்த வசனப் பகுதிகள், கூத்துமரபின் பாடல்களை ஒட்டியவை. கூத்து மரபில் அமைந்த தர்க்கப்போட்டி வழக்கு மன்றங்களில் விவாத போட்டிகளாக அமைந்தன. எரிந்த கட்சி எரியாத

கட்சி எனும் காமன் பண்டிகை லாவணி மரபை ஒட்டியே நீதி தேவன் மயக்கம் இலக்கிய விவாதமாகவே கட்டமைக்கப் பட்டுள்ளது". என்பார் கிராமியன்.

சமுதாயத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வு, வேறுபாட்டுணர்வு, காழ்ப்புணர்வு, போலித்தன்மை, மூடநம்பிக்கை ஆகியவற்றை வேரறுக்க விரும்பினார். நாடகக் கலை அவருக்கு நன்கு உதவியது. விரும்பிய *சீர்திருத்தத்தைப் புலப்படுத்தி மக்கள் மனதில் நல்ல கருத்துக்கள் பலவற்றை* நாடகமேடை மூலம் அவர் விதைத்து விடுகிறார்.

1945-ஆம் ஆண்டுகளுக்குப் பின் தமிழ் நாட்டில் திராவிட இயக்க நாடகங்கள் மேடையேறத் தொடங்கின. தமிழ், நாட்டுணர்வு, மொழிப்பற்று, பகுத்தறிவுச் சிந்தனை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு திராவிடக் கழகம் செயல்பட்ட காலம் அது இந்தக் கொள்கையைப் பரப்புவதற்காக பல நாடகங்களை அண்ணா, கலைஞர், ஆசைத்தம்பி, சிற்றரசு போன்றவர்கள் *எழுதினர்.*.

காலம் காலமாகச் சமூகச் சீர்திருத்தவாதிகள் நாடகத்தைக் கொண்டு சாதித்த பெருஞ்செயல்களை வரலாறு சிறப்பித்துக் கூறத் தவறுவதில்லை. இத்தகைய அரிய சாதனைகளை மனதில் கொண்டு உலக நாடகவரலாற்றைப் புரட்டிப் பார்த்தால் அண்ணாவுக்கு ஒரு சிறந்த இடம் உறுதியாக உள்ளது.

பழமையில் மூழ்கிக் கிடக்கும் தமிழ்ச் சமுதாயம் புதுமைப் பொலிவுடன் சீரும் சிறப்பும் பெற்று உயர வேண்டும் என்று பலர் விரும்பினர். அண்ணா அதற்காக அயராது பாடுபட்டார். தன்னுடைய அறிவாற்றல், சொல்லாற்றல், எழுத்தாற்றல், நடிப்பாற்றல் ஆகிய அனைத்தையும் சமூக முன்னேற்றத்துக்காகப் பயன்படுத்தினார். புதுமையான கருத்துக்களுடன் நாடகம் படைப்பதில் ஒரு புதுமையான கருத்து முகிழ்ப்பை ஏற்படுத்தியுள்ளார்.

"நான் நடிகர்களை நிரம்பப் பயன்படுத்துவது ஏனென்றால் ஒரு காலத்தில் இந்த நாடகத் துறையினர்தான் நாட்டில் மூடக்கருத்துகளைப் பரப்பியவர்கள். இவர்கள் ஆடிக் காட்டிய ஆட்டமும் பாடிக் காட்டிய பாட்டும் பேசிய வசனமும் பூசிய வேஷமும் தான் நாட்டை இந்தத் தாழ்நிலைக்கு வீழ்த்தின. எனவே இவர்கள் ஊட்டிய நஞ்சை இவர்களே உறிஞ்சி எடுக்க வேண்டும் என்ற கருத்தில் தான் இவர்களை என்னுடன் வைத்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் அண்ணா. (அண்ணா சில நினைவுகள், ப. 85)

அண்ணா நாடக எழுத்தாளராக மட்டுமல்லாமல் நாடக நடிகராகவும் இருந்திருக்கிறார். சந்திரமோகன் அல்லது சிவாஜி கண்ட இந்து ராஜ்யம் என்னும் நாடகத்தில் இவர் காகப்பட்டர் எனும் பாத்திரத்தில் நடித்தார். இது பலரால் பரபரப்பாகப் பாராட்டப்பட்டது.

தன் 'சந்திரோதயம்' நாடகத்தில் மாயேந்திரன் என்ற ஜமீன்தாராக நடித்தது பெரும் சிறப்புக்குரியது. "இப்படியே தொடர்ந்து சில நாடகங்களில் அண்ணா நடித்து விட்டால் பரம்பரை நடிகர்களான எங்களை எல்லாம் மிஞ்சி விடுவார் என்றே தோன்றுகிறது. அண்ணா ஜமீன்தாராக வந்து ஜமீன்

தாரிசத்தின் ஆணவம், சோம்பேறித்தனம், மற்றவர்களை அலட்சியமாகக் கருதும் மனப்போக்கு அத்தனையையும் அப்படியே அப்பட்டமாகக் காட்டினார். "அடே என் காலைத் தூக்கி மேலே வை" என்று சொல்லி காலைத்தூக்குவதற்குக் கூட, பண மூட்டைகளுக்குப் பணி ஆட்கள் வேண்டுமென்ற உண்மையை மிக அழகாகக் காட்டினார்" என்று அவ்வை டி. கே. சண்முகம்" எனது நாடக வாழ்க்கை" என்ற நூலில் அண்ணாவின் நடிப்பை வியந்துரைக்கிறார்.

''தமிழுக்கு ஒரு டிக்கன்ஸ்
கோல நடைக்கொரு கோல்ட்ஸ்மித்'
உணர்ச்சியை உலுக்க ஒரு விக்டர்ஹியூகோ
உரையாடலுக்கு ஒர ஷெரிடன்
கேலிக்கு ஒரு மோலியர்
பேச்சுக்கு ஒரு பாக்
எளிமைக்கு ஒரு எமிலி ஜோலா

எல்லாவற்றையும் மீறி பகை மறந்து நகைக்கச் செய்யும் பெர்னாட்ஷாவின் பைந்தமிழ் வாரிசாக விளங்கிய அண்ணா நாடக உலகுக்குக் கிடைத்ததை எண்ணி எண்ணிப் பெருமைப் பட்டோம்" என்பார் எஸ். டி. சுந்தரம். (நாடக உலகில் அண்ணா, ப. 145)

---

# 6

# திரைப்படங்கள்

தமிழ்த்திரைப்பட வரலாற்றில் கதையின் கருத்தில், உரையாடலின் அமைப்பில் புரட்சிகரமான புதுமையான உத்தியைக் கையாண்டு-ஒரு பெரிய திருப்பத்தை உண்டாக்கியவர்களில் முதன்மையானவர் அண்ணா. அவரது கட்டுரைகள் விழிப்புணர்வைத் தூண்டியது போலவே அவர் எழுதிய நாடகங்களும் திரைப்படக் கதைகளும் பெரும் மறுமலர்ச்சியை நாடகத் திரைப்பட ரசிகர்களிடையே உண்டாக்கின.

நாற்பதுகளில் வெளிவந்த படங்களில் ஹிருதயம், அபிலாஷை, கல்மிஷம், ஸ்பஷ்டம், மனோபீஷ்டம் போன்ற சமஸ்கிருத சொற்கள் கையாளப்பட்டன. தமிழ்த் திரைப்படவுலகின் தலைவிதியை மாற்றினார் அண்ணா. இவர் திரையுலகில் நுழைந்த பிறகுதான் கதை உரையாடல் யார்என்று மக்கள் பார்க்க ஆரம்பித்தனர். நல்ல தமிழ்ச் சொற்கள்-சம்பவங்களுக்கேற்ற சத்தான வசனங்கள்-உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் ஆழமான-அழகான தமிழ், தமிழ்ச் சினிமாவில் இடம் பெற்றன என்பார் க. திருநாவுக்கரசு. (திராவிடர் இயக்கமும் திரைப்பட உலகமும், ப. 26)

கலப்புத் தமிழுக்கும் அழகழிந்த உரையாடலுக்கும் உறைவிடமாக இருந்தது தமிழ்த் திரைப்பட உலகம். கதையம்சத்திலே குறைபாடுகள் ஆயிரம்: கற்பனைக்கும் மீறிய புராண முலாம் பூசப்பட்ட-நடக்கவே முடியாத சம்பவங்களின் கோவை: இடையிடை இரண்டு பஜனைப் பாடல்கள். இதுதான் அன்றையத் திரைப்படம்.

திரை உலகத்தைப் புராணக் கதை உலகிலிருந்து சமுதாயச் சிந்தனைகளுக்குத் திசை திருப்பியவர் அண்ணா. மக்கள் புரிந்து கொண்டு ஏற்றுக் கொள்ளும் வகையில் இவரது உரையாடல்கள் இருந்தன. இவரது வேலைக்காரி, ஓர் இரவு, சொர்க்கவாசல் ஆகியவை அனைத்தும் சமுதாயச் சீர்கேடுகளைச் சுட்டிக் காட்டி மக்களைச் சீர்திருத்த நெறியில் சிந்திக்கத் தூண்டினவாகும் என்பார் சே. இராசேந்திரன்

அண்ணா எழுதிய ரங்கோன்ராதா, நல்லவன் வாழ்வான், தாய் மகளுக்குக் கட்டிய தாலி, காதல் ஜோதி, வண்டிக்காரன் மகன் எல்லாம் ஏதாவது ஒரு வகையில் அவரது புரட்சிக் கருத்துக்களைத் தாங்கி வந்துள்ளன. அண்ணாவால் எழுதப்பட்ட இக்கதைகள் திரைப்படமாயின.

நல்ல தம்பி (1949), வேலைக்காரி (1949), ஓர் இரவு (1951), சொர்க்கவாசல் (1954), ரங்கோன்ராதா (1956), தாய் மகளுக்குக் கட்டிய தாலி (1959), நல்லவன் வாழ்வான் (1961) எதையும் தாங்கும் இதயம் (1962), காதல் ஜோதி (1969) வண்டிக்காரன் மகன் (1979) போன்றவை அண்ணாவின் திரை இலக்கியப் பங்களிப்பாகும்

விஞ்ஞானி, கலிங்கராணி, அவரே என்தெய்வம், குமரிக் கோட்டம் ஆகிய படங்களுக்குத் திரைக்கதை, உரையாடல் அண்ணா எழுதுவதாக விளம்பரம் வந்தது. படங்கள் வரவில்லை.

வாலிப விருந்து, அவன் பித்தனா, பணத்தோட்டம், குமரிக் கோட்டம் போன்றவை அண்ணாவின் கட்டுரைத் தலைப்புகள். இவற்றில் முதல் இரண்டையும் கலைஞரும் பின்னிரண்டையும் எம்ஜி.ஆரும் தம் திரைப்படத் தலைப்புகளாக ஆக்கிக் கொண்டனர்.

அண்ணா தான் சார்ந்திருந்த சுயமரியாதை இயக்கத்திலிருந்து பிரிந்து, பின்னர் திராவிட முன்னேற்றக் கழகத்தை நிறுவிய அவர், தனது கட்சியின் புதிய கொள்கைகளைப் பரப்ப நாடகம், சினிமா எனும் இந்த இரண்டு பிரச்சார சாதனங்களைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டார்.

'தணிக்கை ஏதும் செய்யாமல் இருந்தால், ஒரே திரைப்படத்தின் மூலம் ஆட்சியைப் பிடித்து விடுவேன்' என்று அண்ணா குறிப்பிட்டார். இது சினிமா என்ற ஊடகத்தின் பலம் பற்றிய அண்ணாவின் கணிப்பாகும். இது அவரது வாழ்விலேயே நடைமுறைக்குச் சாத்தியமானதுதான் வரலாற்று உண்மையாகும்.

அண்ணாவின் சினிமாக் கதைகள் பலதிறப்பட்டவையல்ல. அவை கொள்கை தடத்திலேயே நின்றன. திரைப்பட பிரவேசத்தை இவர் தொழிலாக எண்ணிக் கொள்ளவில்லை அதனால்தான் 'கமர்ஷியலாக' கதை உரையாடலை எழுதவில்லை. ஒரு தடவை சினிமாவுக்குக் கதை கேட்பதற்காகக் காஞ்சிபுரத்திற்கு அண்ணாவைப் பார்ப்பதற்கு சின்னப்பா தேவர் வந்திருந்தார்'. "என்னிடம் ஒரு காளை, குதிரை, நாய் எல்லாம் இருக்கிறது. இதற்கு ஏற்றாற்போல ஒரு கதை வேண்டும்" என்று கேட்டாராம். அதற்கு அண்ணா "உங்களிடம் உள்ளவற்றிற்கு என்னால் எழுதித்தர முடியாது. என்னிடம் இருப்பவைகளைத்தான் தர முடியும்" என்று பதில் சொன்னாராம்; இதுதான் அண்ணா.

## நல்ல தம்பி

அண்ணா அவர்கள் திரைப்படத்திற்காக எழுதிய முதல் கதை கலைவாணர் நடித்த 'நல்ல தம்பி'. இதில் இடம்பெற்ற மதுவிலக்குப் பிரச்சார நாடகம் மிகப் பிரபலம் ஆகியது. 1949-ஆம் ஆண்டு பிப்ரவரி 2ஆம் தேதி வெளிவந்தது. 'கதை வசனம் சி.என். அண்ணாதுரை எம்.ஏ,' என்று டைட்டிலில் போட்டு வெளிவந்தது. பாமரர்களுக்கெனக் கருதப்பட்ட படம் படித்தவர்களுக்கும் உரியதே என்பதை அண்ணாவே அறிவித்தார்.

காஸினோ தியேட்டரில் 'Deeds Goes to Town' எனும் ஆங்கிலப் படம் நல்ல வசூலில் ஓடிக் கொண்டிருந்தது. அப்படத்தின் கதை நமது தமிழகக் கலாச்சாரத்தை ஒட்டியிருந்தது நமது நாட்டில் ஜமின்தார் ஒழிப்பு நடந்து கொண்டிருந்த நேரம். காலத்திற்கு ஏற்ற கருத்தாக இருந்ததால் இந்தப் படக் கதை வெற்றிகரமாக எடுக்க முடியும் என்ற எண்ணம் கிருஷ்ணன் பஞ்சு, ஏ. பிம்சிங் ஆகியோருக்குத் தோன்றியது. திரைக்கு ஏற்ற வகையில் உருவாக்கவும் அதற்கு ஏற்றவகையில் உணர்ச்சி மிக்க உரையாடல்களை எழுதக் கூடியவர் அண்ணாதான் என்று முடிவு செய்தனர். கலைவாணர் நடித்து என்.எஸ்.கே. பிலிம்சார் தயாரிப்பதாக இருந்தது. "அரசியலில் புகழ்பெற்று விளங்கும் அண்ணாதுரை வசனம் எழுதினால் நன்றாக இருக்கும்" என்று எஸ்.வி. சகஸ்ரநாமம் ஆலோசனை சொன்னார். இவரும் கதை பண்ணியதில் ஒருவர். அண்ணாவும் ஒப்புக் கொண்டு எழுதிக் கொடுத்தார்.

சொப்பனபுரி ஜமீந்தார் தனது அந்திம காலத்தில் தன் தங்கை மகன் நல்லதம்பிக்கும் தன் மகள் புஷ்பாவுக்கும் ஜமீன் உரிமை சாசனத்தைத் தயாரிக்கிறார். அதே ஜமீனின் தூர உறவினனான பூபதி, புஷ்பாவும் ஜமீனும் தனக்கே கிடைக்கும் என எண்ணியிருந்து ஏமாற்றமடைகின்றான்.

நல்ல தம்பி பால்யத்திலேயே படாடோப வாழ்க்கையை வெறுத்து கிராம சீர்திருத்தமே தேச சேவையில் முக்கியமென்று உலகம் போற்றக் கூடிய உத்தமர்களின் உபதேசங்களைக் கேட்டு தனது வாழ்க்கையைக் கிராம மக்களிடையே பணியாற்றி வருவதில் காலம் கழித்து வருகிறான். நல்ல தம்பிக்கு ஜமீன் பதவி கிடைத்தது பற்றி கிராம மக்கள் அளவில்லாத ஆனந்தமடைகிறார்கள்.

சொப்பனபுரி ஜமீனிலுள்ள அட்டகாச செயல்களை எல்லாம் நேரில் கண்ட நல்லதம்பிக்கு மனம் வெறுப்படைகிறது. மனிதனை மனிதனாக மதியாமல் வாழும் **மதோன்மத்தர்**களிடையே மறுமலர்ச்சி உண்டாக்க முயற்சிக்கிறான். உழைப்பாளர்களின் பெருமையை உணராது, உல்லாசபுரியில் வாழும் உலுத்தர்களுக்கு உணர்வு ஊட்டத் திட்டம் போடுகிறான். நல்ல தம்பியின் திட்டங்கள் ஆர்ப்பாட்டக்காரர்களுக்கு அதிர்ச்சியை உண்டாக்குகிறது.

தனது ஆடம்பர வாழ்க்கைக்கு அஸ்தமனம் ஏற்பட்டுவிடுமென்று பூபதியும் கலக்கமடைகிறான். நல்ல தம்பியைப் பற்றி பல புகார்களைப் புஷ்பாவிடம் சொல்லிப் பதவியை அவனிடமிருந்து பறித்துவிட யோசனை செய்கிறான்.

இதனால் நல்லதம்பிக்கு இடைக்காலங்களில் தோன்றும் இடைஞ்சல்களைக் கிராம சேவையில் எடுபட்டு வந்த அவனது தோழி ஒருவள் தடுத்து வருகிறாள். கிராம மக்களுக்கு வேண்டிய உதவியையும் அவள் மூலமாகவே செய்து வருகிறான். தனது தோழியை ஜமீனில் டைப்பிஸ்டு வேலை கொடுத்து தனது பக்கத்திலேயே இருக்கவும் ஏற்பாடு செய்கிறான்.

இவர்களின் ரகசிய வாழ்க்கை புஷ்பாவுக்குத் தெரியவே பூபதி சொன்னதை உண்மை என்று எண்ணுகிறாள். பூபதிக்குப் புஷ்பா கைப்பம்பரமாகிறாள். நல்லதம்பி ஜமீனின் பழைய முறைகளை மாற்றுகிறான்.

கிராமங்களில் கூட்டுப்பண்ணை முறையை அமைத்து நாட்டு மக்களிடம் நன்மதிப்பைப் பெறுகிறான். புஷ்பாவும் பூபதியும் இந்த புதிய முறையைக் கண்டு இன்னும் ஆத்திரமடைந்து நல்லதம்பிக்கு புத்தி சுவாதீனமில்லை என்றும் இந்தப் பதவி வகிப்பதற்குத் தகுதியும் ஆதாரமும் இல்லாதவன் என்றும் சட்டநிபுணர்களைக் கலந்து வழக்குத் தொடர்கின்றார்கள். முடிவில் நல்லதம்பி வெற்றி அடைகிறான். இதுதான் கதை.

இது முழுக்க முழுக்க என்.எஸ்.கே. படம் ஆயிற்று. அவருக்கும் ஏகப்பட்ட ஆசைகள். அப்போது தேசத்தில் பேசப்பட்டு வந்த ஜமீன் ஒழிப்புப் பிரச்சாரத்துக்காகக் கதை, ஏழ்மையைக் கண்டு இரங்கியதால் அதற்கான காட்சிகள், மதுவிலக்குப் பிரச்சாரத்துக்காக ஒரு தெருக்கூத்து, காந்திஜியின் தீண்டாமை ஒழிப்புக்காக 'கிந்தனார் கதா காலட்சேபம்', வளர்ந்து வரும் திராவிட இயக்கத்தாருக்காக அண்ணாவின் வசனங்கள்.

சில காட்சிகள் சிறப்பானவை. சான்றுக்கு ஒன்று. கிராமத்தில் தாயையும் மகளையும் காண ஒருவர் வருகிறார். தாய் வாசலிலேயே நிற்கிறாள். மகளைக் கூப்பிட்டாள். "இதோ வர்றேம்மா", குரல் மட்டும் கேட்கிறது. "உம் மகளை வரச்சொல்லேன்", "இதோ அனுப்புகிறேன்" என்று தாய் உள்ளே போகிறாள். சில நிமிடங்களுக்குப் பிறகு மகள் வருகிறாள். தாய் உள்ளே போகும்போது உடுத்தியிருந்த புடவையை இப்போது மகள் கட்டியிருக்கிறாள். தாய்க்கும் மகளுக்கும் உடுத்துவதற்கு இருப்பது ஒரே புடவை என்பதை இக்காட்சி காட்டுகிறது. கண்களைக் கசியவைக்கும் காட்சி, எனினும் இது கலைவாணர் படம்தான்.

அதனால்தான் அண்ணாவிடம் இப்படம் பற்றி கேட்டபோது, "கிந்தனார் கதா காலட்சேபத்திற்கு இடையில் என் கதையும் சாமர்த்தியமாக அடைக்கப்பட்டது" என்று பதில் சொன்னாராம். எனினும் நல்ல கருத்துகளை நகைச்சுவை கொண்டு கதாநாயகன் பாத்திரம் தாங்குவோர் மூலமாக சொல்ல முடியும் என்பதை முதன்முதலில் அண்ணா சொல்லியிருக்கிறார்.

## வேலைக்காரி

இது முதலில் நாடகமாக நடிக்கப்பட்டது. ஜுபிடர் பிக்சர்ஸ் படமாகத் தயாரித்தபோது, அண்ணா திரைப்படத்திற்கென தேவையான மாற்றங்களைச் செய்து கொடுத்தார். வேலைக்காரியின் கதை அமைப்பு உரையாடல் எல்லாமே மக்களிடையே பெரும் பரபரப்பையும் விழிப்புணர்ச்சியையும் ஏற்படுத்தின. நீதிமன்ற காட்சிகள் எப்படி அமைக்க வேண்டும் என்பதற்கு 'வேலைக்காரி' ஒரு முன்னுதாரணம். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற தனது சமதர்மக் கொள்கையைக் கட்டுக்கோப்பான கதை உருவில் அண்ணா இதில் சொல்லியிருக்கிறார். இதுவே அண்ணாவின் முதல் திரைப்படம்.

அண்ணா சாதாரண பெயரையே இதற்குத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். வாழ வேண்டியவர்கள் வாழ்விழந்து தவிப்பதையும் ஏற்றத்தாழ்வு கற்பித்து ஒரு சிலர் அவர்களை ஏமாற்றி வாழ்வதையும் சுட்டிக்காட்டி ஏற்றம் பெற

எழுச்சி கொள்ளச் செய்யவேண்டும் என்ற நல்ல எண்ணம்தான் இதற்குக் காரணம்.

"சட்டம் ஒரு இருட்டறை. அதில் வக்கீலின் வாதம் ஓர் விளக்கு. ஏழையால் அந்தப் பிரகாசமான விளக்கைப் பெற முடியாது" என்பது மிகப் பிரபலமான வசனம்.

"ஆயிரம் கண்ணுடையாள் என்று அர்ச்சிக்கிறார்களே உன்னை. அதில் ஒரு கண்ணால் பார்க்கக் கூடாதா இந்த ஏழைபடும் அவதியை. உன்னை பக்தியோடு பூஜித்தால் பலன் உண்டு என்று சொன்னார்களே. நான் பூஜித்துக் கொண்டு கண்ட பலன் என்ன?" என்பது பரபரப்படைய செய்ய வைத்த வசனம்.

ஆனந்தனின் நீண்ட நெடிய வசனம் திரையில் ஒலித்த போது அரங்கம் அமைதியில் ஆழ்ந்தது. ஆனந்தனின் பேச்சு தீமைகளைச் சுட்டது; புரட்சி ஒளி ஊட்டியது.

சரசா : ஆமா. இப்போ நான் சனியனாகி விட்டேன். அப்போது அப்சரசாக இருந்தேன்.

பரமானந்தன் : அப்போது, கழுதை கூடத்தாண்டி அழகாயிருக்கும் குட்டியாக இருக்கும்போது. இப்படி சுருக்கமான - சுருக்கென்ற வசனங்களும் உண்டு.

வேலைக்காரி பெரும் அளவில் வெற்றி பெற்றது மட்டுமில்லாமல் மக்களிடையே ஒரு சிந்தனைப் புயலையும் கிளப்பிவிட்டது. கடவுள் பக்தனான கதாநாயகன் தான் பூஜித்து வந்த காளி தனக்குக் கேட்டதைக் கொடுக்கவில்லையென்று வெறுப்பு அடைந்து அது கோப வெறியாக உருவெடுத்து காளி சன்னதியில் குழப்பத்தை உண்டாக்குகிறான். பூமாலைகளை வீசி எறிகிறான். தட்டுத் தாம்பாளங்களைத் தள்ளி விடுகிறான். இப்படி ஒரு காட்சியைத் தமிழ்த் திரையுலகம் அதுவரை கண்டதில்லை. அண்ணா சுயமரியாதை திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர். ஆகவே அவர் தன் படத்தில் நாத்திகத்தைப் புகுத்திவிட்டதாகப் புலம்பினார்கள். அண்ணாவோ இது நாத்திகம் அல்ல பகுத்தறிவுவாதம் என்றார்.

கொலையுண்ட சாமியாரைப் பற்றி கோர்ட்டிலே ஆனந்தன் முழங்குவான். "ஆஸ்ரமத்தைக் கண்டோம். கடவுள் அருளுக்கு வழிகாட்டப்படும் இடம் என்று பாமரர் நம்பும் காமவேள் நடன சாலையாகி இருக்கக் கண்டோம். இளித்த வாயர்களுக்குப் பகலிலே உபதேசம்; இன்பவல்லிக்கு இரவிலே சரசமாம். குருடனுக்குக் கோல் தேவையாக இருப்பது போல் ஊரை ஏமாற்றிக் குடிகெடுப்பவனுக்கு வேஷம் தேவைப்படுகிறது. வேஷம் அணியாத வேதாந்தி மோடி செய்யாத மாது, ஜோடி இல்லாத மாடப்புறா, சேடி இல்லாத ராஜகுமாரி இருக்க முடியாதாம். ஹரிஹரதாஸ் இத்தகையதோர் வேஷதாரி. இந்த ஆஸ்ரமத்திலே காதினிலே குண்டலம் ஆட, கனத்த சாரீரம் பாட, காய்ச்சிய பால் தொண்டையிலே ஓட, கண்கள் கதியற்ற கன்னியரை நாட, கடவுள் வழிகாட்டப்பட்டதாம்."

இது வேஷதாரிகளின் முகமூடிகளைக் கிழிக்கும் முயற்சி. இவ்வாறு அண்ணா அடுக்காக வசனங்களை எழுதிக் குவித்தார். இயக்குநர் ஏ.எஸ்.ஏ.சாமி, “எதை வெட்டுவது எதை எடுத்துக் கொள்வது என்று எனக்குச் சங்கடமாகி விட்டது. உரையாடல்கள் அவ்வளவும் கருத்துகள் நிறைந்தனவாக இருந்ததே அதற்குக் காரணம்” என்று கூறியுள்ளார்.

இவர் இந்தப் படத்துக்குக் கதை வசனம் எழுதியது ஒரு தனிக்கதை. இதனை ஏ.எஸ்.ஏ. சாமி, தன் **‘பொம்மை’** இதழ் தொடர்கட்டுரையில் விரிவாகக் கூறியுள்ளார். “ஒவ்வொரு நாள் மாலையிலும் நண்பர்களுடன் ஏதாவது சினிமா பார்க்க வேண்டும் அண்ணாவுக்கு. காலை முதல் அது வரை ‘வேலைக்காரி’யைப் பற்றி ஒரு பேச்சும் இருக்காது. இரவு உணவு அருந்திய பின் படுக்கை விரித்து மடியிலே ஒரு தலையணையை வைத்துக் கொண்டு எழுத உட்காருவார். அண்ணாவுக்கு அப்போது தேவைப்படுவதெல்லாம் ஒரு ஃபிளாஸ்க் நிறைய டீ, வெற்றிலை பாக்கு, பொடி! நிறைய பேனாவும் பேப்பரும் வைத்துவிட்டு நான் பக்கத்திலே உட்கார்ந்து கொள்வேன். அண்ணா எழுதத் தொடங்குவார். நள்ளிரவு வேளையிலே, நிசப்தமான அமைதியிலே கிரீச் கிரீச்சென்று பேனா ஓட்டத்தின் சத்தம் மட்டுமே கேட்டுக் கொண்டிருக்கும் சிந்திப்பதற்காக ஒரு நொடிப் பொழுதேனும் அண்ணா எழுதுவதை நிறுத்தியதை நான் ஒரு நாள் கூட பார்த்ததில்லை. விடியற்காலை இரண்டு அல்லது மூன்று மணிவரை எழுதுவார். காலையில் எழுந்து பார்த்தால் நூறுக்குக் குறையாமல் இரு நூறு பக்கங்கள் வரை வசனங்கள் எழுதப்பட்டிருக்கும். இப்படியாக ‘வேலைக்காரி’க்கான வசனங்கள் முழுவதையும் ஒரே வாரத்தில் எழுதி முடித்தார். எழுதிய பக்கங்கள் ஆயிரத்துக்கும் அதிகம். எழுதிக் கொடுத்துவிட்டு காஞ்சிபுரம் சென்றுவிட்டார்” அண்ணாவின் எழுத்து வேகம் இது.

இப்படத்தைக் கலைவாணர் தயாரிப்பதற்கு ஆசைப்பட்டார். ஆனால் அந்த வாய்ப்பு அவருக்குக் கிடைக்கவில்லை. எனினும் படத் தொடக்க விழாவில், “இந்த வேலைக்காரி பொல்லாதவள் என்னை விட்டுவிட்டு எங்கெங்கோ சுற்றிக் கொண்டிருக்கிறாள்” என்று நகைச்சுவையோடு பேசிச் சமாதானப்பட்டுக் கொண்டாராம். (எஸ். குரு. கணையாழி, ஜூன் 1998)

## ஓர் இரவு

இது முதலில் நாடகமாக நடிக்கப்பட்டது. பின்னர் ஏ.வி.எம்.மால் திரைப்படம் ஆனது. இதற்காக இவர் 40 ஆயிரம் பெற்றது தமிழ்த் திரை உலகில் முதல் சாதனையாகும்.

நிலக்கிழார்கள், பணக்காரர்கள் பெண் இனத்திற்குச் செய்யும் கொடுமைகளையும் ஏழைகள் புலியின் கையில் சிக்கிய மானாக நசுக்கப்படுவதையும் செல்வர்களின் இரவு களியாட்டங்களையும் அவர்களின் புற வேடங்களையும் அகவாழ்வின் இழுக்குகளையும் அம்பலப்படுத்திற்று ஒரு இரவுக்குள் கதை தொடங்கி முடிவதாக அமைக்கப்பட்டது ஒரு புதிய உத்தியாகும்.

இப்படத்தில் ஒரு திருப்புக் காட்சி (Flash Back) உத்தியை முதன் முதலாகப் பயன்படுத்தியதும் இதில்தான். பாத்திரங்களை அறிமுகப்படுத்துவதில் வாழ்க்கையை அப்படியே அப்பட்டமாகப் படம் பிடித்துக்காட்டும் முறையில் அடுக்கடுக்காகத் திருப்பங்களை அமைத்து விறுவிறுப்புடன் கருத்துச் செறிவுடன் கதையைக் கொண்டு செல்கிறார்.

'ஓர் இரவு' நாடகத்தின் வெற்றியைப் பார்த்த ஏ.வி. மெய்யப்ப செட்டியார் காரைக்குடி சுப்பையாவோடு போய் நாடகத்தைப் பார்த்தார். திரைப்படமாக்கினால் நல்ல வெற்றி பெறும் என்று நம்பினார். திராவிட இயக்கத்தின் வளர்ச்சியும் அவரைக் கவர்ந்தது. காரைக்குடி சுப்பையாவோடு திருச்சிக்குப் போய் அண்ணாவின் சம்மதத்தைப் பெற்றார்.

ப. நீலகண்டன் இப்படத்தை இயக்கிட முன் வந்தார். அண்ணாவும் ஏ.வி.எம். ஸ்டுடியோவிற்கே வந்து எழுதினார். இதைப் பற்றி விபரமாக ஏ.வி.எம். செட்டியார் 'எனது வாழ்க்கை அனுபவங்களில்' கூறுகிறார்: "அண்ணா இரவு டிபன் சாப்பிட்டு விட்டு, 'எனக்கு ஒரு செம்பில் தண்ணீர், டம்ளர், வெற்றிலை, பாக்கு, புகையிலை கொண்டு வாருங்கள். பாயும் உட்கார்ந்து எழுத ஒரு மேசையும்-தரையில் வைத்து எழுதும் மேசை-கொடுத்து விடுங்கள். நீங்கள் எனக்காக யாரும் காத்திருக்க வேண்டாம். இந்தக் கதையை எழுதி முடித்துவிட்டு காலையில் உங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேன். நான் காலம்பர கொஞ்சம் லேட்டாகத்தான் எழுந்திருப்பேன். அப்பொழுது என்னை வந்து சந்தித்தால் போதும்' என்று சொன்னார். அவர் இரவு பத்து மணிக்குப் பேப்பர்களுடன் உட்கார்ந்தவர் சுமார் 300 பக்கம்-அதாவது முழுக் காகிதங்கள் அல்ல-அரைக் காகிதங்கள், ஓர் அடித்தல் திருத்தல் இல்லாமல் 'ஓர் இரவு' கதையைச் சினிமாவுக்கு வேண்டிய முறையில் எழுதி முடித்துவிட்டார். நீல கண்டனைக் கூப்பிட்டு, '300 பக்கங்கள் எழுதியிருக்கிறேன். சினிமாவுக்கு ஏற்ற வகையில் இன்னும் ஏதாவது மாறுதல் செய்து கொள்ள வேண்டும் என்றாலும் நீ தாராளமாகச் செய்து கொள்ளலாம். உனக்கு என்னுடைய போக்குத் தெரியும். பாங்கு தெரியும். நீயே இதை டைரக்ட் பண்ண வேண்டும்' என்றாராம்."

## சொர்க்க வாசல்

இது 1954இல் வெளிவந்த பரிமளம் பிக்சர்ஸ் படம் இதனை அண்ணா 'மதிவாணன்' என்ற பெயரில் முதலில் நாடகமாக எழுதினார் அப்போது அவரது மனதில் எம்.கே. தியாகராஜபாகவதர் கதாநாயகனாக இருந்தாராம். நாத்திகவாதக் கதை என்பதால் பாகவதர் மறுத்துவிடவே கே.ஆர். ராமசாமி நடித்தார்.

"சொர்க்கமென்று சொல்லி சூதுக் கோட்டை கட்டினான் மடாதிபதி...... மன்னன் அவனுக்குத் துணை நின்றான். மக்கள் கவி அதனைச் சுக்கு நூறாக்குகின்றான். கோதான புரட்டு பழங்கால விளக்கம். அருள்விற்கும் அக்கிரமம் போலிச் சாதுவின் மோசடி. காதலும் கடமையும் அறிவியக்கம் தரும் பழந்தமிழரின் நெறி. கலைவலையுடன், மதம் அறநெறியின் மாண்பு,

அறப்போர் உள்ளம், மக்களாட்சி மாண்பு அரிய விருந்து மகிழ்ச்சி பொங்கும் மதி துலங்கும்" என்று விளம்பரம் செய்தனர்.

சோழ நாட்டைச் சேர்ந்த வள்ளியூரில் பாவலன் மதிவாணன் தன் தாயுடனும் தங்கை திலகவதியுடனும் வாழ்ந்து வருகிறான். திலகாவை வில்வக்காட்டு நிலக்கிழார் மகன் முத்து மாணிக்கம் விரும்புகிறான். ஆனால் ஏழை திலகாவைத் தன் மகன் மணப்பதைத் தந்தை மறுக்கிறார். திலகாவின் எடைக்கு எடை தங்கம் தருவதானால் முத்து மாணிக்கத்தை மணக்கலாம் என்று தடை போடுகிறான் செல்வன். மதிவாணன் பொன்னையும் பொருளையும் சேர்க்கிறான். ஆனால் முத்து மாணிக்கம் வில்வக்காட்டு நிலக்கிழாரின் பெண்ணை மறுக்கவே வில்வக்காட்டாரால் சோழநாதர் கொல்லப்படுகிறார். தந்தையைக் கொன்று வில்வகாட்டாரை எதிர்த்ததால் கொடுமைபடுத்தப்பட்டு அழகைச் சிதைத்து வீட்டில் விடப்படுகிறான். இடையில் அவன் சோலைநாட்டு கலை விழாவிற்கு அனுப்பப்படுகிறான். அரசியை மணம் பேசித் தன்னாட்டு அரசனுக்கு மணத் தூதுவனாகிறான். இவன் அரசியின் காதலன் ஆக நாட்டில் பெரும் எதிர்ப்பு. அரசி முடி துறக்க ஒப்புக்கொள்ள மதிவாணன் நாடு திரும்புகிறான். அரசன் அவனை வஞ்சனையாக வீழ்த்த நினைக்கிறான்.

சோலை நாட்டின் மீது ஒருவன் படை எடுக்க, அரசி முடி துறக்காமல் போரில் ஈடுபட்டு வேழப் படையின் உதவியுடன் வெற்றி பெறுகிறாள். வேழ நாட்டில் அருமறையானந்தர் மதத்தின் பேரால் 'சொர்க்க வாசலுக்கு' சீட்டு விற்கிறார். மக்களின் எதிர்ப்புக்கு மதிவாணனின் ஆசிரியர் பாவேந்தர் தலைமை தாங்குகிறார். ஆனால் கயவர் கூட்டமும் அரசனின் கையாள்களும் பாவேந்தரைக் கொல்கின்றனர். பின்னர் மதிவாணன் புரட்சிக் கூட்டத்திற்குத் தலைமை தாங்குகிறான். அவனது பாடல்கள் புரட்சிக் குழுவின் தீப்பந்தமாகிறது. அருமறையானந்தரின் கைப்பாவையாக அரசு மாறுவதை மதிவாணன் எதிர்க்க, அவன் நாடு கடத்தப்படுகிறான். அவனது பெற்றோர் சிறையில்; வீடு பறிமுதல் செய்யப்படுகிறது. மதிவாணனின் பாடல்களால் நாட்டில் புரட்சி வெடிக்கிறது மன்னன் திலகவதியைக் கற்பழித்து காட்டில் துரத்திட, அவள் பித்துற்று வேட்டைக்குச் சென்ற வெற்றிவேலனைக் கொன்று விடுகிறாள்.

மன்னனது மரணச் செய்தியைக் கேட்டு சோலை நாட்டரசி வேழநாட்டிற்கு வர, மதிவாணன் நிலைகண்டு மனம் நோகிறாள். மதிவாணன் மீண்டும் நாட்டிற்கு வர சோழநாட்டரசி பட்டத்தைத் துறந்து மதிவாணனை மணக்கிறாள். மக்களாட்சி மலர்கிறது.

இதுதான் 'சொர்க்க வாசல்' கதை. இதில் திராவிட இயக்கம் நாத்திக இயக்கமல்ல என்ற கருத்து வலியுறுத்தப்பட்டது. 'கதை வசனம்-அறிஞர் அண்ணா' என்று முதல் தடவையாக இந்தப் படத்தில்தான் விளம்பரம் செய்யப்பட்டது.

"நான் நாத்திகன் அல்ல வேந்தே, நாத்திகனல்ல. கடவுளை மறுக்கவில்லை. பாபம் புரியும்படி தூண்டவில்லை. சத்தியம் வேண்டாமென்று சொல்லவில்லை. சன்மார்க்கம் ஏன் என்று கேட்கவில்லை. சாந்தம், ஒழுக்கம்,

அன்பு, தயை, நீதி, நேர்மை எதையும் நான் எதிர்க்கவில்லை" என்பது மதிவாணனின் கூற்று மட்டுமன்று; அண்ணாவின் கூற்றும் கூடத்தான்.

"கிறிஸ்தவ மதத்தில் மார்ட்டின் லூதர் காண விரும்பிய மாற்றத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதினார். தமிழில் நிலவிய ஆன்மீகச் சூழ்நிலைக்கு ஏற்ப அந்த வரலாற்றுச் சம்பவத்தை மாற்றி அமைத்துக் கொண்டார்" என்பது இப்படம் பற்றிய கருத்தாகும்.

இப்படம் தணிக்கை செய்யப்பட்டபோது அந்தத் தணிக்கை அதிகாரியிடம் அண்ணா மூன்று நாட்கள் வாதாடினார். ஒன்றும் பயன்படவில்லை அந்த அதிகாரி மிகவும் நெஞ்சழுத்தத்தோடு, ஆனால் மனம்விட்டு நேர்மையாகவே கூறிவிட்டார். 'நீ எழுதுகிறாய். ஆகவேதான் இப்பகுதிகளை வெட்டுகிறேன்' என்று (பரிசு, ப.194).

## ரங்கோன் ராதா

அண்ணாவின் நாவலைக் கலைஞர் திரைக்கதை வசனம் அமைத்திட திரைப்படமாகி 1955இல் வெளியானது.

சமுதாயத்தில் மலிந்து காணப்படும் மூடநம்பிக்கைகள் முறையற்ற போக்குகள் ஆகியவற்றால் குடும்பம் குலைவதையும் பெண்கள் துன்பக் கடலில் தத்தளித்து துயருறுவதையும் இப்படம் விவரிக்கும்.

"பேசும் பொற் சித்திரத்தை
பெண்கள் குல திலகத்தை
பேயாக்கி மகிழும்
பித்தனின் வெறி விளையாட்டு
பெண்ணடிமை தீருமட்டும்
பேசுந் திருநாட்டில்
மண்ணடிமை தீர்வதில்லை"

என்று பாடம் போதிக்கும் அறிஞர் அண்ணாவின் பொன்னோவியம் என்று பத்திரிகை, சுவரொட்டி போன்றவற்றில் விளம்பரம் வந்தது.

இப்படம் ஏ. காசிலிங்கத்தால் இயக்கப்பட்டது. தன் சொந்த மைத்துனியின் மேல் ஆசைகொண்டு தன் மனைவிக்குப் பேய் பிடித்ததென்று பொய்யாய் கதை கட்டிய கோட்டையூர் தர்மலிங்க முதலியார் வேடத்தில் சிவாஜி; பேயோட்டியாக கலைவாணர், பேய் பிடிக்கப்பட்டவளாக பானுமதி.

இப்படத்தில் பானுமதியின் நடிப்பைப் பார்த்த அண்ணா "நடிப்புக்கு இலக்கணம் வகுத்த நடிகை" என்று பாராட்டினார்.

ரங்கோன் ராதா எனும் பெண்ணிடம் நாகசுந்தரம் மயங்க, பின்னர் அவள் தன் சகோதரி என்றும் தாயின் இரண்டாவது கணவருக்குப் பிறந்த பெண் என்றும் அறிகிறான். மூடபக்தி, பெரிய மனிதர்களின் உண்மை வாழ்க்கை இவற்றை அம்பலப்படுத்துவதுதான் இந்தக் கதை

1959இல் அறிஞர் அண்ணாவின் 'தாய் மகளுக்குக் கட்டிய தாலி' என்ற சிறுகதை திரைப்படமாயிற்று. மணமாகாத தன் மக்களுக்குப் பாதுகாப்பு

கருதி ஒரு தாயே தன் மகளுக்குத் தாலியைக் கட்டி விடுவதுதான் கதை. இராம அரங்கண்ணல் வசனம் எழுதினார். எம்ஜி.ஆர் நடித்திருந்தார்.

"புராண சகுந்தலையை சோஷியலாக மாற்றிய கதை அமைப்பு உடையதாகக்கூட இப்படத்தைச்சொல்லாம்" என்பார் க. திருநாவுக்கரசு (ப.40)

ப நீலகண்டன் இயக்கினார் எனினும் இது வெற்றிப் படமாக அமையவில்லை

சீமான் சுந்தர முதலியார் தன்னை எதிர்த்த திருவேங்கடத்தை அடியாட்களை வைத்து கொலை செய்யத் தூண்டுகிறார். அடிபட்டு வீழ்ந்த திருவேங்கடத்தை அடியாட்கள் ஆற்றில் தூக்கி எறிகின்றனர். திருவேங்கடத்தின் குடும்பத்தை ஊரைவிட்டே ஓட்டுகிறார் முதலியார். அனாதையாக்கப்பட்ட தனபாக்கியம் ஆப்பம் சுட்டு விற்று, ஒரே மகள் சுந்தரியுடன் வாழ்ந்து வருகிறாள். காமுகர்களின் பார்வையிலிருந்து தன் மகளைப் பாதுகாக்க தானே ஒரு தாலியைக் கட்டிவிட்டாள். சாதி வேற்றுமைகளைக் கடந்து சுந்தரியை மணக்க லோகு முதலியாரின் மகன் கனகசுந்தரம் முன் வருகிறான். எனினும் சீமான் முதலியார் இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறார்.

இப்படிக் கழகப் பிரச்சாரம் எதுவுமில்லாத கதை.

**'நல்லவன் வாழ்வான்'** நா. பாண்டுரெங்கனின் கதை. அண்ணா இதற்குத் திரைகதை வசனம் எழுதினார். இதில் எம்ஜி.ஆரும் எம்.ஆர். ராதாவும் நடித்தனர். 1961இல் இப்படம் வெளிவந்தது.

நல்லவன் முத்து; ஊருக்கு உழைப்பவன். நல்லசிவம் நடமாடும் பாம்பு. அவனது கோரப்பிடியிலிருந்து தப்பிவந்த அழகி சந்திராவை முத்து காப்பாற்றுகிறான். பின்னர் அவளைக் காதலித்து திருமணம் செய்து கொள்கிறான்.

அவர்களது முதலிரவின் போது, ஒரு கிழவி வந்து முத்துவின் உடன்பிறவா சகோதரிக்கு நல்லசிவம் வீட்டிலே ஆபத்து என்று கூறுகிறாள். நல்லசிவம் முத்துவைக் கொல்லச் செய்த சதியில் வேறு ஒரு கொலை நடக்க முத்து கொலையாளியாக்கப்படுகிறான். கைது செய்யப்பட்ட முத்து, தீமைகளை எதிர்த்துப் போராடுவதுதான் கதை.

தீமையை எதிர்த்துப் போராடவேண்டும், நல்லவற்றை நிலைநாட்டப் பாடுபடவேண்டும், எத்தியாகம் செய்தேனும் நன்மை புரியவேண்டும் என்ற பண்புகளை இப்படம் வற்புறுத்தியது.

**'எதையும் தாங்கும் இதயம்'** ஜி.ஏ பாலசுப்பிரமணியத்தின் நாவல். இதற்குத் திரைக்கதை வசனத்தை அண்ணா எழுதினார் எஸ்.எஸ்.ஆர். நடித்தார். இது 1962இல் திரைப்படமாக வெளிவந்தது.

**'காதல் ஜோதி'** எனும் அண்ணாவின் நாடகம் கே.ஆர்.இராமசாமி அவர்களால் நடிக்கப்பட்டது. அண்ணாவின் மரணத்துக்குப்பின் 1969இல் திரைப்படம் ஆயிற்று. நடிகர் ரவிச்சந்திரன் இதில் கதாநாயகனாக நடித்தார்.

நாட்டிலே சாதிதான் மக்களுக்குள் பேதம் ஏற்படுத்தும் முதல் சாதனம்; மக்களின் ரத்தத்திலே கலக்கப்பட்டிருக்கும் கடும்விஷம். மனத்திலே முடக்கு நோயைப் புகுத்திவிட்ட முறை எனவேதான் பேதமற்ற சமுதாயத்தை சமத்துவத்தை சமதருமத்தை நாம் காண வேண்டுமானால் முதலில் சாதியைத் தொலைத்தாக வேண்டும் என்பது இவரது கதையின் கருத்து.

**'வண்டிக்காரன் மகன்'** எனும் அண்ணாவின் கதை, கலைஞரால் திரைக்கதை வசனம் எழுதப்பட்டு, 1978இல் திரைப்படமாக வந்தது. அமிர்தம் இயக்க, ஜெய்சங்கரும் ஜெய்சித்ராவும் நடித்தனர்.

"பொங்குகடல் நடையும் பூவையரின் மென் நடையும் தன் புதுத்தமிழ் நடையில் காட்டியவர். பொல்லாங்கு உரைப்போரை வாதத்தில் மாட்டியவர். பொடி எடுத்துப் போடும் நேரம் புன்னகையால் பொடியாக்கி வாட்டியவர். புழுதி குணம் படைத்தோரை ஓட்டியவர். பொன் மகுடம் தமிழ்த்தாய்க்குச் சூட்டியவர். எழுதுகோல் வைத்திருந்த அண்ணா, அது ஏமாந்த தமிழர்களின் தலையெழுத்தை மாற்ற தாளில் உழுதகோல். அந்த எழுதுகோல் படைத்ததுதான் காஞ்சி இதழில் நாம் கண்ட கைவண்ணம்" என்பார் கலைஞர்.

ஜமீன் பூபதிக்கு எதிராக அவரால் பழிவாங்கப்பட்ட வண்டிக்காரனின் மகன் போராடி வெல்வதுதான் கதை.

பிற்காலத்தில் வந்த நல்லவன் வாழ்வான், தாய் மகளுக்குக் கட்டிய தாலி, காதல் ஜோதி, வண்டிக்காரன் மகன் எல்லாமே ஏதாவது ஒரு வகையில் அவரது புரட்சிக் கருத்துக்களைத் தாங்கி வந்தன.

'பதி பக்தி' என்ற படத்தைப் புத்தா பிக்சர்ஸார் தயாரித்தனர். அத்திரைப்படத்திற்கான காட்சிகள் எப்படி அமையவேண்டும் என்பதற்கான ட்ரீட்மென்ட்களை அண்ணாதான் எழுதினாராம். சிலமணி நேரங்களுக்குள் எழுதிக் கொடுத்ததாக அதன் தயாரிப்பாளர் ஒரு பேட்டியில் பெருமையாகக் குறிப்பிடுகிறார்.

திரையுலகில் மொழி, உத்தி, நடை, கருத்து, புதுமை, பகுத்தறிவு என்கிற பாங்கில் அவரது ஆக்கங்கள் நிறைவுற்று விளங்கின என்பர்.

வாசன் 'ஔவையார்' படத்தை எடுத்தபோது மடாதிபதிகள் வாழ்த்தி வரவேற்றுப் பொன்னாடை போர்த்தினர்; மதவாதிகள் பாராட்டினர். காரணம் ஔவையார் படத்தின் மூலம் பிள்ளையார் பெருமை வளருகிறது; சைவத்தின் மேன்மை காட்டப்படுகிறது; ஆஸ்திகம் தழைக்க உதவுகிறது. இப்படத்தை எடுக்க 40 லட்சம் ரூபாய் செலவாகியது. எதிர்பார்த்த அளவிற்கு படம் வெற்றிகரமாக ஓடவில்லை. 20 லட்சம் ரூபாய் நஷ்டம் வரும் என்று வாசன் அண்ணாவிடம் தெரிவித்தார். அதோடு "படத்தைப் பார்த்தீர்களா? படம் எப்படி இருக்கிறது" என்றும் கேட்டார்.

அண்ணா படப்பிடிப்பு சம்பந்தப்பட்ட சிலவற்றைப் பாராட்டினார். வாசனோ தான் ஔவையார் மூலம் தமிழுக்குத் தொண்டு செய்திருப்பதாக ஒரே ஒரு வார்த்தையைக் கூறும்படி கேட்டார். கூறிவிட்டால் அவர் 40 லட்சம்

போனதைப் பற்றிக் கவலைப்படாமல் பெருத்த மகிழ்ச்சியடைய முடியும் என்று தெரிவித்தார். அண்ணாவால் அந்த ஒரே ஒரு வார்த்தையை மட்டும் சொல்ல முடியவில்லை.

"தமிழுக்கா அப்படத்தின் மூலம் தொண்டு செய்துள்ளார்? இல்லவே இல்லை. மதத்திற்குதானே அவர் பிடித்த 'ஔவையார்' பயன்பட்டது. நாம் நினைக்கும் ஔவையார் வேறு. வாசன் பிடித்த ஔவையார் வேறாயிற்றே. வாசன் படத்தில் சுப்பிரமணியரைப் பார்த்து, படம் பார்ப்பவர் மெய்சிலிர்த்து மயங்கிவிட்டதாகப் படம் பிடித்துப் பத்திரிகையில் வெளியிட்டார்களே" என்று அண்ணா கேட்டார். பதில் இல்லை.

"சினிமாவிற்கும் நாடகத்திற்கும் கதை வசனம் எழுதுவதால் நாடு சீர்பட்டுவிடுமா? மற்றநாட்டில் அப்படி செய்யாத போது அண்ணாதுரை மட்டும் இப்படிச் செய்வது சரிதானா? என்பன போன்ற குறுக்குக் கேள்விகளை நண்பர் சிவஞானம் பொதுக் கூட்டங்களில் மட்டுமே கேட்டு வருகிறாராம். கலைத்துறையில் அண்ணாத்துரை போன்றோர் செல்வாக்குப் பெற்றுவிடுகிறார்களே என்ற பீதிதான் அவரை இப்படி எல்லாம் குறுக்குக் கேள்விகள் கேட்கும்படி செய்திருக்கின்றது. மாசேதுங், ஸ்டாலின், லெனின் போன்றோர் கதை வசனம் எழுதவில்லையென்றால் அவர்களுக்கு அது அவசியமாகவில்லை. மக்களிடத்தில் எந்தக் கலைத்துறை மூலமாக மதமூட நம்பிக்கைகள் புகுத்தப்பட்டனவோ, அதே கலைத்துறையின் மூலம் நாங்களும் சீர்திருத்தக் கருத்துக்களைப் புகுத்தி மக்களிடம் மதவாதிகள் புகுத்தியுள்ள மதமூட நம்பிக்கைகளை முறியடிக்கப் பாடுபடுகிறோம். இதில் தவறென்ன இருக்கின்றது?" என்று அண்ணா பொதுக் கூட்டத்திலேயே கேள்விகளை வைத்தார். (பரிசு. ப.186).

அண்ணா திரைத்துறைக்குள் வேலைக்காரியாக நுழைந்து வீட்டுக்காரி ஆனார் என்று பாராட்டினர். ஏழை பணக்காரன் வேறுபாடு, கடவுள் பக்தியின் பல்வேறு சொரூபங்கள் எனும் சமுதாயப் பிரச்சனைகள் இதில் அலசப்பட்டன. அண்ணாவின் அழகு தமிழும் அன்னநடை போட்டு அடுக்குமொழி அலங்காரங்களோடு மக்களைக் கவர்ந்தது.

ராண்டர்கை கூறுவது போன்று, "தெள்ளு தமிழில் உபமான உபமேயங்களோடு வசனங்களை எழுதி மக்ளைப் பரவசப்படுத்தியவர்கள் டி.வி. சாரி, இளங்கோவன் போன்றோர். என்றாலும் அண்ணாவின் தமிழ் முற்றிலும் வேறுபட்டதாக மக்களுக்கு இனிப்பாக இருந்தது".

திரைப்படம் அண்ணாவின் கட்சிக் கொள்கைகளைப் பரப்பும் ஊடகம் ஆயிற்று. திரைப்படம் என்பது மக்களை மாற்றக் கூடிய அளவுக்குச் சக்தி வாய்ந்த ஒரு சாதனம் என்பது பாமர மக்களுக்கும் புரியத் தொடங்கியது. தமிழ் திரைப்படங்களில் அரசியல் வாடையும் வீசத் தொடங்கியது. இது தமிழ்நாட்டின் சரித்திரத்திற்கே ஒரு திருப்புமுனை.

அண்ணா அவர்களின் அடுக்கு மொழியும் பொருள் பொதிந்த சொற்கட்டும் அவரது வசனங்களுக்குத் தனிச் சிறப்பைத் தந்தன.

திரைப்படங்களின் மகத்தான சக்தியை அவர் பரிபூரணமாக அறிந்து வைத்திருந்தார்

திரைப்படங்களின் மூலம் அழகுத் தமிழை வளர்த்த பெருமை அண்ணா அவர்களுக்கு நிறையவே உண்டு இவர் அமைத்து தந்த பாணியில் பின்னர் பலர் வசனம் எழுதி வெற்றி பெற்றதே இதற்குச் சான்று.

இவர் ‘சாலமனும் ஷீபா நாட்டு அரசியும்’ என்ற ஆங்கிலப் படத்தை இரு நாட்கள் தொடர்ந்து பார்த்துவிட்டு “அங்கும் பாடம் தேடிப் பெறும் பக்குவம் எனக்கு நீண்டகாலம் உண்டு” என்றாராம். இவர் பார்த்தப் படங்கள் மட்டுமல்ல, எழுதிய படங்களும் பாடங்களே.

---

# 7

# 'பத்திரிகைகள்'

தமிழ் மக்கள் நல்வாழ்க்கைக்காகத் தமிழ்மொழியைப் பகைவரிடமிருந்து காப்பதற்காகத் தமிழரசு காண 1935 முதற்கொண்டு நவயுகம், பாலபாரதி, ஜஸ்டிஸ், விடுதலை, குடியரசு, திராவிட நாடு, மாலைமணி, ஹோம் லேண்ட், காஞ்சி, தென்னகம் என்னும் பற்பல இதழ்களில் ஆசிரியராகவும் எழுத்தாளராகவும் விளங்கினார் அறிஞர் அண்ணா.

இப்பத்திரிகைகளில் கட்டுரை, சிறுகதை, ஓரங்கநாடகம், நாடகம், குறும் புதினம், புதினம், விளம்பரம், மடல், உரையாடல், அந்திக் கலம்பகம், சுழல் விளக்கு, திரட்டு, சாவடி, இலக்கியத் திறனாய்வு, அரசியல் ஆய்வு, பொருளியல் ஆய்வு என்றெல்லாம் எழுதித் தமிழுக்கு அணி செய்தவர் அறிஞர் அண்ணா.

அண்ணாவுக்கு முன்பு தமிழ் இதழ்கள் மணிப்பிரவாளத்தினையும் கடுந்தமிழையும் கொச்சை மொழியையும் ஆங்கிலம் மிகுதியாகக் கலந்த தமிழையும் போற்றி வளர்த்தன. அண்ணா எழுதிய இதழுரைகள் பொதுமக்கள் புரிந்து கொண்டு சுவைத்துச் சிந்திக்கத்தக்க கருத்தாழம் மிக்க இலக்கிய மணம் கமழும் நல்ல தமிழில் அமைந்து இதழ் படிப்போர் எண்ணிக்கையை வளர்த்தன. இதழியல் தமிழை நெறிப்படுத்தின; அதனை இலக்கிய வடிவமாக்கின. இதழுரைகளை வெறும் செய்தித் தொகுப்பாக வழங்காது புனைவிலக்கியம் போன்று விறுவிறுப்பான தொடக்கங்கள் முடிவுகளுடன் கலைத்திறன்களையும் சேர்த்து அவர் படைத்தார்.

1937ஆம் ஆண்டு 'பாலபாரதி', 'நவயுகம்' எனும் நாளிகைகளின் ஆசிரியரானார். பெரியாருடன் தொடர்பு ஏற்பட்ட பிறகு 'ஜஸ்டிஸ்', 'விடுதலை', 'குடியரசு' ஆகிய இதழ்களில் துணையாசிரியர் ஆனார். 1942இல் 'திராவிட நாடு' இதழைத் தொடங்கினார். 1949இல் 'மாலைமணி' ஆசிரியர் ஆனார். 1953இல் 'நம் நாடு' இதழில் ஆசிரியர் பொறுப்பை ஏற்றார். 1957இல் 'ஹோம் லேண்ட்' என்ற ஆங்கில இதழுக்கும் ஆசிரியர் ஆனார். 'திராவிட நாடு' இதழ் நின்று போனதும் 1964இல் 'காஞ்சி' இதழைத் தொடங்கி நடத்தி வந்தார்.

### குடியரசு

இது பெரியாரின் இதழ். 1925இல் தொடங்கப்பட்டது. அண்ணா இதன் துணையாசிரியராக இருந்தார். 1939இல் நக்கீரன் என்னும் புனைப் பெயரில் 'பெரியாரும் பிறரும்' என்ற தலைப்பில் கட்டுரை எழுதினார்.

## பாலபாரதி

1935இல் நீதிக் கட்சித் தலைவர் சி. பாசுதேவ் அவர்களுடன் சேர்ந்து 'பாலபாரதி' என்ற கிழமை ஏட்டைத் தொடங்கி அதன் ஆசிரியர் ஆனார். அதில் காரல்மார்க்சின் பொதுவுடைமைத் தத்துவத்தை விளக்கித் தொழிலாளர் எழுச்சிக்குரிய கட்டுரைகளைத் தீட்டினார்.

## நவயுகம்

1937ஆம் ஆண்டு 'நவயுகம்' என்னும் பத்திரிகையின் ஆசிரியர் ஆனார். இது வார இதழ் ஆகும். இதைப் பற்றி காஞ்சி மணிமொழியார் மகன் இளஞ்செழியன் 1937லேயே 'நவயுகம்' என்ற தமிழ் இதழ் ஒன்றை அண்ணா நடத்தியிருக்கிறார் என்பதும் அவருடைய வன்மையை அறியும் ஆற்றல் தமிழ்நாட்டுக்கு இல்லாமல் போய்விட்டது. அது 13 இதழ்களுடன் நின்றுவிட்டது என்கிறார் (அறிஞர் அண்ணாத்துரை, ப.8).

இந்த இதழைத் திரு. காஞ்சி மணிமொழியார் தொடங்கினார். இதுதான் அண்ணாவைத் தமிழ் எழுத்துலகுக்கு அறிமுகப்படுத்தியது.

## திராவிட நாடு

சுதந்திரமான எண்ணங்களை எவரது கட்டுப்பாட்டுக்கும் ஆட்படாமல் வெளியிட வேண்டும் என்ற முனைப்போடு தொடங்கப்பட்ட இதழ் இது. இதில் இவர் பல்வேறு புனை பெயர்களில் வெவ்வேறு இலக்கிய வடிவங்களில் தன்னுடைய எண்ணங்களை வெளியிட்டார். அவற்றில் எழுதப்படும் விஷயங்களின் பாணி மாறும். நடையிலும் வேறுபாடு தெரியும்; அணுகுமுறையிலும் புதுமை இருக்கும்; அழுத்தத்திலும் பேதம் இருக்கும். எதைச் சொல்ல வேண்டும் என்பதில் அவர் தெளிவுடன் இருந்தார். எப்படி சொல்ல வேண்டும் என்பதிலும் அவர் கையாண்ட உத்திகள் நூதனமானவை.

'திராவிட நாடு' பரவாத இடமில்லை. "அப்பத்திரிகைக்கு அப்பெருமை தந்த வித்தகம். திரு. அண்ணாதுரை என்ற உண்மை ஒன்றே அவர் ஆள்வினை அருமைக்கும் உள்ளங்கவரும் உரைவரையும் திறமைக்கும் சான்றாகும்" என்பார் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார்.

இப்பத்திரிகையில் உள்ள ஒவ்வொரு எழுத்திலும் ஜீவகளை ததும்பி படிப்போர் கருத்தை அப்படியே இழுத்து விடுகிறது. பத்திரிகையின் ஜீவாதாரமான தலையங்கங்கள் தனிப் பெருமை பெற்றன. பிற்காலத் தமிழ்நாட்டில் பிரத்யேகமாக பாதுகாக்கப்பட வேண்டிய தங்க இலக்கியங்கள் அவை என்று தாராளமாகச் சொல்லலாம். "தமிழ்நாட்டில் எந்த மூலையிலாவது தமிழர்களில் எவருக்காவது இடுக்கண் வந்துற்ற காலை இழிவு ஏற்படும் வேளை பார்க்க வேண்டும், திராவிட நாட்டை. ஆஹா வீறு கொண்ட தமிழன் உள்ளத்தில் அடித்தட்டிலிருந்து விறுவிறுப்பாகப் பொங்கி வரும் உணர்ச்சி வேகமும் உருக்கமும் தன்மானமும் நிறைந்த பதப்பிரயோகங்கள். அடுக்கு மொழிகளின் பிரவாகப் பெருக்கு," என்பார் கலைவாணர். (அ.அ., ப. 64).

திராவிடநாடு பத்திரிகை உலகில் புரட்சியைச் செய்தது. மேல்நாட்டு நடப்புகள், விஞ்ஞான கருத்துக்கள், பொருளாதார புள்ளி விவரங்கள் இவையெல்லாம் அவரது பத்திரிகைக்கும் புது அமைப்பைத் தந்தன. (அ.அ., ப. 99).

1942 மார்ச்சில் 'திராவிட நாடு' இதழ் தொடங்கப்பட்டது. 25-6-1949இல் இவ்விதழ் தலையங்கத்துக்காக அரசு வழக்கு தொடர்ந்து ரூ. 3000/- ஜாமீன் கட்ட உத்தரவிட்டது. அண்ணா பணத்தைக் கட்டிவிட்டு உயர்நீதிமன்றத்தில் விசாரிக்கும்படி கேட்டுக் கொண்டார். நான்கு மாத சிறைத் தண்டனையையும் பெற்றார்.

திரு. டி.எஸ். பொன்னப்பா பொருளுதவி புரிந்தார். நடிப்பிசைப் புலவர் திரு. கே.ஆர். ராமசாமியும் இதழ் வளர்ச்சிக்கு தொண்டு புரிந்தார். திரு. அங்கமுத்து, திரு. கணேசன் ஆகியோர் இதழைக் கண்ணைக் கவரும் அளவுக்குக் கொண்டுவர உதவினர். அண்ணாவின் புதிய புதிய சிந்தனைகள், கற்பனைகள், தத்துவங்கள், அருவிபோல் பெருக்கெடுத்துப் பாய்ந்தன அந்த ஏட்டிலே.

'திராவிட நாடு' அரியதொரு கருத்துப் பெட்டகமாக, அரசியல் விழிப்புணர்ச்சி, சமூகச் சீர்திருத்தம், பகுத்தறிவு முதலிய செய்திகளைத் தாங்கி வெளிவந்தது. 'தம்பிக்கு' என்ற கடித இலக்கியம் தோற்றம் பெற்றதும் இந்த இதழில் தான்.

இந்த இதழில்தான் அறிஞர் அண்ணா தனது நாவல்களைத் தொடராக எழுதி வந்தார். அவற்றில் கலிங்க ராணி, ரங்கோன் ராதா, குமஸ்தாவின் பெண், பார்வதி பி.ஏ., போன்றவை குறிப்பிடத்தக்கவை.

## விடுதலை

இது செட்டிநாட்டிளவரசரால் 1935 முதல் நடத்தப்பட்ட ஏடு. இதன் துணையாசிரியராக, 1939-ல் அண்ணா பணி புரிந்தார். இதன் பிறகு இவரது எழுத்துக்கள் வேகத்துடனும் விறுவிறுப்புடனும் வெளிவந்தன. அப்போதைய அரசியல் நிலைமையும் சமுதாய ஊழலையும் சுட்டிக்காட்டி கனல் கக்கும் கருத்தோட்டத் தலையங்கங்களை விடுதலையில் தீட்டினார். திருவாரூர் மாநாட்டுக்குப்பிறகு திராவிட நாடு பற்றிய கட்டுரைகளையும் அடிக்கடி அவர் எழுதி வந்தார். அவை படிப்பவர்களிடையே பரபரப்பை உண்டாக்கின. இன உணர்ச்சி, பிரிவினை நோக்கம் ஆகியவை பொங்கி எழுமாறும் தூண்டின.

நீதிக் கட்சியின் பொதுச் செயலாளர் என்ற முறையில் கட்சி ஏடான இதில் சில மணியான திட்டங்களை வெளியிட்டார். திராவிடநாடு திராவிடருக்கே ஆவதற்கு ஆக்கம் அளிக்கக் கூடியன அத்திட்டங்கள். கல்கத்தா காய்ச்சல், ஓமான் கடற்கரையில், ரிப்பன் மாளிகைச் சீமான்கள் என்ற தலையங்கங்கள் பெரிதும் வரவேற்பைப் பெற்றன. ஒருநாள் பெரியார் தனது வயதையும் உடல் துன்பத்தையும் பொருட்படுத்தாது மாடிப்படி ஏறி மூன்றாம் மாடிக்குப் போய் அண்ணாவைப் பாராட்டினாராம்.

தொடக்கக் காலத்தில் விடுதலை நாளேட்டில்தான் அண்ணா தலையங்கள் எழுதினார். அவை தனித் தன்மையோடு, எண்ணங்களைச் சொல்வதில் நளினத்தையும் நடை அழகையும் கைக்கொண்டிருந்தன. அவற்றில் ‘கல்கத்தா காய்ச்சல்’, ‘ஓமான் கடற்கரையில்’, ‘ரிப்பன் மண்டபத்து சீமான்கள்’, போன்றவை பலராலும் பாராட்டப்பட்டன. ‘ஊரார் உரையாடல்’, ‘பரதன் வீரன் வாதங்கள்’ ஆகிய தலைப்புகளில் சிந்தனையைக் கிளரும் செய்திகளை வெளிப்படுத்தினார்.

## மாலை மணி

இது 1949 ஆகஸ்ட் 10ல் தொடங்கப்பட்டது. இதன் ஆசிரியராக அண்ணா இருந்தார். டி.எம். பார்த்தசாரதி பொறுப்பாளர். பொறுப்பாசிரியர் நாவலர் நெடுஞ்செழியன். இதில் மா. செங்குட்டுவனும் பணியாற்றினார். பவளக்காரத் தெரு ஏழாம் எண்ணுள்ள கட்டிடத்தில்தான் அலுவலகம். 30-7-49அன்று கழக முன்னணி வீரர்களின் கூட்டத்தில் இந்த இதழுக்கான முடிவை அண்ணா எடுத்தார். “நமது எண்ணத்தை நாடு அறிய, நமது செயலை எதிரிகள் கண்டு அஞ்சி மனமாற்றம் அடைய, நாம் மேற்கொள்ளும் திட்டத்தில் வெற்றிகாண நமக்கு ஒரு தின இதழ் மிகமிக அவசியம் ஆகிறது. இப்போது நமக்கு இருப்பவை எல்லாம் வார, மாத இதழ்கள் தாம்” என்று எடுத்துரைத்தார்.

பின்னர் இடுக்கண்களுக்கும் இடிபாடுகளுக்கும் இடையே தெளிந்த சிந்தனையோடு நாளேட்டின் ஆசிரியராக செயலாற்ற அண்ணா ஒப்புக் கொண்டார். மாலைமணி ஒலிக்கத் தொடங்கி சில நாட்களுக்குள்ளே கழகத்தவருள் பெரும்பாலான தொண்டர்களுக்குப் பெரியாரிடம் ஏற்பட்டிருந்த மனக் கசப்பும், அண்ணாவிடம் வைக்கத் தொடங்கிய முழு நம்பிக்கையும் நன்கு எதிரொலிக்கலாயின.

தலைவர் பெரியாரின் பொருந்தாத் திருமணத்தால் பகுத்தறிவுக் குழந்தைக்கு விழுந்த சவுக்கடிகளைக் காணச் சகிக்காமல் ஆயிரக் கணக்கானோர் சிந்திய ‘கண்ணீர்த் துளிகள்’ கங்கு கரையற்ற பெரு வெள்ளமாய்ப் பெருக்கெடுத்தோடிய அவலக் காட்சியையும் ‘மாலை மணி’ மூலம் பொது மக்கள் காண முடிந்தது.

## நம் நாடு

15-6-1953இல் ‘நம் நாடு’ என்னும் நாளேட்டைத் தொடங்கி அதன் ஆசிரியர் ஆனார். இது திமு.க.வின் அதிகார நிலை ஏடு. பொதுச் செயலாளரான அண்ணா அதனைச் சிறப்பாக நடத்தி வந்தார்

## காஞ்சி

இது 1964 சூலை 26இல் வெளிவந்தது. அண்ணா அதன் ஆசிரியர். அவர் பிறந்த ஊரின் பெயரே இதழுக்கும் ஆயிற்று.

அரசியல் சட்ட மொழிப் பிரிவான 17வது பிரிவைப் பொது இடத்தில் கொளுத்தும் அறப்போரில், ஆறுமாதத் தண்டனை பெற்றுச் சென்னையிற் சிறையிருந்த அண்ணாவின் அநுபவங்களும் சிந்தனைகளும் 19 கடிதங்களாக அண்ணாவால் 20-9-1964 முதல் 4-4-1965 வரை எழுதப்பட்டன.

கைது செய்தார்கள், கடமை நினைவுகள், வழக்கும் அரசியல் போக்கும், கை வலியும் சிறையின் நிலையும், சிற்றன்னையின் இறுதி, டாக்டர்கள்-தேர்தல் முடிவு-சிறைச்சாலை விதிகள், நாட்டு நிலை- பல நினைவுகள், அடக்கு முறை-குறள்-சிறை நிலை, நினைவலைகள்-கவலைகள், மேயர் தேர்தல்-எம்.ஜி.ஆர், வெற்றிகள் குவிந்தன. நிலவு-கழக வெற்றி-சிறைச்சாலை நிலைமைகள், அரசியல் மற்றும் பல சிந்தனைகள், தியாக வரலாறுகள், பாரதிதாசன் பிரிவு, ஆட்சியாளர் மனப்போக்கு, சிறை நிர்வாகமே தனி, அறப்போர் நினைவுகள், அரசியல் விந்தைகள்...... பண்டித நேரு காலமானார், விலங்கின் கதை-வேதனை நிகழ்ச்சிகள் எனும் தலைப்புகளில் இக்கடிதங்கள் வெளிவந்தன.

## ஆங்கில ஏடுகள்

1938-இல் பெரியார் ஈரோட்டிலிருந்து நடத்திய ஆங்கில ஏட்டின் பெயர் 'ஜஸ்டிஸ்'. இதன் துணையாசிரியர் பொறுப்பை அண்ணா ஏற்றுக் கொண்டார்.

1957 ஜுன் 9ஆம் தேதி அண்ணா 'ஹோம் லேண்ட்' என்னும் ஆங்கில ஏட்டிற்கும் 1962இல் 'ஹோம் ரூல்' என்னும் ஆங்கில இதழுக்கும் ஆசிரியர் ஆனார்.

"திராவிட இயக்கச் சார்பு இதழ்கள் சமூகச் சீர்திருத்தத்தை இலட்சியமாகக் கொண்டு மொழிப்பற்றும் இனப்பற்றும் கொண்டு பண்பாட்டின் சிறப்பை எடுத்து விளக்கின. இராஜாராம் மோகன்ராயின் கருத்துக்களையே வெண்தாடிவேந்தர் பெரியார் போன்றோர் பொது மேடைகளிலும் பத்திரிகைகளிலும் எழுதி சமூக விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினர். சமூகச் சீர்திருத்தம் பற்றிய கதை, கட்டுரைகள், நாவல்கள், புதுக்கவிதை போன்றவற்றைப் படைத்தனர். பெரியார் பெண்ணடிமைத்தனத்தைக் கண்டித்து பெண்கல்விக்கென கல்வி நிறுவனங்களை நிறுவினார். தமிழகத்தில் அரசியல் விழிப்புணர்ச்சிக்கும் சமூகச் சீர்திருத்தத்திற்கும் திராவிட இயக்க இதழ்கள் ஆற்றிய பணி குறிப்பிடத்தக்கது" என்பார் டாக்டர் சு. சக்திவேல் (இதழியல் ப.196).

திராவிட இயக்க இதழ்களில் ஆசிரியராக, துணை ஆசிரியராக, கட்டுரையாளராக, கதாசிரியராகப் பல்வேறு பணிகளில் பெரும் பங்கை ஆற்றினார் பேரறிஞர் அண்ணா.

# 8

# கட்டுரைகள்

## கட்டுரை இலக்கியம்

இவரது கட்டுரைகள் கருத்துக்கோவையன்று; நற்சிந்தனை நிரல் அகமாகவே அமைவன. 1932-ஆம் ஆண்டில் சேஷய்யா சாஸ்திரி கட்டுரைப் போட்டிக்கு **MOSCOW MOB PARADE** என்னும் கட்டுரையை அனுப்பினார். 'தமிழ் அரசு' இதழில் தொடர்ந்து கட்டுரை எழுதினார்.

இவரது கட்டுரைகளில் 'பித்தம் தெளிய மருந்தொன்று இருக்குது' *(13-2-1938)*, 'எல்லாம் ஈசன் செயல்' *(20-2-38)*, 'குற்றால நீர் வீழ்ச்சி' *(27-2-1938)*, 'இருண்ட இந்தியாவில் இன்று நடப்பது' *(13-4-38)*, 'சந்தி சிரிக்குது' *(26-11-39)*, 'பெரியாரும் பிறரும்' *(24-12-39)*, 'பரிவாரத்தின் பதட்டம்' *(24-12-39)* என்பன குறிப்பிடத்தக்கவை.

மயிலை சிவமுத்து கூற்றுபடி 1931ஆம் ஆண்டு மார்ச் மாதம் 19ஆம் நாள் வெளிவந்த 'தமிழரசு' என்னும் வார இதழிலே 'மகளிர் கோட்டம்' என்ற கட்டுரை முதலில் வந்திருக்க வேண்டும். "அந்தக் கட்டுரையிலே நகைச்சுவை நிரம்பி இருந்தது. வீரச்சுவை வீறுபெற்று நிகழ்ந்தது. சொல் அடுக்குகளும் ஆங்காங்கே அழகு பெறத் திகழ்ந்தன", என்றும் கூறுகிறார். இதுவே முதல் கட்டுரை என்று கருதவும் இடமுண்டு. (நான் கண்ட அண்ணா, திராவிடன் பொங்கல் மலர், 1959)

அண்ணா, கல்லூரியில் படிக்கும் போதே கட்டுரை எழுதுவதில் வல்லவராக இருந்தார். ஒரு முறை கல்லூரிப் பேராசிரியர் கட்டுரை எழுதி வருமாறு கட்டளை இட, அண்ணாவும் எழுதித்தர பேராசிரியர் கட்டுரையைத் திருத்தும்போது வியப்படைந்தார். எந்தப் புத்தகத்திலிருந்து குறிப்பெடுத்தாய்? என்று விசாரித்தபோது "சொந்தச் சிந்தனையில் தோன்றியவை" என்று கூறினார். கல்லூரிப் பேராசிரியர் பலரும் மூக்கில் விரலை வைத்தனர். அவை மொழி அழகுடனும் எழில் நடையுடனும் விளங்கின. அவற்றில் 'மாஸ்கோ அணி வகுக்கலாம்' என்னும் கட்டுரை எல்லோராலும் ஒருமனதாகப் பாராட்டப்பட்டது.

## ஆரிய மாயை

ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன்னரே தென்னாட்டில் மட்டுமின்றி, மொகஞ்சதாரோ, ஹாரப்பா பகுதிகளைக் கொண்ட வடஇந்தியாவிலும் திராவிட நாகரிகம் எவ்வாறு செழித்து ஓங்கியது என்பதையும், ஈராயிரம் ஆண்டுகட்கு

முன்னர் இந்தியாவில் நுழைந்த ஆரிய நாகரிகத்தால் அது எங்ஙனம் தன் சீர்மையை இழந்து சிறுமையுற்றது என்பதையும் புகழ் வாய்ந்த பழைய வரலாற்றுக்குப் புத்துயிர் அளிக்கும் வகையில் இன்றைய திராவிட இனமாந்தர் ஏன் எழுச்சி கொள்ள வேண்டும் என்பதையும் ஆரிய மாயை நூலில் விரிவாக மட்டுமின்றி உணர்ச்சி துடிப்போடும் அண்ணா விளக்கியுள்ளார் என்பார் அ. மறைமலையான்.

1943இல் இந்நூல் வெளிவந்தது. அப்போது அவருக்கு 34 வயது. இளமையின் உணர்ச்சித் துடிப்போடு அந்நூல் அமைந்தது. 1950இல் அரசு இந்நூலுக்குத் தடை விதித்தது; அண்ணாவைக் குற்றவாளிக் கூண்டிலே ஏற்றியது; ஆறுமாத சிறை என்று தண்டனையும் விதித்தது. ஆனால் 10 நாட்கள் தான் திருச்சி சிறையில் இருந்தார்.

"இச்சிறு நூல் நான் பல சமயங்களிலே எழுதிய கட்டுரைகளைத் தொகுத்தும், இன எழுச்சிக்குப் பாடுபடும் ஆற்றல் அறிஞர்களின் ஆராய்ச்சியுரைகளைத் திரட்டியும் வெளியிடப்படுகிறது. மேற்கோள்கள் பல தரப்பட்டுள்ளன. படிக்க மட்டுமேயன்றிப், பிறருக்கு விஷய விளக்கமாற்றவும் சந்தேகங்களைப் போக்கவும், மாற்றாரின் எதிர்ப்புரைகளுக்கு மறுப்புரை தரவும் இந்நூல் பெரிதும் பயன்படும் என்று கருதுகிறேன். பேச்சாளருக்குப் பேருபகாரியாக இந்நூல் இருக்கும்" என்பார் அண்ணா. (முன்னுரை)

"நமது தமிழகம் முல்லைக்காடு; இன்று முட்புதராகிக் கிடக்கிறது. மீண்டும் தமிழகம் பூங்காவாக வேண்டும்; ஆரிய மாயையிலிருந்து விடுபட்ட அன்றே அறியாமையிலிருந்து நம்மக்கள் விடுபடுவர். ஆண்மை பெறுவர். உலகின் அணியாவர்." என்று நூல் முடிகிறது.

அண்ணா அவ்வப்போது எழுதிய கட்டுரைகள் பலவாகும். மகாகவி பாரதியார் என்னும் தலைப்பிலே அண்ணா ஒரு கட்டுரையைப் புதுவை சிவம் நடத்திய முல்லைக்காடு இதழில் எழுதினார்.

சாதி வேறுபாடு ஒழியவும் பொருளாதார வேறுபாடு நீங்கவும் அறிவுத் தெளிவு பெறவும் ஆரியச் சுரண்டலுக்கு ஆட்படாது தமிழினம் வாழவும் அடிமைத் தளையை அறுக்கவும் மக்களாட்சியை மலரச்செய்யவும் ஏற்ற கருத்துக் கதிர் பரப்பும் இலக்கியங்களை எழுதினார்.

மேலை நாட்டு விடுதலை வரலாறுகளையும் மக்களுக்காக உயிர் கொடுத்த வீரர் வாழ்வோவியங்களையும் 'திராவிட நாடு' இதழில் எழுதினார். நக்கீரன் என்ற புனைப்பெயரில் புராணங்களில் காணப்படும் பொருந்தாப் புனைவுகளைத் திறனாய்வு செய்தார். கருத்து வேறுபாட்டுக்கு மதிப்பளிக்க வேண்டும் என்ற உண்மையை உணர்த்தி அரசியல் பகை உணர்வு ஒழிந்து அன்பு சிறக்க 'மாற்றானின் மல்லிகைத் தோட்டம்' எனும் கட்டுரை அமைந்திருந்தது.

இந்திய விடுதலை நாளைத் துக்க நாளாகக் கருத வேண்டுமெனத் தந்தை பெரியார் பணித்தார். அதனைத் திருநாளாகக் கொண்டாடுவது தான் சிறப்பு என்று அண்ணா எழுதினார்.

தமிழில் கட்டுரை இலக்கியங்களை அறிவியல் நெறிப்படுத்தினார் திரு.வி.க. இக்கலையினை இதழ் மூலமாக அரசியல் துறையில் கவினும் கருத்தும் செழிக்கச் செம்மையான வடிவாக வளர்த்த புரட்சியாளர் அண்ணா என்பார் ஈ.சா. விஸ்வநாதன் (தமிழாய்வு, ப.59).

## கடவுள் தண்டிப்பார்

இவை கதை வடிவக் கருத்தோவியங்கள். "மிகப் பெரிய பிரச்சினை - ஓயாமல் விவாதிக்கப்பட்டுவரும் ஒப்பற்ற பிரச்சினை - கடவுள் சம்பந்தப்பட்ட பிரச்சினை. இது பற்றி பலருக்கும் தோன்றும் எண்ணங்களை நான் கண்டு அறிந்த அளவில் இந்தத் தொகுப்பில் எடுத்துக்காட்ட முற்பட்டேன். இவை வெவ்வேறு நேரங்களில் எழுதப்பட்டன என்றாலும் தொகுப்பாகப் படிக்கும்போது, இந்தப் பிரச்சினைப் பற்றி ஓரளவு தெளிவான கருத்து எழலாம். அதற்கே இந்த ஏடு! பிரச்சினையின் முழு சிக்கலையும் விளக்கிட அல்ல" என்பார் அண்ணா. இதனை பாரதி நிலையம் 1986இல் வெளியிட்டது.

ஆறுமுகம், கடவுள் விஷயம், குமாரி சூர்யா, கதிரவன் கண்ணீர், கடவுள் தண்டிப்பார், கனவில் கீரதர், வள்ளி நாயகியின் கோபம், அரோகரா கோவிந்தா, சமயபுரத்தம்மன் மான நஷ்ட வழக்கு எனும் ஒன்பது கட்டுரைகள் இந்நூலில் உள்ளன.

இவை முறையே 28-7-46, 4-12-48, 14-1-55, 9-11-44, 26-12-48, 20-3-49, 16-5-54 ஆகிய நாட்களில் திராவிட நாடு இதழில் வெளி வந்தவை.

சுகம் துக்கம் இரண்டும் வாழ்க்கைத் தேரின் இரு உருளைகள், கவலையை விடு, கடவுளை நம்பு, அவன் ஆணைப்படியே அனைத்தும் நடக்கும். அவனைத் தொழு, கஷ்டம் நீங்கும், சுகம் பிறக்கும் - சஞ்சலப்பட்டு, கூப்பிய கரத்துடன் நின்று, குமுறுகிற நெஞ்சுக்கு ஆறுதல் தேடும் ஏழைக்கு வேதாந்தி கூறும் உபதேசம் இது. இந்தப் புதிரை விடுவிக்கும் முயற்சியே இந்நூல்.

## இப்படை தோற்கின் எப்படை வெல்லும்

1947-ஆகஸ்டுப் பதினைந்துக்குப் பின்னர் திராவிடக் கழகத் தோழர்களிடையே கருத்து மாறுபாடு ஏற்பட்டு சலசலப்பு உருவானது. பெரியாரின் 69ஆவது பிறந்த நாளும் செப்டம்பர் 17இல் வந்தது. அண்ணாவின் நடவடிக்கையை எல்லோரும் ஆவலோடு எதிர்பார்த்தனர். அவரோ ஒரு கட்டுரை எழுதினார்.

"இவ்வளவு நீண்ட காலம் பொதுவாழ்வில் இருக்கும் வாய்ப்பு ஒரு சிலருக்கே கிடைத்திருக்கிறது. ஆச்சாரியார் ஓர் எடுத்துக்காட்டு. ஆனால் அவருடைய பொது வாழ்விலே ரோஜா அதிகம் முள் குறைவு. பெரியாருக்கோ கள்ளி காளான் நிறைந்த பாதையிலே நடந்து சென்று புதுக்கழனி தேடுவது போன்ற பொது வேலை. இதிலே அவர் நீண்ட காலம் ஈடுபட்டிருப்பது ஆச்சாரியார் இருப்பதை விட விசேஷமான சம்பவம் என்பதில் ஐயம் இல்லை.

பெரியாருக்குக் கிடைத்திருப்பது போன்ற ஆர்வம் மிக்க இளைஞர்கள் திராவிடத் தலைவர்களிலே வேறு யாருக்கும் கிடைத்ததில்லை. 'இப்படை தோற்கின் எப்படை ஜெயிக்கும்' என்று மனோன்மணீய ஆசிரியர் கூறியது போல, பெரியார் நம்பிக்கையுடன் கூறலாம், கூற வேண்டும். அவருக்கு இனியும் ஓயா உழைப்பா? இத்தனை வயதிலும் இப்படி இடுப்பொடியப் பாடுபடுவதா? அவருடைய பெரும்படைக்கு அவர் பொறுப்பும் ஆசியும் அளித்து அனுப்ப வேண்டும், 'இன்னின்ன செயலைப்புரி' என்று"

இக்கட்டுரையில் அண்ணாவின் பெருந்தன்மை புலப்படுகின்றது. எவ்வளவுதான் கருத்து வேறுபாடுகள் இருப்பினும் அண்ணா கண்ணியம் குறையாதவர் என்பது வெளிப்படுகிறது. அவரது கட்டுரை உவமை கலந்து உயர்ந்து விளங்குகின்றது.

## விடுதலைப் போர்

இந்நூல் ஆகஸ்ட் 1947இல் வெளிவந்தது. விழிப்புற்ற திராவிட இனத்தின் விடுதலை வேட்கைக் குரல். இதனைத் தான் தளபதி அண்ணாதுரையின் குரல், கணீரென்ற கம்பீரமான குரல் பரப்பி வருகிறது. நாட்டின் நிலை, நான்கு எல்லை, வரலாறு, பொருளாதாரத் தனிநிலை, சமூக ஏற்றத் தாழ்வுகள் இவைகளைச் சுட்டிக்காட்டி தனிநாடு, திராவிட ஆட்சி தேவை என்று கேட்கிறார். விடுதலைப் போர் முடிவடையவில்லை; இந்திய உபகண்டத்தில் அது ஒரு கட்டத்தைத் தாண்டியிருக்கிறது. எனவே தென்னாட்டைப் பொறுத்தவரை விடுதலைப் போர் தொடர்ந்து நடக்கிறது என்று அறிவிக்கிறார்.

திராவிடப் பண்ணையாளர், "ஜின்னாவின் குரல் பாகிஸ்தானத்தை அமைத்துவிட்டது. அண்ணாவின் குரல் திராவிட நாட்டை வாங்கித் தரும்" என்கிறார்.

## உலகப் பெரியார் காந்தி

அண்ணல் காந்தி மறைந்தபோது அறிஞர் அண்ணா ஆற்றிய உரைகளும் எழுதிய கட்டுரைகளும் மிகவும் புகழ் பெற்றவை. உலக அறிஞர்களின் பார்வையில் காந்தி உயர்ந்து நிற்கிறார். அண்ணா கண்ட காந்தி சமாதானத் தூதுவர், அமைதியின் காவலர், பேராற்றல்களின் உறைவிடம். அண்ணாவுக்கே உரிய அழகுதமிழ், தமிழ் மக்கள் விரும்பும் பழகு தமிழ், அடுக்குத் தொடர், எதுகை மோனை கொஞ்சும் சுந்தரத் தமிழ் கேட்போரைப் பிணிக்கும் மேடைத்தமிழ். உத்தமர் உணர்த்திய உயர்தரு நெறிகளைச் செந்தமிழில் அண்ணா தரும்போது அதன் சுவையே தனி. இச்சிறிய நூல் ஒரு பெரிய வாழ்வின் பிழிவு. ஒரு பெரிய நாட்டின் தேசப்பிதாவின் சுருக்கமான வரலாறு. இதனை மணிவாசகர் பதிப்பகம் 1997இல் வெளியிட்டது.

வாழ்க்கை வழிகாட்டி, உத்தமரை இழந்தோம், அவர்காண விரும்பிய நாடு, அவர் சிந்திய இரத்தம், வானொலியில் அண்ணா எனும் 5 உரைகள் இந்நூலில் உள்ளன.

“யமுனை நதிக்கரையிலே 31-1-1948 மாலை 5 மணிக்கு மூட்டப்பட்ட தீ, அங்கு காந்தியாரின் சடலத்திற்கு மட்டுமல்ல, உலகிலே லட்சக்கணக்கான மக்களின் அடிவயிற்றிலே கூட அல்ல, இருதயத்தையே தீண்டிய தீ ஆகும். உலக வரலாற்றிலே இது போன்ற துக்ககரமான, துடிதுடிக்கச் செய்யும் திடுக்கிட்டுத் திகைக்கச் செய்யும் நிகழ்ச்சி வேறு இல்லை. இந்திய பூமி மட்டுமல்ல, இருதயம் படைத்த நல்லறிவாளர்கள் எங்கெங்கு இருக்கிறார்களோ, அங்கெல்லாம், இந்தத் துக்கம் மக்களை, இதுவரை அவர்கள் அனுபவித்தறியாத விதமாக ஆக்கிவிட்டிருக்கும்” என்பார் அண்ணா.

## இலட்சிய வரலாறு

‘ஆரிய மாயை’ நூலைப் போல, அண்ணாவின் சிந்தனை மணித்திரள்கள் தாங்கி இன எழுச்சியைத் தூண்டுகின்ற நூல் இது. இதற்கும் அரசு தடை விதித்தது; வழக்கு தொடுத்தது. அதனை எதிர்த்து நீதிக்குப் போராடியதில் அண்ணாவுக்கு வெற்றி கிட்டியது. 4-11-49இல் அரசு விதித்த அபராதம் ரூ. 3000/-ஐ நீதிமன்றம் தள்ளுபடி செய்தது. இதனை 1953-இல் திராவிடப்பண்ணை இரண்டாம் பதிப்பாக வெளியிட்டனர்.

இதில் இலட்சிய வரலாறு, கண்ணீரால் எழுதப்பட்டது, புதிய வரலாறு, திராவிடர் கழகம், இலட்சிய விளக்கம், போர்வாள், இலட்சியம் வளர்ந்த வரலாறு, பூஜா மனோபாவம் கூடாது, சூட்சமம் இதுதான், தூத்துக்குடி, மரணசாசனம் ஆகிய கட்டுரைகள் உள்ளன.

“நாம் இழிவுநீக்கம், நம் முன்னேற்றத் தடைநீக்கம், ஆரியத்தில், மூடநம்பிக்கையில் இருந்து விடுபடுதல், பகுத்தறிவாளர்களாக, மானமுள்ள சமுதாயமாக ஆவது, இப்படிப்பட்ட நம் வேலை நெருப்போடு பழகுவது போல் பாமர மக்களிடம் பழகுவதாகும். அவர்கள் நம்பிக்கையைப் பெற வேண்டும். அவர்களைத் திருத்தியே ஆக வேண்டும். இதற்கு நல்ல பிரச்சாரம் வேண்டும். இனி நாம் சூத்திரர்களாக வாழ மாட்டோம் என்பதே நமது இலட்சியச் சொல், நமது மூச்சு” என்பார்.

“இனி இருப்பது நாம், நமது தொண்டு, அதைக் கண்டு துடிதுடிக்கும் ஆரியம், அது ஏவும் அஸ்திரம், அது பாயுமுன் பணிபுரிய வேண்டிய அவசரமான நிலைமை இவ்வளவே. நாம், மரணசாசனம் தயாரித்து விட்டுத்தான் இந்த மகத்தான போராட்டத்தில் ஈடுபட்டு விட்டோம். எனவே, நமது இலட்சியம், குறிக்கோள் எப்படியும் வெற்றி பெற்றே தீரும் என்பது உறுதி” என்று நூல் முடிகிறது.

## தேவ லீலைகள்

இந்நூல் 1949இல் தமிழ்ப் பாசறை வெளியீடாக வெளிவந்தது. இந்நூலில் தேவ லீலைகள், சிவலோகவாசிகள், களிமண்ணும் கையுமாக எனும் மூன்று கட்டுரைகள் அடங்கியுள்ளன. இவை திராவிட நாடு இதழில் தனித்தனிக் கட்டுரைகளாக வெளிவந்தன.

"அறிஞர் அண்ணாதுரை அவர்கள் திராவிடத்தின் ஆடும் மயில், கூவும் குயில், குளிர்ந்தடிக்கும் தென்றல், அறிவுக் களஞ்சியம்; மாற்றாருக்கு மந்தப் புத்தி கொண்டாருக்கு அவர் கொட்டும் செந்தேள், சுழன்றடிக்கும் சூறாவளி, கனல் கக்கும் எரிமலை, சீறிப் பாயும் சிறுத்தை" என்பார் பதிப்பகத்தார்.

இதில் புராணக் கதைகளின் அர்த்தங்களை விமர்சித்து அண்ணா அவர்களின் பகுத்தறிவுப் பிரச்சாரம் உச்சமாக விளங்குகிறது.

## புராண மதங்கள்

"தாழ்ந்தும் தேய்ந்து கிடக்கும் தமிழகம் புராண மதங்களில் எப்படி அழுந்திக் கிடக்கிறது என்பதை விளக்கவும் அறியாமையைப் போக்கவும் 'புராணமதங்கள்' என்ற தலைப்பில் அண்ணாவின் கருத்துக்களை இப்போது நாட்டுக்குப் படைக்கிறோம்'' என புராண மதங்கள் பற்றிய அவர்தம் கருத்துக்களைத் தொகுத்து வள்ளுவர் பண்ணை 1952இல் தொகுத்து வெளியிட்டுள்ளது.

"இந்நாட்டு மக்களின் அறிவை வளரவிடாமல் தடுத்துவரும் சிலவற்றில் புராண மதங்களும் சேர்ந்துள்ளதை எவரும் மறுக்க முடியாது. புராணம் - புண்ணியக்கதை - மதம் - மனிதனின் உயிர் நாடி என்று கூறிக் கொண்டு அதனையே கட்டியழும் ஒரு சில வைதீகர்களுக்கும், புராண - மதங்களில் இருப்பது என்ன என்று தெரிந்து கொள்ள விழையும் சீர்திருத்த நோக்கம் படைத்த ஆராய்ச்சியாளருக்கும் இந்நூல் பெரிதும் துணை புரியும் என்பதே இதைத் திரட்டியதன் நோக்கம்" என்பார் ஊடுருவி.

"மதம் மக்களுக்கு அபின்; புராணம் போதை தரும் லேகியம் என்று கூறுவதை நாம் கேட்டிருக்கிறோம்; படித்திருக்கிறோம். இருந்த போதிலும் திராவிடரின் தனிப் பெருந்தலைவர்; சொல் அரசர், பேனா வீரர் பகுத்தறிவு போதகர், அறிஞர் அண்ணாதுரை புராண மதங்களைப் பற்றி என்ன சொல்கிறார் என்பதைத் தமிழ் மக்களுக்கு விளக்கவே இதை அவர் எழுதிய பேசியவைகளிலிருந்து தொகுத்து நூலாக்கப்படுகிறது. இதை அறிவுக் கண்ணாடி போட்டு படிப்பவர்களுடைய மத மயக்கம் நீங்கும்; புராண போதை தெளியும் என்பது என் துணிவான எண்ணம்" என்றும் கூறுகிறார்.

"இது வெறும் புராணமல்ல! இதிலே உள்ள புதைபொருள் அமோகம். இதிலே சரிதம், பூகோளம், விஞ்ஞானம், தத்துவம், கணிதம், சீர்திருத்தம் போன்ற இன்னபிற உண்டு என்று பேசுவது ஆராய்ச்சி மனப்பான்மைக்கு அத்தாட்சி என்று சிலர் எண்ணுகிறார்கள். உண்மை அது அல்ல," என்பார் அண்ணா. இதையே நூல் முழுவதும் வலியுறுத்துகின்றார்.

## மாஜி கடவுள்கள்

இந்நூல் முதல் பதிப்பாக அக்டோபர் 1953ஆம் ஆண்டில் வெளிவந்தது. அறிவு வளரவளர, அறிவியல் வளரவளர, மக்கள் தம்முடைய காரணமற்ற அச்சங்களை அகற்றித் தெளிவு பெற வேண்டும் என்பதுதான் முறையாகும்.

அப்படித் தெளிவு பெறாமல் பழைய கால மூட வழக்கங்களையே தொடர்ந்து விடாமல் பற்றிக் கொண்டு, அதற்குத் தத்துவ விளக்கங்களையும் விரிவுரைகளையும் சொல்லிக் கொண்டு, தம்முடைய பொன்னான காலத்தையும் செல்வத்தையும் பாழ்படுத்தி வரக்கூடாது என்பது அண்ணாவின் கருத்தாகும்.

இந்தத் தெய்வங்களும் சரி, இவற்றின் விநோதத் திருவிளையாடல்களும் சரி, மக்கள் சமுதாயத்தை மிரளச் செய்து, தங்களுடைய அடிமைகளாக்கி, தாம் மக்களைச் சுரண்டிச் சுகபோக வாழ்வு நடத்துவதற்காகக் குருமார்களும் அவர்களைச் சார்ந்து நிற்கிற படிப்பாளிகளும் கட்டிவிட்ட புனைகதைகள், உண்மை கலவாத கற்பனைகள் என்பதும் அறிஞர் அண்ணாவின் முடிவாகும்.

'திராவிட நாடு' இதழில் 'மாஜி கடவுள்கள்' என்ற தலைப்பில் தொடர்ந்து எழுதிவந்தார்கள். 1953இல் வெளிவந்து தமிழ் மக்களிடையே பெரும் பரபரப்பை ஊட்டிய 'மாஜி கடவுள்கள்' என்ற இந்நூலினை மீண்டும் பாரி நிலையம் வெளியிட்டது. தமிழ் மக்களின் சிந்தனையைத் தூண்டும் அவரது வலிமைமிக்க வாதத்திறன் கற்பவர்களைக் கவர்ந்து தெளிவூட்டும் என்று பதிப்பகத்தார் நம்பினர்.

ஜுவஸ், ஹீராதேவி, பாசிடன், அபாலோ, ஆர்ட்டிமிஸ், அதீனே மதுதேவன் பேகஸ், வீனஸ், டியூடன், ஓடின், கார்தேவன், லாக்தேவன், மெரோடாக், மச்சாவதாரம், துகிலுரிந்த துச்சாதனி, தவளை முகத்தேவி, கரமிழந்த கடவுள் எனும் மாஜி கடவுள்களைப் பற்றி அண்ணா விரிவாக எழுதுகிறார்.

எந்தச் சாமிகளின் சார்பிலே, அந்த மக்கள் அறிஞர்களை அழிக்கத் துணிந்தனரோ, அந்தச் சாமிகள் இன்று இல்லை! அத்தனை கடவுள்களும் பண்டைய நாட்களிலே பாபிலோன், கிரீஸ், ரோம், எகிப்து, சீனா போன்ற பல நாடுகளிலே, கோடிக்கணக்கான மக்களால் கும்பிடப்பட்டு வந்த கோலாகலமான கடவுள்களும் கும்பிடப்படுவதில்லை; கோயில் இல்லை. கொட்டு முழக்கமில்லை. எண்ணற்ற மாஜி கடவுள்கள்! அறிவு பரவிற்று. இருளுருவங்கள் தானாக மறைந்தன – இதுதான் இவரது வாதம்.

## அரசாண்ட ஆண்டி

இது ஒரு வரலாற்று நூல். இதனை அறிஞர் அண்ணா திராவிட நாடு இதழில் 17-4-1955 முதல் 29-5-1955 வரை தொடராக எழுதி வந்தார். பின்னர் 1987இல் முதல் பதிப்பாக பூம்புகார் பிரசுரம் பிரஸ் வெளியிட்டது. இந்த வரலாற்று நூல் ஒரு புதினத்தின் சுவையுடன் அமைந்துள்ளது.

இது பிரெஞ்சு நாட்டு ஒரு மதத் தலைவரின் கதை. அவரது பெயர் ரிஷ்லு. மன்னனுடைய மணிமுடி ஒளிவிட வேண்டுமென்று ஏழையின் இரத்தத்தை அபிஷேகம் செய்வித்து அரசாட்சி புரிந்தான். மக்கள் பதிலளிக்க நெடுங்காலம் பிடித்தது. அவர்கள் தந்த பதிலோ பயங்கரமானது. மன்னனின் தலையை வெட்டிக் காட்டி, மக்களுக்காக பிரான்சுக்காக என்று முழக்கமிட்டனர்.

பிரான்சில் பதின்மூன்றாம் லூயிக்கு வயது 9. அவரது தாய் மேரி டி மெடிசி ஆட்சிப் பொறுப்பில் இருந்தார். ரிஷ்லு எளிய குடியில் 1585இல் பிறந்தார். இலக்கியம் படித்தவர். இலக்கியம் தீட்டுவார் என்று எதிர்பார்த்தவர்களை ஏமாற்றி விட்டு, இராணுவக் கல்லூரி சென்றார். தளபதியாவார் என்று எதிர்பார்த்தனர். ஆனால் ரிஷ்லுவோ சாமியார் ஆனார். கத்தோலிக்க அமைப்புக்குள் இருந்துகொண்டு புராட்டஸ்டென்ட் அமைப்பை எதிர்த்ததோடு தன் அமைப்புக்கும் துரோகம் செய்தார். போப் ஆண்டவருக்கும் எதிராகச் செயல்பட்டார். அரசனுக்கு எதிராகவும், அரசிக்கு எதிராகவும், பிரபுக்களுக்கு எதிராகவும் செயல்பட்டு தந்திரங்கள் மூலம் ஆட்சிக் குழுவில் இடம் பெற்றார். காலே என்பவனுடைய தலை சீவப்பட்டது. 1942ஆம் ஆண்டு டிசம்பர் நாலாம் நாள் ரிஷ்லு இறந்தபோது மக்கள் மகிழ்ச்சியுடன் பல்வேறு இடங்களில் சொக்கப்பனை கொளுத்தினார்கள்.

மக்கள் விரோதப் போக்கின் முடிவு இப்படித்தான் அமையும் என்பது இயற்கையின் விதி.

## என் எண்ணம்

இதன் முதல் பதிப்பாக 1958இல் மதுரை காசிநிலையம் வெளியிட்டது. இதில் கதைகளோடு 'என் எண்ணம்' என்ற கட்டுரையும் உள்ளது.

செங்கற்பட்டு மாவட்ட திராவிட முன்னேற்ற கழகத்தின் ஆதரவில் நடந்த மாநாட்டுச் சொற்பொழிவு இதில் இடம்பெற்றுள்ளது.

சீரங்கம் திருவிழாவை நினைவுபடுத்தி அந்தக் கூட்டம்போல் இது இல்லை என்று கூறுகிறார். திமுகவின் நிலைப்பாட்டை விளக்குகிறார். "நம்மைப் பற்றி எல்லோரும் பேசுகிறார்கள். நம்மைப் பேசாதவர்கள் இல்லை. பேசாத நாள் இல்லை. பேசப்படாத இடமும் கிடையாது" என்றார். கம்யூனிஸ்ட்டுகளோடு உள்ள உறவை -

"நமக்கு இருப்பது இத்தனைக் குறிகள்! நாம் வாள் வீச வேண்டிய இடங்களோ ஏராளம், இதைப்போல. ஆகவேதான் நான் ஏற்கனவே குறிப்பிட்டபடி அத்தனை துறைகளிலும் நாம் கூர்வாட்களை அங்கங்கேயே தயாரித்து வருகிறோம்; மிக முக்கியமான திராவிட நாட்டுப் பிரிவினையையும், வடநாட்டுச் சுரண்டலையும் நாமே - நமது கழகமே" என்று விவரிக்கிறார்.

"சினிமாத் துறையைச் சீர்திருத்த வேண்டுமே. அங்கேயே ஆட்களைத் தயார் செய்கிறோம். வீசப்பட வேண்டிய இடத்திலேயே வாள் தயாரிப்பதைப் போல சினிமாத்துறையில் இருந்தே கே.ஆர். இராமசாமி, என்.எஸ். கிருஷ்ணன், எம்.ஜி. ராமச்சந்திரன் போன்ற பலப்பல வாட்கள் தயாரிக்கப்பட்டு கூர்மையாக்கப்பட்டு வருகின்றன." என்பார்.

பேசுகின்ற பேச்சாளிக்கும் பேச்சைக் கேட்கின்ற மக்களுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். அப்போதுதான் பேசுகின்றவர்களுக்கும் சரி கேட்கின்றவர்களுக்கும் சரி பொறுப்பு இருக்கும் என்று சொற்பொழிவுகளின் இலக்கணம் பற்றியும் கூறிவிடுகிறார்.

## எட்டு நாட்கள்

இந்நூலை 1958இல் முதல் பதிப்பாக அன்பு நிலையம் வெளியிட்டது. இத்தொகுப்பில் 'எட்டு நாட்கள்', 'உடன் பிறந்தார் இருவர்', 'உலக ஒளி', 'பொன்மொழிகள்' என்னும் 4 கட்டுரைகள் உள்ளன.

இவற்றில் 'எட்டு நாட்கள்' என்ற கட்டுரை ப்ரூனோவின் வரலாற்றுக் கதை. ப்ரூனோ 1600இல் கொல்லப்பட வேண்டியவன் என்று குற்றம் சாட்டினார் ஆச்சாரியார். இத்தாலி தந்த அறிவாளி ரோம் நகரச் சிறைக் கூடத்திலே நாத்தீகக் குற்றம். மடாலயச் சாமியார்களின் மந்த மதியையும் கோலாகல வாழ்வையும் கேலி செய்து எழுதினான். இது குற்றமாயிற்று. ஆசை காட்டினார்கள். அவன் அடிபணியவில்லை. அவனைத் தீமூட்டிக் கொன்றனர். "ப்ரூனோ சாகவில்லை. என்றும் நிலைத்து நிற்கும் உண்மை சாகாது" என்று அண்ணா கட்டுரையை முடிப்பார்.

இரண்டாயிரத்து எண்பத்து ஆறு ஆண்டுகளுக்கு முன் ரோம் நாட்டில் டைபீரியஸ் கிரேக்கஸ் ஏழைகளுக்காகப் பாடுபட்டான். சீமான்களுக்கு எதிராகப் போராடினான். கெயகும் அவனோடு சேர்ந்து கொண்டான். இருவரும் பிரச்சாரம் செய்தனர். இருவரும் கொல்லப்பட்டனர். ரோம் நாட்டு வரலாற்று ஏட்டிலே மட்டுமின்றி உலக வரலாற்று ஏட்டிலேயே உன்னதமான இடம் பெறத்தக்க பெருந்தொண்டாற்றி தியாகிகளான இரு சகோதரர்களின் கதை அடுத்தது.

'உலக ஒளி' என்பது காந்தியைப் பற்றிய கட்டுரை. "அவரது பெயரால் அரசியல் நாகரீகத்தை வளர்க்கப் பாடுபடுங்கள். ஜாதி பேதம் ஒழிய போராடுங்கள். இல்லாமைக் கொடுமைகளையொழிக்க ஒத்துழையுங்கள். மத நம்பிக்கையால் விளையும் கேடுகளை ஒழித்துக் கட்ட முன் வாருங்கள்" என்று கட்டுரையை முடிப்பார்.

39 பொன்மொழிகள் சிறுகுறிப்புகளாக கட்டுரைத் துணுக்குகளாக உள்ளன.

## நமது நாடு

கிறிஸ்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தே தொடங்கிய தென்னகத்து வாணிபம், கி.பி. பதினான்காம் நூற்றாண்டு வரையிலும் வளம் குன்றாது, தலை நிமிர்ந்து நடை பெற்றுள்ளது. பழந்தமிழர் வாணிக நிலையினை விளக்க சங்ககால நூற்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை உள்ளன. எகிப்து, சிற்றாசியா, மெசபடோமியா, பர்ஷியா, பாலஸ்தீனம், சோமாலிலாந்து, கிரீக், ரோம், சுமத்திரா, சாவகம், மலேயா, சீயம், சீனம் ஆகிய நாடுகளுடன் வாணிபத் தொடர்பு ஏற்படுத்தியிருந்தனர். திராவிடர்கள் மொகஞ்சோதாரா, ஹாரப்பா, எகிப்து, சிற்றாசியா, மெசபடோமியா, ஆகிய இடங்களில் மண்ணினின்று தோண்டி எடுக்கப்பட்ட புதைப்பொருள்கள் திராவிடர் நாக்ரீகத்தைக் கொண்டது என்கின்ற உண்மையை வரலாற்று ஆசிரியர்களும் புதைபொருள் ஆராய்ச்சி வல்லுனர்களும் மிகத் தெளிவாகப் பல நூல்கள் வெளியிட்டு உறுதிப்படுத்தியுள்ளனர். கி.பி. 14ஆம்

நூற்றாண்டுக்குப் பின் ஆரிய நாகரீகம் திராவிடத்தில் புகுந்து செழிப்புற்றிருந்த திராவிட வாணிகம் - பண்பு - கலாச்சாரம் - வீரம் இன்னோரன்ன யாவும் குன்றி - நாளடைவில் நாடு வெள்ளையர்க்கு அடிமையாகியது. தாழ்ந்த திராவிடம் மேலும் குன்றியது. வெள்ளையர் தங்கள் நாகரீகத்தைத் திணித்ததுடன் ஆங்கில நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களுக்குத் திராவிடம் சந்தையாகப் பயன்பட்டு வந்தன.

இந்தியா 1947ஆம் ஆண்டு விடுதலை பெற்றதேயன்றி திராவிடம் விடுதலை பெறவில்லை. வெள்ளை ஏகாதிபத்தியம் ஒழிந்து வடவர் ஏகாதிபத்தியம் திராவிடத்தில் ஆட்சி செலுத்தி வருகின்றது. இந்நிலை மாறி, தென்னக மக்களின் வாழ்வு வளம் பெற அறிஞர் அண்ணா அவர்கள் நாட்டின் நலன்கோரி பல ஆண்டுகளாகப் பாடுபட்ட அவரது பேச்சும் எழுத்தும் கலந்தது இந்நூல். கனவும் காட்சியும், திராவிடத்தின் பெருமை, மத்தியில் ஆட்சியின் அதிகாரங்கள், இராச்சிய அதிகாரங்கள், தமிழகம் வஞ்சிக்கப்படுகிறது, நமது இலட்சியம் எனும் கட்டுரைகள் உள்ள இந்நூல் 1961இல் முதல் பதிப்பாக வெளிவந்தது.

## எல்லோரும் இந்நாட்டு மன்னர்

எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்பது பாரதியின் வரி. இத்தலைப்பில் ஒரு நூலை அண்ணா எழுத 1961இல் முதல் பதிப்பாக வெளிவந்தது.

இது அரசியல் விளக்க நூல். அரசியல் விளக்கம் பெற அனைவரையும் தூண்டும் ஓர் அணையாத விளக்காக அமைந்துள்ளது என்பார் வெளியீட்டாளர்.

"எனவே மமதை, மந்தமதி என்னும் கேடுடைக் குணம் கொண்ட மன்னன் நாடாள்வது தீது என்பதால் எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்ற ஏற்புடைய, குடிஅரசுக் கோட்பாட்டை நிலைபெறச் செய்து விட்டதாலேயே ஆட்சியிலே சீரும் சிறப்பும் மக்கள் வாழ்விலே நலனும் தாமாக தழைத்திடும் என்று எண்ணிவிடுவது பேராபத்து. முன்பாவது ஒருவர் மன்னர். இன்று எல்லோரும் மன்னர்கள். எனவே எல்லோருக்கும் ஆட்சி நடத்தத்தக்க அறிவாற்றல் இருக்கவேண்டும். அதேபோது ஆணவம் இருத்தல் ஆகாது - திறம் இருக்க தலைக்கனம் இருத்தலாகாது" என்று முடிப்பார்.

## இன்பத் திராவிடம்

இந்நூல் 1961இல் தமிழ்நாடு புத்தக நிலையத்தால் (சென்னை) வெளியிடப்பட்டது. "அண்ணா தனது பேச்சையும் எழுத்தையும் மேற்கூறப்பட்ட திராவிடத்திற்காகப் பெரிதும் அர்ப்பணித்தார் எனில் மிகையல்ல. திராவிட நாடு என்றால் அப்பகுதி எப்படியிருக்கும்? அதன் தனித்தன்மைகள்தாம் எவை என்பதிலே கருத்தைச் செலுத்தி நுணுகி ஆய்ந்தார். தன் முடிவுகளைப் பொதுமக்களுக்குப் புரியும்படி எழுதினார்" என்று குறிப்பிடுவார் டாக்டர் ந. வேலுசாமி (அறிஞர் அண்ணாவின் சிந்தனைகள் - ஓர் ஆராய்ச்சி, ப. 56).

இந்நூல் திராவிட நாடு பற்றியது; இதன் மூலம் பெறப் போகிற/இன்பம் பற்றியது. இதனைப் பற்றி விளக்கும்போது ஓரிடத்தில் அண்ணா, "பாகப்பிரிவினை மட்டும் தேவை என்று மட்டும் கூறவில்லை; பிரிகிற பாகம் எப்படி இருக்க வேண்டும் என்பதும் கூறுகிறோம். நாடு தேவை என்று எல்லை மட்டும் குறிப்பிடவில்லை,; நாட்டிலே என்ன நிலை இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறோம்" என்று குறிப்பிட்டிருப்பது முக்கியமானது.

## திராவிடத்தின் பெருமையும் வெங்காயத்தின் அருமையும்

இது சரசுவதி பதிப்பகத்தால் 1961இல் வெளியிடப்பட்ட நூல். திராவிட நாடு கேட்பது பிளவை உண்டாக்கும் பித்தர்களின் போக்கு என்று அரசியலில் கோலோச்சுபவர்களில் இருந்து ஆண்டிப் பண்டாரங்கள் வரை கேலிமொழி பேசி வந்தனர். அது மட்டுமல்ல வெங்காயம் என்பதையே அரசியலில் வேதாந்த மொழியாகக் கொண்டு நடமாடிடும் பெரியார் அவர்களின் பாணியிலேயே தமிழ்நாட்டு முதல்வர் 'திராவிட நாடு - வெங்காயம்' என்று பேசி வந்தார். அறிஞர் அண்ணா காமராசருக்கு வெங்காயத்தின் அருமை பெருமையை எடுத்துக் கூறியவற்றின் தொகுப்பே இந்நூல்.

"தோகையில்லை மயில்தான். குளிர்ச்சியில்லை, நிலவுதான். ஒளியில்லை மணிதான். சுவையில்லை, கனிதான். அணியில்லை பாட்டுத்தான். மழலை இல்லை, குழவிதான். மணம் இல்லை, மலர்தான். கூறுவரோ எவரேனும்? கேட்டிடின் கைகொட்டிச் சிரிப்பாரன்றோ! ஆனால் தனி அரசு இல்லை, திராவிடர்தான் என்றன்றோ இன்றுள்ள நிலை" என்று நூலை எழுதி முடிக்கிறார்.

## அண்ணாவும் அழகுத் தமிழும்

இது 15 உரைகள் அடங்கிய நூல். குறள் என்னும் கருத்துச் செல்வம், தமிழ்வெளியீட்டுக் கழகம், தமிழக அரசு தலைமைச் செயலகம், தமிழ்ப் புத்தாண்டு விழா, பாரதிக்கும் பாரதிதாசனுக்கும் சிலை, பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, ஆட்சிமொழி, அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா, இந்திய சோவியத் கலாச்சாரக் கழகம், கேரள சமாஜம், தமிழில் விஞ்ஞானப் புத்தகங்கள், ஆங்கிலோ இந்தியர், தமிழ் தெரியாத தமிழர், மதுரைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா, சட்டத் தமிழ்ச் சொற்பொருட் களஞ்சிய நூல் வெளியீட்டு விழா ஆகிய தலைப்புகளில் இவை உள்ளன. முதல் பதிப்பாக 1968இல் வெளிவந்தது, அன்னை நிலையம் மூலமாக.

கடல் போன்ற கருத்துக் குவியல்களில் இவை சில துளிகள். தமிழ் மக்களும் குறிப்பாக மாணவர் சமுதாயம் பயன்பெறத் தக்க பல கருத்துக்கள் இதில் உள்ளன.

"தமிழ் உமது முரசாகட்டும்! பண்பாடு உமது கவசமாகட்டும்! அறிவு உமது படைக்கலன் ஆகட்டும்! அறநெறி உமது வழித்துணையாகட்டும்! உறுதியுடன் செல்வீர்! ஊக்கமுடன் பணி புரிவீர்! ஏற்றமிகு வெற்றிய...

ஈட்டுவீர்! பாட்டு மொழியுடைய நமது தாயகம் வாழ தரணிக்குத் துணை நின்றிடும் தகுதி பெறச் சென்றிடுவீர்! வென்றிடுவீர்!" என்பது 7-9-67 அன்று மதுரைப் பல்கலைக் கழக பட்டமளிப்பு விழாவில் அண்ணா மாணவர்க்குச் சொன்னது.

## அண்ணாவின் 'நவமணிகள்'

இது, நாகை - தருமனால் 1968இல் தொகுக்கப்பட்ட அண்ணாவின் கட்டுரைகளின் தொகுப்பு. கருணை பொங்கும் விழிகளுடன், கருத்தை ஈர்க்கும் கள்ளமில்லா முகத்துடன், கனிந்த புன்னகை இதழ்களில் நெளிந்தோட அறிவின் உருவாய், அமைதியின் வடிவாய், பண்பின் இருப்பிடமாய் காட்சிக்கு எளிமையாகவும் தரத்தில் காரியமாற்றும் அறிவுத் திறத்தில் இமயமாகவும் அண்ணா தோன்றினார். தெய்வத்தைக் கண்ட மெய்சிலிர்ப்பு. தெய்வம் தந்த மலர்களை மாலையாகத் தொடுத்து பக்தர்கள் அந்தத் தெய்வத்திற்கு அணிவிப்பதைப் போல அண்ணனுக்கு மாலை அணிவிக்கின்றார். அண்ணாவின் கட்டுரைகளைக் கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்று நவமணிகளாகக் கோர்த்துள்ளார்.

மாணவர்கள், ஆசிரியர், கல்வியும் கல்விச் சாலைகளும், திறமையும் அறிவும், இளைஞர்கள், காதலும் திருமணமும், மனிதனும் மனவளமும், சமுதாய முன்னேற்றம், ஏழை எளியோர் வாழ்வு பெற, தொழிலாளியும் விவசாயியும், ஒய்வு, தீர்ப்பு, பதுக்கல் வேட்டை, தமிழ், வேண்டுகோளும் அன்பழைப்பும், தமிழன், வள்ளுவரும் குறளும், கவிதையும் கவிஞர்களும், இலக்கியம், கலையும் அரசியலும், நாடகம், நூலகம், கருத்துக் கனிகள், அரசியல், மகாத்மா காந்தி, நாட்டுப் பற்று, சுதந்திரம், நாடும் நல்லாட்சியும், மேடைப் பேச்சு, ஜனநாயகம், நாம், தூற்றலும் தோழமையும், நாங்களும் நீங்களும், இந்தி, தேசிய ஒருமைப்பாடு, உவமைக்குவியல், வைரப்பேழை என்று 37 கட்டுரைகள் இதில் உள்ளன.

"நம்முடைய தனித்தன்மைகளை இழந்து விடுவது இந்திய ஒருமைப்பாட்டை உண்டாக்கி விடாது. அப்படி நாம் நம்முடைய தனித்தன்மையை இழந்து, இந்திய ஒருமைப்பாட்டை ஏற்பது, கண்களிரண்டையும் விற்றுச் சித்திரம் வாங்கியதாகத் தான் இருக்கும். தமிழகத்தின் பண்பாடு இருந்தால் தான் இந்திய ஒருமைப்பாடு உருவாகும்" என்பது அண்ணாவின் கருத்தாகும்.

## தமிழரின் மறுமலர்ச்சி

இது தமிழும் தமிழ் இசையும் தமிழர்களும் மறுமலர்ச்சி பெற அண்ணா அவ்வப்போது எழுதிய கட்டுரைகளின் தொகுதி. 'இசைக்கு மொழி அவசியமா?' என்று ஏளனம் செய்தோர் சிலர். 'தமிழில் இசைப்பாடல்கள் உண்டா?' 'தமிழனுக்கு இசை தெரியுமா?' என்று நகைத்தனர் சிலர். அண்ணா அவர்களின் கூற்றை அர்த்தம் அற்றது என்று எடுத்துக்காட்டினார்; ஆதாரப்பூர்வமாகப் பேசினார்; அழகு தமிழில் எழுதினார்; ஆராய்ந்தார். தமிழின் மேன்மையை

தமிழரின் பெருமையை இசையின் தொன்மையை எடுத்து இயம்பினார். தக்க சான்றுகளுடன் தமிழ் இசைக்காக வாதாடினார்.

தமிழ் இசை ஏன்? புரிந்து கொள்ள வேண்டாமா? ராஜா சர் செய்த பேருதவி. இதற்குமா எதிர்ப்பு? தமிழ் வளர்ச்சியில் நல்ல காலம். முத்தமிழ். அறிவுக்குப் பொருந்துமா? தமிழ்க் கலை விரோதிகள். தாய்மொழியிலேயே எல்லாம். இதற்கு ஈடாகுமா? மலருக்கு மணம். அறைகூவி அழைக்கிறோம். தமிழ் ஆட்சி. தமிழில் பாட்டு இல்லையா? மித்திரன் ஆத்திரம். இதற்குத்தான் எதிர்ப்பு. பழைய பல்லவி. எங்கே அந்தக் கலை? இழந்த இன்பம். எழுச்சி தோன்றியது. மறுமலர்ச்சி. எதிர்ப்பு மடியும். கண்டனக் குரல். தெவிட்டாத விருந்து. பூரிக்கின்றனர். இயற்ற முடியாதா? வாய்பாட்டு ஏன்? முன்னாளில் இசை. மங்கின; அழிந்தன. அவர்களுக்குப் பிடிக்காது. ஒருமைப்பாடு. கிளர்ச்சியின் சிறு பகுதி. எத்தனையோ கிளர்ச்சிகள். ஏழை எளியவர் மொழி. இன்றுள்ள நிலைமை எனக் குறுந்தலைப்புகளில் கட்டுரைகள் உள்ளன.

"இன்னும் சிறுகும்பல் சீறுகிறது. ஆதிக்கம் செலுத்துகிறது. தமிழரை எதிர்க்கிறது. தமிழரின் மறுமலர்ச்சியை அழிக்கக் கருதுகிறது. ஆம். ஜார் அடைந்த கதியை அடைந்ததும், அந்தச் சிறு கூட்டம் தனது ஆணவத்தை அடக்கிக் கொள்ளத்தான் இல்லை. அதனை அடக்கத் தமிழர் எழுச்சி பெறவேண்டும்" என்று நூல் முடிகிறது. 1968இல் பத்தாம் பதிப்பு வந்துள்ளது.

## சமதர்மம்

இது ஒரு கட்டுரைத் தொகுப்பு நூல். 1969இல் நான்காம் பதிப்பாக கே.பி. நாராயணன் என்பவர் தொகுக்க அன்பு நிலையம் வெளியிட்டுள்ளது.

இதில் சமதர்மம், மஹாத்மா காந்தி, ஓய்வு நேரம், நாடகத்திலே மறுமலர்ச்சி, சுதந்திர இந்தியாவில் வாலிபர் தேவை, தீண்டாமை, என்னைக் கவர்ந்த புத்தகங்கள், சொல்வதெல்லாம் செய்தல், சுதந்திரம், விதிக்கு அடிமைத்தனம், ஸ்தாபன ஐக்கியம், வீட்டிற்கோர் புத்தகசாலை, மேடைப் பேச்சு என 12 கட்டுரைகள் உள்ளன.

"ஸ்தாபன ஐக்கியம் குறித்து வீணை உயர்தரமானது தான், வித்துவானும் தேர்ந்தவர்தான். ஆனால் ஒரு நரம்பு மட்டும் ஓரிடத்தில் தளர்ந்து இருக்கிறது என்றால், வீணையின் நாதமும் கெடும்; வித்துவானின் இசையும் பாழ்படும். ஸ்தாபனத்தின் ஐக்கியம் சங்கீதத்துக்கு உள்ள சுருதி மானத்தைப் போன்றது – மிக மிக ஜாக்கிரதையாகக் கவனிக்கப்பட வேண்டிய விஷயம்' என்பார்.

## பணத்தோட்டம்

தமிழகத்தின் பொருளாதாரத்தின் நலிவு நிலையை நயம்பட எழுதிய நூலின் பெயர்தான் 'பணத்தோட்டம்' பிற்காலத்தில் இத்தலைப்பு எம்.ஜி. ராமசந்திரன் அவர்களால் நடிக்கப்பட்ட திரைப்படத்திற்குப் பயன்பட்டது.

அண்ணா இந்நூல் முழுவதும் பலரின் உழைப்பு ஒரு சிலரின் மூலதனமாக எப்படி உருப்பெறுகிறது என்பதை அருமையாக விளக்கியுள்ளார். இலக்கிய நயம் நிரம்பிய ஒரு தலைப்பின் மூலம் படிப்போரின் உள்ளத்தில் உணர்ச்சி மோதல்களை ஏற்படுத்த அண்ணாவால்தான் முடியும். எதையும் இலக்கியமாகப் பார்க்கும் ரசனை உள்ளம் அவருடையது. ஆகவேதான் பேரிலக்கியங்களைப் படைக்காமலேயே அவர் ஓர் இலக்கிய வாதியாகக் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறார் என்பார் பி.சி. கணேசன். (ப.28).

வடநாட்டவர்களின் பாங்கு முயற்சிகள் பெரும் பலனைத் தந்தன. தென்னாடு அவர்களுக்குப் பணத்தோட்டமாக விளங்கியது என்பதைச் சான்றுகளோடு விவரிக்கின்றார். பம்பாய் பணகுண்டு, அதோ பண அரசு, வனஸ்பதி, புதிய ஏகாதிபத்யம், புரட்சியை அடக்க, பண்டித நேருவின் கண்முன் எனும் தலைப்புகளில் மிக விரிவாக அண்ணா எழுதியுள்ளார். இந்நூல் 1970 இரண்டாம் பதிப்பாகத் திராவிடப் பண்ணை மூலம் வெளிவந்தது.

## 1858-1948

இந்நூல் திராவிடப் பண்ணையிலிருந்து வெளிவந்தது. இதன் நான்காம் பதிப்பு 1975இல் வெளியிடப்பட்டது. இதில் விசித்திர வினா, மயில் கழுத்து, துண்டுஸ்தான் திட்டம், கர்சான்-கார்சான் எனும் நான்கு கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

ஏகாதிபத்தியம் இருக்கிறதா? இறந்து விட்டதா? இந்த விசித்திரமான கேள்விக்கு இன்று அவசியம் ஏற்பட்டுவிட்டது. புலி இறந்து விட்டதா, புதருக்குப் பின் புறத்தில் பதுங்கிக் கொண்டிருக்கிறதா என்று வேட்டைக்காரன் சந்தேகப்படுவதோடு இல்லை. புலிக்கே ஏற்பட்டிருக்கிறது. நான் இருக்கிறேனா இறந்து விட்டேனா என்று ஏகாதிபத்யமே இன்று தன்னைத் தானே கேட்டுக் கொள்கிறது. பிரிட்டிஷாரின் 1948 ஆம் ஆண்டு முடிவு பற்றியது முதல் கட்டுரை.

"இன்ன வர்ணம் தான் என்று தெளிவுடன் கூறிவிட முடியாத வண்ணமே மயில் கழுத்து. இந்த வர்ண ஜாலத்திலே ஆழ்ந்த கருத்து இருக்கிறது? ஆங்கில சாம்ராஜ்யத்தின் நிலைபெற்ற தன்மைக்கு இதுவே மூலமாக இருக்கும் பலம். நிலைமைக்கேற்ற நடவடிக்கை; ஆனால் மூல நோக்கத்துக்குக் கேடுவராத முறையில்" - இரண்டாவது கட்டுரை.

## ஜமீன் இனாம் ஒழிப்பு

இது திராவிடப் பண்ணையின் நான்காவது பதிப்பாக 1975இல் வெளி வந்திருக்கிறது.

"நில முதலாளித்துவமிருக்கிறதே அது மனிதத் தன்மையை மாய்ப்பதிலே முதல் தரமானது. குடும்பம் குடும்பமாக இந்து முதலாளித்துவத்துக்கு அடிமையாகி தலைமுறை தலைமுறையாக காலில் வெள்ளெலும்பு முளைத்த நாள் முதலாய் அடிமைக்காரனையே" என்று நந்தனார் பாடினார். உண்மை நிலை இதுதான்".

இதற்கு ஜமீன்தார் முறையும் இனாம்தாரர் முறையும் காரணம். பூபதி, பிரபு, புரோகிதன் இந்த முக்கூட்டு முதலாளித்துவ அச்சிலே நெடுங்காலமாக இருக்கிறது. இதை எதிர்த்து "பயிரிடுபவனை பாடு படுத்தாதே. நியாயமான வாரம் கொடு. நிலத்தை முதலாளித்துவமாக்காதே. ஜமீன், மிட்டாமிராசு, பண்ணை பாத்யதைகளைக் கலைத்து விடு" என்று மக்கள் போராடினர். ஜமீன்தார்கள் வரி பெற்று, சார்க்காருக்கு ஒரு பகுதி மட்டும் செலுத்துவார்கள். இனாம்தாரர்கள் இது கூடச் செய்வதில்லை. அவர்களுக்குப் பூரண சுதந்திரம் நிலத்தின் மீது.

அண்ணா இவர்கள் படும் துன்பத்தை நாடகப்பாணியிலும் கதைப் பாணியிலும் விளக்கியுள்ளார். இம்முறைகளை ஒழிக்க ஜஸ்டிஸ் அரசு முயன்றது. காங்கிரஸ் அரசு முணங்குகிறது. புள்ளி விபரங்களை அள்ளித் தருகிறார். ஓவியம் போல தீட்டுகிறார். இனாம்தாரர்களாக இருப்பவர்கள் பிராமணர்கள். அதனால் அவர்களது சொத்தைப் பாதுகாக்க பிராமணர்கள் பாடுபட்டதும், அமைச்சர்கள் அடங்கிப்போவதும் விஸ்தாரமாக விளக்கப் படுகிறது.

"இந்தக் கேவலமான நிலையில் இருந்து இவர்களை விடுவிக்கச் செய்யும் முயற்சி தானே, நாம் திராவிட நாடு திராவிடருக்கு என்பது" என்று அண்ணா நூலை - பெரிய கட்டுரையை முடித்து விடுகிறார். இதில் வரலாறு, சமூகம், பொருளாதாரம் மூன்றும் அலசப்படுகின்றன.

## அறப்போர்

இது திராவிடப் பண்ணையின் வெளியீடு. இந்தித் திணிப்புக்கு எதிரான அறப்போர் பற்றிய 5 கட்டுரைகளின் தொகுப்பு. அவை அறப்போர், அறப்போருக்கு அழைக்கிறார், இந்தியின் நிலைமை, அன்னைத் தமிழை மீட்டு வாகை சூடுவோம் வாரீர், இன்பத் தமிழகத்தில் அந்நிய ஆதிக்க வளரவிடோம் ஆகிய கட்டுரைகளாகும். இதன் நான்காவது பதிப்பு 1979இல் வெளிவந்தது. முதல் பதிப்பு பற்றிய விபரம் கிடைக்கவில்லை.

"தமிழர்கள் வம்பு சண்டையில் ஈடுபடுபவர்கள் அல்ல. ஆனால் வந்த சண்டையை விடாதவர்கள். ஆட்சியாளரின் ஆணவத்திற்கு அடி பணிவதும் அருமைத் தமிழினத்தவரின் பண்பல்ல. எனவே அறப்போர் தொடுக்கத் தீர்மானிப்போம்.

இது மொழிப்போர் மட்டுமல்ல, கலாச்சாரப்போர். எனவே அறவே விட்டுக் கொடுக்க முடியாது. ஒரு நாட்டை இன்னொரு நாடு கைப்பற்றுவதாயிருந்தால் ஒன்று படையெடுப்பின் மூலமோ அல்லது வியாபாரத்தின் மூலமோ அல்லது கலாச்சாரத்தின் மூலமோ ஆகிய இம்மூன்று முறைகளின் மூலமே தான் கைப்பற்ற வேண்டும்."

இவ்வாறு அண்ணா தான் எடுத்துக் கொண்ட கருத்தை விளக்கக் கடுமையாக முயற்சி செய்கிறார். மறுக்க இயலாத ஆதாரங்களை ஆணித்தரமாக எடுத்து வைக்கிறார்.

## டில்லி தர்பார்

அண்ணா அவர்கள் அவ்வப்பொழுது 'திராவிட நாடு' இதழ்களில் எழுதி வந்த அழகுத் தமிழ்க் கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல். இது 1986இல் வெளிவந்தது.

"இந்நூலில் அண்ணா அவர்களின் அனல் தெறிக்கும் நடை உண்டு. அழகுதமிழ் நடை உண்டு. நையாண்டி உண்டு. ஆழ்ந்த பொருளாதாரக் கருத்துக்களைப் புலப்படுத்தும் ஆற்றல் வாய்ந்த நடையும் உண்டு", என்பார் பாரதி நிலைய பழ. சிதம்பரம்.

இதில் பொக்கிஷம் பாரீர், கடிதம் எழுதும் கட்டம், அது அல்லவோ நாடு, ஏழாண்டுகள் எவ்வளவு பெரிய வீழ்ச்சி, திவ்யபாதம் தேவையாம், மஞ்சள் கொலு, பட்டம் பறக்குதடி பாப்பா, அரசியல் கொடும்பாவி, டாக்டர் கூறுகிறார், பணம் பாழாகும் படலம், அவர் ஒரு வானவில், டில்லி தர்பார் பார்பார், மன்னிக்க முடியாது - என 13 கட்டுரைகள் அடங்கி உள்ளன.

'பொக்கிஷம் பாரீர்' என்ற கட்டுரை பண்டித நேருவின் சரித்திர நூல் பற்றியது. இதில் இராமாயணம் பற்றிய தனது கருத்தை அவர் மாற்றிக் கொண்டதை "அப்படிப் பண்டிதர் கூற வேண்டிய நிர்பந்தத்துக்கு உள்ளானதை எண்ணும் பொழுது, நாம் உண்மையிலேயே வருந்துகிறோம். அவரது, நிலைக்கு இரங்குகிறோம்" என்று கேலி செய்கிறார்.

## மக்கள் கரமும் மன்னன் சிரமும்

மக்கள் கரம் மன்னன் சிரத்தையும் கொய்திடும் வலிமை பெற்றது. அது ஏர் பிடிக்கும், துலாக்கோல் பிடிக்கும், கூப்பும், தவழும், வரி செலுத்தும், வணக்கம் கூறும் - ஆனால் தாங்கொணாத கொடுமை செய்து, உரிமையைப் பறித்திடக் கொடுங்கோலன் கிளம்பினால், அந்தக்கரம், அவன் சிரம் அறுக்கும். சார்லஸ் மன்னன் சம்பவம் இதைக் காட்டும் பயங்கரப் பாடம். பாராள்வோர் எப்போதும் நினைவில் வைத்திருக்க வேண்டிய பாடம்.

'திராவிட நாடு' இதழில் தொடர் கட்டுரையாக வெளிவந்த அந்தக் கதை இங்கு நூல் வடிவில் தரப்பட்டிருக்கிறது. பாரதி நிலையம் செப்டம்பர், 1986இல் நூலாக வெளியிட்டது.

முதலாம் சார்லஸ் மன்னன், மக்களை, கல்லுருவில் இருக்கும் புலி என்று எண்ணியே - காரிய மாற்றினான் - சிரம் இழந்தான். பொதுவாகவே, மக்களின் இயல்பு அறிதல் எளிதல்ல; அதிலும் பிரிட்டிஷ் மக்களின் இயல்போ, மேலும் அதிகமான விசித்திரம் நிரம்பியது. அவர்கள் 'பொதி சுமக்கும் மாடு' போலவும் இருந்திருக்கிறார்கள். பாயும் புலியாகவும் மாறி இருக்கிறார்கள். இந்த வரலாற்றை அண்ணா இனிய தமிழில் எழுதியிருக்கிறார்.

## இலக்கிய சோலை

தமிழ் நாடு மிகவும் தொன்மை உடைய நாடு; தமிழ் மிகவும் தொன்மையான மொழி; பழந்தமிழகம் செய்தியால் விரிந்ததாகவும் சிறப்பால் ஆழ்ந்ததாகவும் வரலாற்றுச் சான்றுகள் எட்டமுடியாத அளவு உயர்ந்ததாகவும்

விளங்குகிறது. ரசனைக்காக எழுதுவதை விட, கவலையை மறப்பதற்காகக் கற்பனையில் பறப்பதை விட பொழுது போக்கிற்காகப் படிப்பதை விட, நேரிடையாகவே பழந்தமிழகத்தைக் காண - பழந்தமிழ் மக்களைக் காண- அமரர் அண்ணா அவர்கள் இலக்கியக் கட்டுரைகளைத் தனியாகவும் தம்பிக்கு எழுதிய கடிதங்களிலும் எழுதியுள்ளார். அவற்றின் தொகுப்பினை 1988இல் பூம்புகார் பதிப்பகம் வெளியிட்டுள்ளது.

இதில் பழந்தமிழகத்தின் மொழி வளம், கவிதை வளம், பழந்தமிழர் போர்த்திறன், மாதவியின் ஒப்பனை, தலையாலங்கானத்து செரு வென்ற நெடுஞ்செழியன், புறநானூற்றுக் காட்சி, பாசறையில் நெடுஞ்செழியன் பாங்கு, பிரிவு *(நெடுநல்வாடை)*, பாரி பறித்த பறி *(முல்லைப்பாட்டு)*, பட்டினப்பாலை, மலைபடுகடாம், குறிஞ்சிக் காட்சி, நிலமடந்தை, கலிங்கத்துப் பரணி, பூங்காவில் புலவர், பைங்கிளிக்குப் பாலூட்டும் செந்தாமரையாள் எனும் 16 கட்டுரைகள் உள்ளன.

**கம்பரசம்**

பெரியார் கம்ப இராமாயணத்தை எரிக்க வேண்டும் என்று இயக்கம் நடத்தினார். இதற்கு வலு சேர்க்கவே அண்ணா 'கம்பரசம்' என்ற தொடர் கட்டுரை எழுதினார். கம்பர் தேவை இல்லாத இடங்களில் வேண்டும் என்றே ஆபாசத்தைப் புகுத்தியுள்ளார் என்பதை டோஸ் -1, டோஸ் -2 என்று எழுதினார். இது இலக்கிய விமர்சனம் அன்று பிரச்சாரம் என்பவரும் உள்ளனர்.

"தமிழ் மொழியில் நல்ல சொல்லாட்சித் திறம் உனக்குக் கிடைக்க வேண்டுமானால் கம்ப இராமாயணத்தையும் திருவாசகத்தையும் நீ ஊன்றி படிக்க வேண்டும்" என்றுதான் அண்ணா நண்பர்களிடம் சொல்வார். ஆனால் கம்பனை ஓர் தெய்வீக வாதி என்று சொல்வதை விட அவன் ஓர் இலக்கிய வாதி என்பதுவே இவரது நம்பிக்கை.

இதிகாசங்களும் புராணங்களும் நம்மை பக்தியின் பெயரால் அடிமையாக்கி விட்டன. நம்மை நாலாவது சாதியாக்கி விட்டன. அண்ணா புராண இதிகாசங்களின் பித்தலாட்டங்களை அம்பலப்படுத்தினார். கம்பர் பக்தியைப் புகட்டும் இராமாயணத்திலும் காமரசத்தைக் கண்ட கண்ட இடங்களில் எல்லாம் புகுத்தியுள்ளார். தமிழர் நம் சங்க இலக்கியங்களைக் கற்று வீரமறவர்களாகத் திகழ வேண்டியவர்கள். ஆரியக் கொள்கைக்கு ஆலவட்டம் வீசுவதை விட்டொழிக்க வேண்டும் என அண்ணா விரும்பினார். அதற்கான முயற்சியே இந்நூல்.

"கலா ரசிகர்களே! தாமரைப் பூத்த தடாகங்களைப் பார்த்தோம். உங்களைத்தான் கேட்கிறேன். இவைகளிலே எந்தத் தடாகம் பண்பும் பாவின் இனிமையும் சம எடையாக்கப்பட்டுத் தீட்டப்பட்டிருக்கிறது? என்று நீங்களே கூறுங்கள். புரட்சிக் கவிஞர் குப்பன்கதை கூறுகிறார்; அதி வீரராம பாண்டியன் அரசன் கதை கூறுகிறார். கம்பரோ தேவக்கதை கூறுகிறார். வெறும்பொழுது போக்கு பாட்டல்ல கம்பருடையது; மார்க்க நூலிலே இந்தக் காமமது கரை

புரண்டு ஓடலாமா என்பதுதான் நமது கேள்வி" என்று கேட்கிறார் அண்ணா? இன்று வரை பதில் இல்லை.

## வர்ணாஸ்ரமம்

பேரறிஞர் சர்.ஆர்.கே. ஷண்முகம் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய சொற்பொழிவுக்கு அண்ணா பதிலளித்திருப்பதே இந்தச் சிறுநூல். அண்ணாவின் பேச்சும் எழுத்தும் தனித் தியங்குகிறதென்பது மட்டும் வெகு நிச்சயம். இதன் விளக்கமே வர்ணாஸ்ரமம்.

சர். சண்மும் 'பதவி' யினின்றும் விலக இருப்பதாகச் செய்தி வந்தது. இவர் தமிழருக்குத் தலைமை தாங்கும் பணியை மேற்கொள்ள வேண்டும் என்று ஆவல் கொண்டவர்களில் அண்ணாவும் ஒருவர். அவர் முன்பு கொச்சி அரச சேவையினின்றும் விலகியபோது அன்றும் அவருக்கு ஆவல் இருந்தது. அதனைச் சிறுகட்டுரைகளாக்கி 'திராவிடநாடு' இதழில் வெளியிட்டார். சிலர் இவரது நோக்கத்தைக் குறை கூறுவது என்று எண்ணினர்.

"வர்ணாஸ்ரமம் என்ற மிகப்பெரிய கேட்டினைக் களைந்தாக வேண்டிய பெரிய, பாரமான, ஆபத்தளிக்கக் கூடிய பொறுப்பு நமக்கு இன்று இருக்கிறது. வர்ணாஸ்ரமத்தின் கோர விளைவுகளை நாம் நன்கு புரிந்து கொள்ளும்படி, நமது தலைவர் பெரியார் நமக்குப் பேருதவி செய்துள்ளார். அவருடன் துணை நின்று, வர்ணாஸ்ரமத்தைத் தாக்கித் தகர்க்க வீரர்கள் தேவை. சர் *சண்முகத்தை இத்தகு வீரப்படைக்குத் தலைமை தாங்கி* நடாத்திச் செல்லுமாறு நான் உங்கள் சார்பில் அனுப்பும் அழைப்புதான் இது" என்பார் அண்ணா *(முன்னுரை)*. திராவிடப் பண்ணை மூலம் இது எட்டுப் பதிப்புகள் வந்துள்ளன.

## மாஜிக் கடவுள்கள்

இது அண்ணாவின் கட்டுரைத் தொடர். ஒரு காலத்தில் கிரேக்க நாட்டினை ஆதிக்கம் செலுத்திய கடவுள்கள் எவ்வாறு காலப்போக்கில் செல்வாக்கு இழந்து போனார்கள் என்பதை அதில் சித்தரித்தார். மக்களின் மனத்தில் ஆதிக்கம் செலுத்திய ஆன்மீகச் சக்திகளே மாஜி ஆகி வருகிற போது அரசியல், சமூக இயக்கங்களில் நிரந்தர சக்தியாக எதுவும் நிலைத்து விட *முடியாது என்கிற உண்மையை* உணர்த்துவதற்காகவே கிரேக்கக் கடவுள்களின் வீழ்ச்சியையே அண்ணா கருப்பொருளாக வைத்துக் கொண்டார்.

## 'ரோமபுரி ராணிகள்'

கிரேக்க வரலாற்றின் ஏடுகளில் இருந்து சில பகுதிகளை இந்த நூலில் எடுத்தெழுதினார். அரசியலில் அவரைப் பிடிக்காதவர்கள் அவர் இதை ஆபாசமாக எழுதியிருப்பதாகக் குறை கூறியதுமுண்டு. ஆனால் தமிழ் உரை நடையில் அண்ணாவின் 'ரோமாபுரி ராணிகள்' ஒரு மைல் கல்.

வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட பகுதியை நகாசு வேலை செய்து ஜனரஞ்சகமாகச் சொல்வது சுலபமன்று. அண்ணா இதில் அரியசாதனை

புரிந்துள்ளார். இதனைப் படித்து முடிக்கும் போது சிற்றின்ப வெள்ளப் பெருக்கால் சீரழிந்து போன ஒரு சாம்ராஜ்யத்திற்குள் நுழைந்து வெளிவரும் அனுபவம் நமக்கு ஏற்படுகிறது. ரோம சாம்ராஜ்யத்தின் ஆபாசத்தை ஆபாசம் இல்லாமல் இவர் எழுதி இருந்தால் வரலாற்றின் சரியான உணர்வை வாசகர்களால் நிச்சயம் பெற்றிருக்க முடியாது என்பார் பி.சி. கணேசன் *(ப. 44)*

"ஜூலியா, பெரிய ஜாலக்காரி! சிங்காரி! சிரித்துச் சித்திரவதை செய்யும் சொகுசுக்காரி வெறும் அலங்காரி மட்டுமல்ல பலே கைகாரி. சாதுர்யமான பேச்சுக்காரி. சரசத்திற்கு அதிகாரி! ஆடவர் கூட்டத்துக்கு அவள் ஓர் சிங்காரி! அகஸ்டஸின் மானத்தைக் கெடுத்த அபசாரி" - இப்படி அண்ணா சொல்ல வந்த உணர்ச்சிகளுக்கு ஏற்பச் சொற்களைத் தேர்ந்தெடுத்து நடமாட விடுகிறார்.

"பண்டைய ரோம் சாம்ராஜ்யம் போக போக்கியங்களால் பொசுக்கப் பட்டது. வாளேந்தும் வீரர்கள் வளை ஏந்தும் தையலரின் அடிமைகளாகி அரசை அழித்துக் கொண்டனர். அத்தகைய காம வல்லிகளின் கதைகள், சுவை மட்டுமல்ல, கருத்துக்கள் பல தெரிந்து கொள்ள உதவி செய்யும்" என்பார் அண்ணா *(முன்னுரை)*.

15 கட்டுரைகள் இதில் உள்ளன. இந்நூல் அண்ணாவின் அழகுத் தமிழ்நடைக்கு அலங்கார நடைக்குச் சான்றாக அமைகிறது. வரலாற்று நிகழ்ச்சிகளைக் கதை போலவே கண்முன் நடப்பது போலவே எழுதும் உத்தியில் அண்ணாவின் ஆற்றலுக்கு எடுத்துக்காட்டாக உள்ளன.

### பயணக் கட்டுரைகள்

அண்ணாவின் கொள்கை வெற்றி பெற கரடு முரடான பாதை, உணவு, உறக்கம், இரவு, பகல் என்று பாராமல் பயணங்கள் செய்தார். தெற்காசியாவிற்குச் சுற்றுப்பயணம் செய்தார். நியூயார்க்கிலுள்ள "யேல்" பல்கலைக்கழகத்தின் அழைப்பின் பேரில் அங்கு சென்று கலந்து கொண்டு பல தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள் செய்து வந்தார். இறுதியில் அவர் நோய் வாய்ப்பட்டு நியூயார்க் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றார். இவற்றை அண்ணாவே பயணக் கட்டுரைகளாகப் பதிவு செய்துள்ளார்.

அண்ணா விடிய விடிய கண்விழித்து காரில் பயணம் செய்வார். 26-5-1933 முதல் 2-11-1968 வரை காங்கேயம் முதல் அமெரிக்கா வரை பயணம் செய்திருக்கிறார். தமிழ்நாட்டு ஊர்கள், பம்பாய், கல்கத்தா, தில்லி, பெங்களூர், தெனாலி, கோலார் போன்ற பிற மாநிலங்கள், கிழக்காசிய நாடுகள், அமெரிக்கா, லண்டன், ஹவாய் போன்ற பிற நாடுகள் ஆகியவற்றில் இவரது பயணங்கள் தொடர்ந்தன. பெரியாரோடும் நண்பர்களோடும் வடநாட்டுப் பயணம் செய்ததும் குறிப்பிடத்தக்கது.

ஆந்திராவில் உள்ள தெனாலிக்கு அண்ணா சென்று கவிராஜ் இராமசாமி சௌத்ரியின் ஆண்டு விழாவில் கலந்து கொண்டு தெலுங்கில் பேசினார். இப்பயணத்தைப் பற்றி பேரா. மா.கி. தசிரதனும் அமெரிக்கப் பயணம் பற்றி சாவியும் டாக்டர். சி.என்.ஏ. பரிமளம் எம்.எஸ். உதய மூர்த்தியும் எழுதியுள்ளனர்.

"அண்ணா, கட்டுரை என்ற வடிவத்தைத் திறனாய்வாக, மடல்களாக எழுதியிருப்பது போற்றத்தக்கதாய் இருந்தது. திராவிடநாடு தொடர்பான சிந்தனைகளும் பகுத்தறிவு, சீர்திருத்தம் போன்ற சிந்தனைகளும் தலையாய இடம் பெற்றுள்ளன. வரலாற்றுச் சிந்தனைகளும் மேல் நாட்டறிஞரின் வரலாற்று அறிவுடன் சரிநிகர் சமானமாக ஒப்பிடும் தகுதி வாய்ந்திருந்தது" என்று கூறுவார் டாக்டர் ந. வேலுசாமி (அறிஞர் அண்ணாவின் சிந்தனைகள் ஓர் ஆராய்ச்சி, ப. 70).

தமிழ் உரைநடைப்பாணியில் ஒரு புதுமையை விளைவித்தவர் அறிஞர் அண்ணா. ஆற்றொழுக்கான போக்குடைய நடையே சிறந்த தமிழ் நடையென்று நிலவி வந்த காலத்தில் துள்ளும் கவிதை போலவும் தமிழ் உரைநடை எழுதலாம்; அந்த நடையிலே கவர்ச்சியுள்ளது. அது நெஞ்சை ஈர்க்கவல்லது; உணர்ச்சிகளைப் பெருக்க வல்லது என்று தம் எழுத்துக்களால் மெய்ப்பித்துக் காட்டியவர் அண்ணா. பேச்சு நடையும் எழுத்து நடையும் ஒன்று போலவே அமைந்த அண்ணாவின் தமிழ் அழகுத் தமிழாகும்.

---

# 9

# கடிதங்கள்

லெனின், மாவோ, ஹோசிமின், எங்கல், நேரு, கலைஞர் ஆகியோரின் கடிதங்கள் அரசியல் உலகில் குறிப்பிடத்தக்கவை. டாக்டர் மு. வரதராசனார், கி.ரா. ஆகியோரின் கடிதங்கள் இலக்கிய உலகில் குறிப்பிடத்தக்கவை. அண்ணாவின் கடிதங்களோ அரசியலும் இலக்கியமும் சேர்ந்த கலவையாக உள்ளன.

தமிழில் கடித இலக்கியம் தனியாக இல்லை. காப்பியங்களில் கடிதங்கள் சிறப்பிக்கப்பட்டன. மாதவி கோவலனுக்கு எழுதிய இரு கடிதங்கள், சீவகனுக்குக் காந்தருவதத்தை எழுதிய மடல், பெரிய புராணத்து திருமுகப் பாசுரம் போன்றவை குறிப்பிடத்தக்கவை. சீட்டுக் கவிகள், இடைக்காலத்து பாட்டு மடல்கள். அந்தகக் கவி வீரராகவர் முதல் பாரதியார் வரை பலர் இதில் வெற்றி பெற்றனர். உலக அளவில் சாக்ரட்டீஸ், பிலிப் அரசனை வரவேற்பது பற்றி அத்தீனிய மக்களுக்கு எழுதினார். சிசாரோ, செனாகா, டால்ஸ்டாய், பாஸ்டன், ஜேம்ஸ் ஹோவல், டோரத்தி ஆஸ்பான், சாமுவேல் ரிச்சர்ட்சன், ஹோரஸ் வால்போல், செஸ்டர்ஃபீல்டு, பெர்னாட்சா, சுவாமி விவேகானந்தர், அண்ணல் காந்தியடிகள், சவகர்லால் நேரு போன்றோர் பிறமொழிகளில் கடித இலக்கியத்தை வளர்த்தனர். தமிழில் மறைமலையடிகள், டி.கே.சி., சத்திய மூர்த்தி போன்றவர்களும் சிறப்பாகக் கடிதம் எழுதியுள்ளனர்.

எந்தப் பிரச்சனையைப் பற்றி எழுத நினைத்தாலும் அவருக்குக் கை கொடுத்து உதவியது மடல் வடிவம். ஒவ்வொரு தம்பிக்கும் கட்சித் தொண்டருக்கும் தனித்தனியே எழுதிக் கொண்டிருக்க முடியாதாகையால் நேர் நின்று உரைக்கும் கடித முறையை அண்ணா தேர்ந்தெடுத்தார்.

பெரும்பாலான மடல்கள் ஒவ்வொன்றும் தனித்தனி கருத்து, நிகழ்ச்சி, அனுபவம் ஆகியவற்றை விளக்குவன. சில தொடராக அடுத்தடுத்து வந்தன. சிலவற்றில் தேவாரப்பதிகங்களில் காப்புப் பாடல் வருவது போல் எழுதுவார். தலைப்புகளைச் சொல், தொடர், ஓசை, பொருள் என்று பல சிறப்புகளுடன் அமைப்பார். இது கடிதத்தில் பொதிந்துள்ள கருத்து கருவூலத்தைத் திறந்து காட்டும் திறவு கோலாகும். சிலவற்றில் உள் தலைப்புகளும் இருக்கும்.

கட்டுரை, நாட்குறிப்பு, நெடுங்கதை, சிறுகதை, நாடகம், துணுக்கு எனப் பல்வேறு வடிவங்களிலும் கடிதங்கள் அமையும். இது மடல் இலக்கிய

வரலாற்றில் சிறப்பிடம் பெறும். சமூகம், அரசியல், இலக்கியம், கலை, நாடு, மொழி, இனம், பண்பாடு எனப் பல்வேறு கருத்துகளைக் கடிதங்கள் கொண்டிருக்கும். அன்றாட நாட்டு நடப்பு, உலகியல் நிலை, ஊரார் உறவு எனப் பலவகைச் செய்திகளைக் காட்டும் பலகணியாகும். இவரது கடிதங்கள் மக்களிடையே சமூக உணர்வை வளர்த்தன. சமயச் சடங்கு விழா, மணமுறை, சொற்பொழிவு மேடை முறை ஆகியவை புத்துருவம் கொண்டன. மடல் இலக்கியம் மக்கள் இலக்கியம் ஆயிற்று.

"அண்ணா தம் எண்ணங்களை, செயல் திட்டங்களை, நெறி முறைகளை, வேண்டுகோள்களை வெளியிட்டு அறிவையும் இன உணர்ச்சியையும் ஊட்டினார்" என்பார் டாக்டர் கு. விவேகானந்தன் (அண்ணாயிசம், ப. 26)

மேலும் "அண்ணாவின் கடிதங்கள் (290) சிறந்த மக்கள் இலக்கியம் ஆகும். அதன் கண் அவருடைய தன்வரலாறு பொதிந்துள்ளது. இவ்விலக்கிய வகை, பகுத்தறிவுக் கருத்துக்களைக் கலை நயத்தோடு வழங்குகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக பண்பாட்டு அடிப்படையில் சிக்கல்களுக்குத் தீர்வுகாணும் 'அண்ணாயிசம்' என்னும் தத்துவத்தை விளக்குகிறது. மனிதப் பண்பை உயிர்ப் பண்பாக வலியுறுத்தும் பண்பாட்டுப் பேழைகளாகத் திகழ்கின்றன" என்றும் கூறுகிறார். (ப. 252).

10-2-1938 முதல் விடுதலை நாளில் அவ்வப்போது சில கடிதங்கள் எழுதி வந்தார். முதல் மடல் 'ஆடி அடங்கினீரே அலகாபாத் பண்டிதரே'. இது பின்னர் பரதன் மடல் (38), பரதன் எழுதிய பகிரங்கக் கடிதம் (39), யாருக்கு யார் எழுதியிருப்பார்கள் (39), சமதர்மன் மடல் என்று தொடர்ந்தது.

தானே ஆசிரியராக இருந்து நடத்தி வந்த திராவிடநாடு வார இதழில் 25-4-1943 முதல் எழுதி வந்தார். 'அவருக்கு இவர் எழுதினால்' முதல் கடிதம். 11 கடிதங்கள் அவ்வப்போது எழுதிய இவர் 8-5-1955 முதல் வாரந்தோறும் 171 கடிதங்கள் எழுதினார். 'தம்பிக்கு' என்ற பெயரில் 21-7-1964 முதல் தாமே நடத்திய காஞ்சி இதழில் வாரந்தோறும் 119 மடல்கள் எழுதினார். ஆக 290 மடல்கள். தனது Home Land, Home Rule ஆகிய இதழ்களில் Dear Brother என அழைத்து ஆங்கிலத்திலும் 26 மடல்கள் எழுதி வந்தார். அண்ணாவின் மடல்கள் ஏறக்குறைய 3000 பக்கங்கள் கொண்டவை.

'திராவிட நாடு' இதழில் 1943இல் 'நீலன் நிருபம்' என்றும் தீட்டினார் கடிதங்களை. இவரது கடிதம் 1969 பொங்கல் வரை நீடித்தது.

## தம்பிக்குக் கடிதங்கள்

அறிஞர் அண்ணா அவர்கள் 'திராவிட நாடு' இதழில் 'தம்பிக்கு' என்ற தலைப்பில் எழுதி வந்த (1938-1967) கடிதங்களைத் தொகுத்து 1963இல் இருதொகுதிகளாகவும் 1979-இல் தொடங்கி 1982 வரை எட்டு தொகுதிகளாகவும் மொத்தம் 10 தொகுதிகளை முதலில் கொண்டு வந்தனர் பாரி நிலையத்தார். 1986இல் 11, 12 ஆம் தொகுதிகளையும் தொடர்ந்து எட்டு தொகுதிகளையும் சேர்த்து 20 தொகுதிகளைக் கொண்டு வந்தனர்.

"அறிஞர் அண்ணா அவர்களின் எழுத்து வன்மையையும், அவரது எழுதுகோல் முனையிலிருந்து உருப்பெற்றெழுந்து நாடெங்கணும் வெற்றியுலா வரும் கதைகள் - கட்டுரைகள் - நாடகங்கள் - திரைப்பட வசனங்கள் - எழுத்தோவியச் சுவரொட்டிகள், துண்டு அறிக்கைகள் ஆகியவற்றையும், அவற்றின் தமிழ் மணம் மிகச் சிறந்த முறையில் கமழ்வதையும், இனிய ஓசை பயக்கும் சொற்கள் அருவியின் வீழ்ச்சியெனத் தங்குதடையின்றிப் பாய்ந்து துள்ளிக்குதித்து ஓடுவதையும், கருத்துக்கள் செறிந்து காணப்படுவதையும், உவமை நயங்கள் பெருவாரியாக ஆங்காங்குப் பளிச்சிட்டுமின்னுவதையும், அறிவும் ஆற்றலும், உண்மையும் உணர்வும், திண்மையும் திட்பமும் சொல்லழகும் பொருளாழமும் ஒன்றையொன்று போட்டி போட்டுக் கொண்டு துள்ளிக் குதிப்பதையும், தமிழ் கற்றறிந்த நல்லறிவு படைத்தோர் அனைவரும் நன்குணர்ந்தனர். பொதுவாகக் காதலியிடமிருந்தும், நண்பர்களிடமிருந்தும் நெருங்கிய உறவினர்களிடமிருந்தும் வரும் முடங்கல்களைப் படிப்பத்தில் ஒருவன் எவ்வளவு ஆர்வமும் அக்கறையும் அகமகிழ்ச்சியும் காட்டுவானோ அவ்வளவு ஆர்வமும் அக்கறையும் அகமகிழ்ச்சியும் அறிஞர் அண்ணா அவர்களின் கடிதங்களைப் படிப்பதிலும் ஒவ்வொருவரும் காட்டுவர். அவ்வளவு கவர்ச்சியும் அறிவுத்தெளிவும் ஆராய்ச்சித் திறனும் அறிஞர் அண்ணா அவர்களின் கடிதங்களில் காணப்பெறும்", என்பார் நாவலர் நெடுஞ்செழியன் (முன்னுரை)

## கடிதங்களின் அமைப்பு

அண்ணா தமது கடிதங்களில் கருத்து விளக்கத்துக்காகச் சின்னஞ்சிறு நாடோடிக் கதைகளையும் பயன்படுத்துவது வழக்கம். அவை அவரால் எங்காவது படித்ததாகவும் எவர் மூலமாகவோ கேட்டதாகவோ இருக்கலாம். 'சிட்டுக்குருவி கதை' அவற்றில் ஒன்று.

"சிட்டுக்குருவி ஒன்று. அதற்கு சிறிதளவு அதிகமான குறும்புத் தனமாம். கதை தானே தம்பி. சிட்டுக்குருவிக்குக் குறும்பு இருக்கும் என்று எப்படி நம்புவது என்று கேட்டு விடாதே.

மரத்திலே உட்கார்ந்து கொண்டிருந்த அதனிடம் ஒரு 'காசு' இருந்தது. அவ்வழியே ஒரு மன்னன் சென்று கொண்டிருக்கக் கண்ட குருவி, குறும்புள்ளதல்லவோ அதனால் கூவிற்றாம் :

"எங்கிட்டே
ஒரு காசு இருக்கு
யாருக்கு வேணும்"

மன்னன் புன்னகையுடன் இக்காட்சியைக் கண்டு விட்டு மேலால் நடந்தான். விடவில்லை குருவி - கீச்சுக் கீச்சென்று விடாமல் கத்திற்றாம்.

"எங்கிட்டே
ஒரு காசு இருக்கு
யாருக்கு வேணும்"

வேடிக்கைக்காக மன்னன் "எனக்குத்தான் கொடேன்" என்று கேட்டானாம். குருவி உடனே, "ஐயயே, ஒரு ராஜாவுக்குக் காசு வேணுமாம். என் காசு வேணுமாம்" என்று கூவிற்றாம்.

'செச்சே மெத்தக் குறும்புத்தனம் கொண்ட குருவி இது', என்று எண்ணிக் கொண்டு மன்னன் தன் வழியே செல்லலானான். குருவி விடவில்லை.

"எனக்குப் பயந்து
எடுத்தான் ஓட்டம்
இதோ ஒரு ராஜா'

என்று பாடிற்றாம்.

"போக்கிரி குருவியே" என்று கோபமாக அல்ல, செல்லமாகக் கூறியபடி, மன்னன் குருவியை ஒட்டினானாம். குருவி சும்மா இருந்ததா அப்போதும், அதுதான் இல்லை.

"குருவியைக் கொல்ல
வருகிற ராஜா
பறந்துவா பார்ப்போம்"

என்று சவால் விட்டதாம்.

மன்னன் சிரித்தபடி தன் அரண்மனையை நோக்கி விரைந்தான். குருவி குறும்புத்தனத்தை விடவில்லை.

"எனக்குப் பயந்து
ஓடிப் போனான்
ஏமாந்த ராஜா"

என்று கூவிற்றாம்.

கதை! கருத்து என்ன என்பது புரிகிறதல்லவா. தி.மு.க. தானே. பேசுபவர்கள் ஓயாமல் பேசுவார்கள்" (அ.அ.க., III ப. 85)

ஒரு கடிதத்தில் இப்படிச் சொல்லப்படுகிறது ஒரு கதை. நாடோடிக் கதைதான். எனினும் நயமாகச் சொல்லப்பட்டுள்ளது.

இதைப்போலவே 'மாமியார் வீட்டில் சிம்மினி தின்ற கதை', (த, அ.க., III ப. 157), 'மல்லன்கதை' (த, அ.க., II ப. 31) 'கிழப்புலி கதை' (த, அ.க., I ப. 47), ஆப்பசைத்த மந்தி கதை, (த, அ.க., I ப. 97), 'அண்ணன் தம்பிகள் ஆறுதல் சொல்லப்போன கதை' (த, அ.க., I ப. 122), 'இந்திராணி சேலை கதை' (த, அ.க., I ப. 130-133), முரடன் கதை, (த, அ.க., I ப. 226) எனப் பல்வேறு கதைகள் அண்ணாவால் தன் கடிதங்களில் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் நகைச்சுவையோடு நக்கலும் தொக்கி நிற்கும்.

பழமொழிகள் நம் மக்களால் பண்டு தொட்டு பயன்படுத்தப்பட்டு வருகின்றன. பாமரர் படித்தவர் என்ற பேதமில்லாமல் அனைத்து தரப்பு மக்களாலும் அன்றாடம் பேச்சிலும் எழுத்திலும் பயின்று வருகின்றன பழமொழிகள். பொதுவாக பாமரர்கள் பேச்சிலும் படித்தவர்கள் எழுத்திலும் பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர். அண்ணாவும் படிப்பவர்கள் எளிதில்

உணர்ந்து கொள்ளும் வண்ணம் பழமொழிகளையும் பயன்படுத்தி சொல்ல வந்தவற்றைச் சுருக்கமாகவும் சுருக்கென்றும் சொல்லி விடுகிறார். இதுவொரு இனிய உத்தியும் கூடத்தான்.

"மெத்த அலுத்து வந்திருக்கிறாள் அத்தை
குத்திப் புடைக்கச் சொல்லு நெல்லை"

*(த, அ.க., III ப. 117)*

தம்பி, வினோபா கூடத்தான் உள்ளூரச் சிரித்திருக்கிறார்.

"தான் ஆடா விட்டாலும் தன் சதை ஆடும்" என்பார்களே. அது தமிழகத்தில் விபத்து நேரிடும் போது நேரு பண்டிதருக்கு ஏற்படுவதில்லை. *(த, அ.க., IV ப. 219)*

"குருடும் குருடும் சேர்ந்து
குருட்டாட்டம் ஆடுவது போல'

என்பார்களே. அதுபோல இன்று ஆட்சி முறை இருப்பதாக அவர் கருதுகிறார். *(த, அ.க., VII ப. 112)*

இவ்வாறு சந்தர்ப்பத்துக்கு ஏற்றாற்போன்று சரளமாகப் பழமொழிகளைக் கூறவதில் அண்ணா சமர்த்தராக இருக்கிறார்.

"பாவி பொல்லாதவன்
படுக்கையைத் தட்டிப்போடு" *(த, அ.க., II ப. 73)*

"குதிரை பறிபோன பிறகு
கொட்டிலைப் பூட்டினானாம்" *(த, அ.க., II ப. 100)*

போன்ற பழமொழிகளை அண்ணா எழுதும் போது படிப்பவர்க்கும் பட்டென்று சிரிப்பு வராமல் இருக்காது.

அண்ணா தன் கடிதங்களில் பல்வேறு இடங்களில் பல்வேறு மேற்கோள்களை மிகப் பொருத்தமாகப் பயன்படுத்தி உள்ளார். அவற்றில், தமிழ் இலக்கியங்கள், வெளிநாட்டுக் கதைகள் எனப் பலவிதங்கள்.

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார் பொறுத்தல் தலை"

என்று திருக்குறளையும் *(த, அ.க., XI, ப. 179)*

"பூவார் சோலை மயிலாட
புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய
நடந்தாய் வாழி காவேரி"

என்று சிலப்பதிகாரத்தையும் *(த, அ.க., XI, ப. 92)*

"நல்கினும் நல்கானாயினும்"

என்ற புறநானூற்றுப் பாடலையும் *(த, அ.க, III, ப. 106)*

"போர்க்குறி காயமே
புகழின் காயம்"

என்ற மனோன்மணீய வரிகளையும் *(த, அ.க., IV, ப. 53)*

"அஞ்சி அஞ்சி சாவார் இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே"

என்ற பாரதி வரிகளையும் (த, அ.க., VII, ப. 123) அண்ணா மேற்கோள் காட்டிய வண்ணம் செல்கிறார்.

அத்துடன் 'ஓ ஹென்றியின் கதையையும் (த, அக, VII, ப. 123) பெர்னாட்ஷாவின் ஆப்பிள் ஹார்ட்டையும் (த, அ.க., VII, ப. 144) அண்ணா மேற்கோள் காட்டி விளக்கி இருப்பதையும் குறிப்பிட வேண்டும்.

அண்ணா தம் கடிதங்களில் கட்டுரை வடிவத்தையே மிகுதியாகக் கையாண்டுள்ளார். எனினும் ஆங்காங்கே நாடக வடிவத்துக்கும் தாவியுள்ளார்.

சான்றாக 'இன்பநாளிது! இதயம் பாடுது' என்று ஒரு கடிதம் (த, அ.க., XI ப. 68) இதில் இடையில் ஒரு சிறு நாடகம். "மாடி வீடு; கூடம்! செல்வர் அங்கு; அவரை அண்டி வாடிக்கையாக வேலை செய்திடும் வீராச்சாமி! செல்வர் பேர் மாசிலாமணி. இருவர் பேசும் நிலைதான் காட்சி. பேச்சோ கொச்சை, எனினும் காணக் கருத்துக்கள் புதியன பலவும் உண்டு. தம்பி! படிக்கலாம்; நடிக்கலாம்; பகுத்தறிவு காண!

மா : - டே வீராசாமி! ஏன் வேலைக்காரி கண்ணைக் கசக்கிக் கொண்டு இருந்தா, உள்ளே!

வீராச்சாமி : - கொஞ்சம் திட்டிப் போட்டேனுங்க. . .

மா : - ஏண்டா?

வீ : - பாருங்க எஜமான், நான் குளிக்கணும்னு தண்ணி எடுத்து வைத்தேன் அவா போயி கையக் கழுவினா அதிலே. அவா கையில அழுக்கு. அதைப் போயி அதில கழுவி, குளிக்கிற தண்ணியையே அசுத்தப்படுத்தி விட்டா.

மா :- இதுக்காடா கோவிச்சுக்கிட்டே. அட மடப்பயலே! ஏண்டா! போன வருஷம் நீ, தஞ்சாவூர் போறேன்னு புளுகிட்டு கும்பகோணம் போனேயேல்லோ. . .

வீ :- போனேனுங்க. .

மா :- எதுக்குடா? பன்னீர்லேயே குளிச்சே! ஏண்டா! சேத்துலதானேடா புரண்டுட்டு வந்தே, எருமை போலே!

வீ :- மாமாங்கம்ங்க. .

இப்படிப் போகிறது நாடகம். இந்த உத்தியை இவர் பல கடிதங்களில் கடைபிடித்துள்ளார். இதன் மூலம் சொல்ல விரும்பும் கருத்தை அவரால் நம் கண்முன்னே காட்சியாய் விரிக்க முடிகிறது.

'அந்திக் கலம்பகம்' என்ற புது வடிவப் படைப்பினை அண்ணா எழுதினார். "அந்திக் கலம்பகம் புதுமுறைத் தொடராக அளிக்க எண்ணியிருக்கிறேன். கோடுகள் தயாராகி விட்டன. வடிவம் விரைவில், வண்ணமும் கூட்டிட இயலும்" என்பார் அண்ணா. (இனியன, பல இனி! தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், பகுதி -5, ப. 123)

பெண்கள் ஓய்வு நேரங்களில் ஒன்று கூடி ஊர் வம்பு அளப்பர் இந்நெறியினைக் கூர்ந்து நோக்கிய அண்ணா, மக்கள் உளப்பண்புகளையும் அறிவியல் நுட்பங்களையும் பொது மக்கள் படித்து ஓர்ந்து சுவைத்துப் பயன்பெறத் தக்கதாக 'அந்திக் கலம்பகம்' எனும் இலக்கிய வடிவம் புனைந்துள்ளார். இது பேச்சு மொழியில் இலக்கிய கலைத் திறன்களுடன் படைக்கப்பட்டுள்ளது. மனோன்மணி, பொன்னி, ஏமலதா, வடிவு, பட்டு எனும் பெண்கள் உரையாடும், கருத்துப்போர் நடத்தும் வழக்குரையாடும். புரட்சிப் படைப்பாகிறது. (அ.அ.த. கொ., ப. 290).

## காஞ்சிக் கடிதங்கள்

கைதி எண் 6342 என்ற பெயரில் பாரிநிலையம் 1980இல் நூலாக வெளியிட்டது இந்தி எதிர்ப்பு அறப்போரின் ஒரு கட்டமே 1963இல் இறுதியில், அறிஞர் அண்ணாவும் திராவிட முன்னேற்றக் கழகத்தினரும் நடத்திய அரசியல் சட்டதிலுள்ள மொழிப்பிரிவின் 17வது விதியைப் பொது இடத்தில் கொளுத்தும் போராட்டத்தில் ஈடுபட்டனர். இதில் கலந்து கொள்ள அண்ணா காரில் வரும் போது கைது செய்யப்பட்டு டிசம்பர் 16-ஆம் நாள் ஆறுமாதக் கடுங்காவல் தண்டனை பெற்றார். சிறையில் இருந்த காலத்தில் அண்ணாவும் பிறரும் பெற்ற அனுபவங்களும் அங்கே அண்ணாவின் இதயத்திலே நாள் தோறும் எழுந்த சிந்தனைகளும் கவலைகளும் மிகவும் உருக்கமானவை. அவற்றை அறிஞர் அண்ணா தொடராக 'காஞ்சி' வார இதழில் கடிதங்களாக எழுதி வந்தார்.

அன்பும் பண்பும் அறிவும் தெளிவும் சொல்லாற்றலும் பேச்சாற்றலும் எளிமையும் இனிமையும் ஒருருக் கொண்டாற் போல விளங்கிய அண்ணாவின் கடிதங்களிலே செந்தமிழும் சிந்தனையலைகளும் கொள்கை விளக்கங்களும் குமுறல்களும் கவலைகளும் எள்ளல்களும் அணிஅணியாக நிறைந்து அந்த உணர்வுகளை அனைவரிடமும் தோற்றுவிக்கின்றன.

கடித இலக்கியத்திலே அண்ணாவின் கடிதங்கள் தனிச்சிறப்பு உடையவை. உரிமையோடும் பாசத்தோடும் கூடிய உள்ளத்தின் பிரதி பலிப்பாக விளங்குபவை. சிறையில் தான் படித்த நூல்களைப் பற்றி விரிவாகக் கூறும் அண்ணா தன்னை அறிஞர் என்று மீண்டும் மீண்டும் நிரூபித்து விடுகிறார்.

அண்ணா எழுதிய கடிதங்கள் பொன்னே போல் போற்றி பாதுகாக்கத் தக்கவை. கடித வடிவில் கட்டுரைகள் தீட்டுவதற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்பவை. இலக்கிய உலகில் என்றும் நிலைத்து நிற்கும் சாகா வரம் பெற்றவை.

வெவ்வேறு தலைப்புகளில் பல்வேறு பிரச்சனைகளைப் பற்றி அரசியல், பொருளதாரம், கலை, இலக்கியம், வரலாறு இப்படிப் பல்வேறு பிரிவுகளில் எழுதியதைப் படிப்பதற்காக வாசகர்கள் ஆவலுடன் ஒவ்வொரு இதழ் வரும் நாளையும் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். இத்தகைய எழுச்சியைப் படிப்பவர்கள் இடையில் ஏற்படுத்தி கட்டுரைகள் மூலம் அரிய சாதனை செய்தார்.

தம்பி என்று அழைத்து கடிதத்தைத் தொடங்கும் போது பாசத்தோடு உடன்பிறந்த அண்ணன் ஆரத்தழுவிக் கொள்வதைப் போன்ற பரவச உணர்வைப் படிக்கின்ற ஒவ்வொருவருக்கும் ஏற்படுத்தியது.

சிறை செல்லும் சூழல்வரின் முன் கூட்டியே போதுமான அளவு மடல்களை எழுதிக் கொடுத்து விட்டுச் செல்வது இவரது வழக்கமாகும்.

அண்ணா தமது விருப்பதை வெளிப்படுத்த ஏக்கங்கள், கற்பனைகள், தொலை நோக்கு, காதல், வீரம், வெற்றிகளை அழியாச் செல்வமாக்க இயற்கையின் எழிலை வரைய, புலன்களால் உணர முடியாதவற்றைப் புலனறிவுக்கு உட்பட்டுச் சுவைத்திட, ஏற்றனவாக்க எங்கும் கிடக்கும் பொருள்களைத் தமது படைப்பாற்றலால் பொன்னாகவும் மணியாகவும் பொலிவடையச் செய்ய இலக்கியத்திறன்கள் அனைத்தையும் மடல் இலக்கியத்தில் பயன்படுத்தி வெற்றி கண்டுள்ளார்.

---

# 10

# சொற்பொழிவுகள்

அறிஞர் அண்ணா அவர்களின் மேடைப்பேச்சு திருவாவடுதுறை இராஜரத்தினம் அவர்களின் நாதசுரத்தில் தோடியைக் கேட்பது போல இருக்கும் என்பர்.

தம் பேச்சு பட்டித் தொட்டிகளில் உள்ள மக்கள் கேட்கிறார்கள் என்றாலும் அவற்றின் சிறப்புப் பகுதிகள் மையக் கருவாக உள்ள செய்திகள் எழுத்தில் பதிவு செய்யப்படவில்லை என்ற மன உளைச்சல் அண்ணாவுக்கு இருந்தது. ஆனாலும் அவர் தமது பேச்சை முத்துக் கிருஷ்ணன் அவர்களை உடன் அழைத்துச் சென்று பதிவு செய்தார். அப்பேச்சுகளே நூலாக வெளிவந்தன.

சிறந்த பேச்சாளர் பட்டியலின் முன்னணியில் டொமஸ் தெனியைக் கொண்டு வந்து நிறுத்துகிறது கிரேக்க நாடு; எட்மண்ட் பர்க்கைக் கொண்டு வந்து நிறுத்துகிறது இங்கிலாந்து; ராபர்ட்கிரீன், இங்கர்சாலைக் கொண்டு வந்து நிலை நிறுத்துகிறது அமெரிக்கா; சிறந்த பேச்சாளர் வரிசையின் முதலிடத்தில் திராவிடம் நிலை நிறுத்துவதற்குரிய ஒரே ஒருவர் அறிஞர் அண்ணா தான். இவரது சொற்பொழிவு சலசலவென்று ஓடும் சிற்றருவியின் பாங்கு போலவும் சொற்கள் நாணயச் சாலையில் அடிபட்டு ஒன்றன் பின் ஒன்றாக விழும் நாணயங்கள் போலவும் ஒன்றோடு ஒன்று மோதுதல் இன்றி வெளிவரும் என்பார் நாவலர் நெடுஞ்செழியன் (அ.அ., ப. 110)

1935இல் ஒய்.எம்.சி.ஏ. பட்டிமன்றத்தில் வார்தா கல்வித்திட்டம் பற்றி வெட்டிப் பேசி மூதறிஞர் ராஜாஜியையே மலைக்கச் செய்தார்.

அண்ணா மாநகராட்சி தேர்தலில் காங்கிரசு வேட்பாளரை எதிர்த்து நின்று தோற்றார். எனினும் இவருக்கு எதிராகப் பிரச்சாரம் செய்த திரு.வி.க. அவர்களின் பேச்சைத் தர்க்கவாதப் பேச்சுகளால் முறியடித்து புகழில் வென்று விட்டார் எனலாம்.

'மேடைப்பேச்சு' என்றே ஒரு கட்டுரை எழுதியுள்ளார் அண்ணா. "மணி முடி, வாள், ஜெபமாலை இவைகளின் இடத்தை இப்போது மேடைப்பேச்சு கைப்பற்றி இருக்கிறது. ஜனநாயகம் வளர வளர இதன் முக்கியத்துவம் வளரும். இதன் முக்கியத்துவம் வளர வளர இதனைக் கொண்டு தன்னலம் வளர்க்கும் ஆபத்தும் வளரக் கூடும். திசைகாட்டும் கருவி தீயோனிடம் சிக்கினால் கலம் பாறையில் மோதுதல் போல, அரசுகளை ஆட்டி வைக்கும் அளவுக்கு ஆற்றல்

அமைந்த மேடைப்பேச்சு எனும் சக்தி, சாதனம் ஒரு சிலருக்கு மட்டுமே கிடைத்து அவர்களும் அந்தச் சக்தியைத் தவறான காரியத்துக்குப் பயன்படுத்தினால் மக்களின் நலன் பாறை மோதிய கலமாகும்" என்பார், மேடைப்பேச்சின் முக்கியத்துவத்தை.

"மேடைப்பேச்சு தென்றலா? புயலா? தீஞ்சுவையுள்ள இளநீரா? அல்லது வேம்பின் சாறு போன்றதா, எங்ஙனம் இருத்தல் வேண்டும் என்ற கேள்வி நிச்சயமாகத் தோன்றும். இந்த எண்ணம் ஒரு சறுக்கு மேடை. மேடைப் பேச்சுக்குத் தங்களைத் தயாரித்துக் கொள்வோர் மிக ஜாக்கிரதையாக ஊன்றி நடக்க வேண்டிய இடம் இது" என்று எச்சரிக்கிறார்.

"மேடைப்பேச்சு காலட்சேப மல்ல. விவாதத்திற்குரிய உயிர்ப் பிரச்சனைகளைப் பற்றிய கருத்துக்களை வெளியிடுவது. இனிமையாக எல்லோருக்கும் கிடைக்கும்படிச் செய்யும் நாவாணிபம் அல்ல. மேடைப் பேச்சு வாய்பொத்தி, கைகட்டிக் கேட்கும் மக்கள் முன் நடத்தும் உபதேசமல்ல, அருள் வாக்கல்ல. பேசுபவன் இன்ன பொருள் பற்றி பேசிடுக என்று பணித்திட, பேசுபவன் அது போலவே நடத்தும் வசன சங்கீதமும் அல்ல; வாழ்க்கையுடன் தொடர்பு கொண்ட பிரச்சனைகளைப் பற்றி மக்கள் குழப்பமான கருத்து கொண்டிருந்தால் தெளிவு அளிப்பது; மக்கள் மருண்டிருந்தால் மருட்சியை நீக்குவது, மக்கள் கவலையுற்றிருந்தால் பிரச்சனையின் பொறுப்பை உணரச் செய்வது போன்ற காரியம். நீதியை நிலைநாட்ட, நேர்மையை வலியுறுத்த, நாட்டிற்கேற்ற திட்டங்களை எடுத்துரைக்க, மடமையை மாய்க்க, கொடுமைகளைச் சாய்க்க, சிறுமைகளை - சீரழிவுகளைப் போக்க ஆர்வம் தோன்ற வேண்டும். அந்த ஆர்வம் ஏற்படுத்தும் சிந்தனையிலே பூத்திடும் நல்ல கருத்துகளை, அழகுற தொடுத்து அளிப்பதே மேடைப் பேச்சு" என்கிறார்.

"அண்ணா ஒரு சிறந்த ஜனநாயகவாதி; பொது உடமைக் கோட்பாடுகளால் கவரப்பட்டவர்; மனிதாபிமான உணர்வு மிக்கவர்; விதி, பழமை, பிற்போக்கு, இல்லாமை, சமூகப் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் போன்ற சமூக அநீதிகள் அகற்றப்பட்டு புதிய சமூகம், உழைக்கும் மக்களின் புத்துலகம், காணப்பாடுபட்டார். அவர் சிறந்த சமூகச் சீர்திருத்த வாதியாகத் திகழ்ந்தார். இவற்றிற்கெல்லாம் மேலாகத் தமிழ் நெறியில் ஆழமாகக் காலூன்றி நின்றார். ஆம் இருபதாம் நூற்றாண்டின் வள்ளுவராக விளங்கினார்" என்பார் அரு.சின்னசாமி (அண்ணா ஒரு சரித்திரம், ப. 6).

"ஆயிரம் மேடை ஏறிய அறிஞர். பல்லாயிரம் மக்களின் உள்ளத்தை ஒருங்கே கவரும் சீரிய கூரிய சொல்லாளர். கண்ணின்று கண்ணறச் சொல்லும் திண்ணியர்" என்று பாராட்டுவார் சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை.

சரியான நேரத்தில் தகுதியான இடத்தில் பொருத்தமான சொற்களை அளவறிந்து அற்புதமாக அடுக்கி அதில் தென்றல் போன்ற குளிர்ச்சியேற்றி, சுவைத்துண்ணத் தெவிட்டாத தேன் கலந்து ஆரவாரமல்லாமல், அமைதியாக ஆயிரமாயிர மக்கள் குழுமியிருக்கும் கூட்டத்தில் கைநெகிழ்ந்த பொருள் போலப்

போட்டு விடுவார். செங்குத்தான மலையால் தடுக்கப்பட்ட மேகங்கள் முத்து நீர் சொரிய சிறு சிறு ஓடைகளாய் அடிவாரம் வரை தடுப்பாரின்றி ஓடிவரும் வெள்ளம் போல் தங்கு தடையின்றிக் கோர்வையாக வரும் அண்ணாரது சொற்கோவை" என்பார் சி.பி. சிற்றரசு (அ.அ, ப. 94).

"1944ஆம் ஆண்டிலிருந்து அறிஞர் அண்ணா அவர்களின் உரை கல்லூரிகளில் மாணவர்களின் மத்தியில் முழங்கத் தொடங்கின. பச்சையப்பன் கல்லூரி, அமெரிக்கன் கல்லூரி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் - இப்படியாக உரைநிகழ்த்தாத கல்லூரியே இல்லை என்னும் நிலை ஏற்பட்டது. உரைநிகழும் போது மாணவர்கள் வெள்ளம் போல் கூடினர்; ரசித்தனர்; கை தட்டல்களுக்கும் சிரிப்பொலிகளுக்கும் கணக்கில்லை; சிந்தித்தனர்; பின்பற்றத் தொடங்கினர். இவ்வாறு அண்ணாவின் உரையாடல் மாணவர் உலகில் புத்துணர்ச்சி பரவியது; புதுவாழ்வு பெருகியது.

"எத்தனையோ பேச்சாளர்களும் பேராசிரியர்களும் உரை நிகழ்த்தி வந்திருக்கிறார்கள் என்றாலும் அண்ணாவின் உரைக்குத் தனிச் சிறப்பும் ஆற்றலும் உண்டு என்பதைத் தமிழகம் நன்கு அறிந்து கொண்டது. மேலும் இந்திய நாட்டின் பல பகுதிகளிலும் அண்ணாவின் உரை பரவாத இடமே இல்லை என்று சொல்லலாம். இராஜ்ய சபையில் ஆற்றிய உரையைக் கேட்டு அமைச்சர்களும் உறுப்பினர்களும் அதிசயித்தனர். பிரதமர் நேரு அவர்கள் அண்ணாவின் உரையைக் கேட்பதற்காகவே அப்போது சபையில் குறிப்பாக வீற்றிருந்தார் என்றால் அவரது உரையாற்றலின் பெருமைக்கு அளவு ஏது?

## ஏ, தாழ்ந்த தமிழகமே

20-9-1945இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா மண்டபத்தில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களது உருவப்படத்தைத் துணை வேந்தர் தோழர் எம். இரத்தினசாமி அவர்கள் தலைமையில் அறிஞர் அண்ணா அவர்கள் திறந்து வைத்த காலை ஆற்றிய வரலாற்றுச் சிறப்பு மிக்கச் சொற்பொழிவின் நூல் வடிவம் இது.

தமிழகத்தின் அன்றைய நிலையைக் கண்டு "ஏ, தாழ்ந்த தமிழகமே!" என்று வருந்தினார். தமிழகம் உயர்ந்த நிலையில் இருக்க வேண்டும். தமிழர்கள் பெருமை பெற வேண்டும் என்னும் அவரது கவலையும் ஆவலும் வழி வகுத்துத் தந்துள்ளது.

"இப்பொழுது தமிழிலே பாடுகின்ற தமிழுக்காக உழைக்கின்ற எல்லாக் கவிவாணர்களையும் தமிழ் நாடு வரவேற்கின்றது. எக்கட்சியினராயினும் எம்மதத்தினராயினும் எக்கொள்கையினராயினும் செய்கிற தொண்டு தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் பயன்படுகிறது என்றால் தமிழனுடைய உள்ளம் குளிர்கின்றது. உடனே கவிகளைக் கட்டி அணைக்கத் தனது இரு கரங்களையும் நீட்டுகிறான். பாராட்டுகிறான்; பரிசளிக்கிறான். இது நாட்டின் நற்காலத்திற்கோர் எடுத்துக்காட்டு" என்று புகழுகிறார்.

அதே சமயம், "ஏ தமிழ் நாடே! ஏ தாழ்ந்த தமிழ் நாடே! தேய்ந்த தமிழ் நாடே! தன்னை மறந்த தமிழ் நாடே! தன்மான மற்ற தமிழ் நாடே! நன்றி கெட்ட தமிழ் நாடே! கலையை உணராத தமிழ் நாடே! கடவுளின் லட்சணத்தை அறியாத தமிழ் நாடே! மருளை மார்க்கத்துறை என்று எண்ணிடும் தமிழ் நாடே! ஏ சோர்வுற்ற தமிழ் நாடே! வீறு கொண்டு எழு! உண்மைக் கவிகளைப் போற்று! உயர்க் கவிகளைப் போற்று! உணர்ச்சிக் கவிகளைப் போற்று! புரட்சிக் கவிகளைப் போற்று!! புத்துலகச் சிற்பிகளைப் போற்று!!!" என்று வேண்டுகிறார். இது அண்ணாவின் ஆசை.

"அண்ணாவின் உரையிலே வரலாறு உண்டு; மூடப்பழக்கத்தை முறியடிக்கும் திறன் உண்டு; இலக்கியக் காட்சிகளை எடுத்துக் காட்டும் நயத்தைக் காணலாம்; அரசியல் அறிவிப்புகளைக் கேட்கலாம். கதைகளுக்கோ கணக்கில்லை. உவமைகளுக்கோ அளவில்லை. அத்தனையையும் வாரி வாரி வழங்குவார். சொல்லின் செல்வமாக வீற்றிருக்கிறார்".

இது அண்ணாவின் 'ஏ, தாழ்ந்த தமிழகமே' என்ற நூலுக்கான பதிப்புரை; இது பதிப்புரை மட்டுமல்ல அண்ணாவின் சொற்பொழிவு பற்றிய மதிப்புரை.

## நிலையும் நினைப்பும்

23-9-1947இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப் பொதுப் பேரவைத் தொடக்க விழாவில் கே.ஏ. மதியழகன் தலைமையில், பட்டமளிப்பு விழா மண்டபத்தில் 'நிலையும் நினைப்பும்' என்னும் தலைப்பில் சொற்பொழிவு ஆற்றினார்.

விடுதலை நாள் பற்றி தாம் விடுத்த அறிக்கை சரியே என்று வாதம் எதுவும் செய்யாமல், பகுத்தறிவுப் பணி பற்றி விரித்து உரைத்தார். அவரது பேச்சின் அழகும் தெளிவும் ஆழமும் ஆராய்ச்சியும் அங்குக் கூடியிருந்த மாணவர்கள் அத்தனை பேரையும் வியப்பு வெள்ளத்தில் ஆழ்த்தின. இப்படியொரு தத்துவங்கள் பொதிந்த அற்புத சொற்பொழிவை அண்ணா நிகழ்த்துவார் என்று மாணவர்கள் எதிர்பார்க்கவில்லை.

"ஒரு நாட்டின் நிலை அதன் நினைப்பை உருவாக்குகிறது. உன்னத நிலையில் உள்ள ஒரு நாட்டின் நினைப்பு உயர்ந்திருக்கும்; தாழ்ந்த நிலையில் உள்ள ஒரு நாட்டின் நினைப்பு தாழ்ந்திருக்கும்.

நிலைக்கேற்றபடி நினைப்பு இருக்கும்; ஆனால் சில வேளைகளில் நிலைக்கேற்றபடி நினைப்பு இருப்பதில்லை. மூன்றாவது அடுக்கு மேல்மாடியில் உலவுகிற தொழிலாளியின் நினைவு அவன் நிலை உயர்ந்திருக்கிற அளவு உயர்ந்திருப்பதில்லை.

திருட்டுத் தனமாகக் கனிதேடி மரம் ஏறியவனுடைய நினைப்பு எப்படி இருக்கும்? எந்த அளவுக்கு அவனது நிலை உயர்ந்திருக்கிறதோ அந்த அளவு அவன் நினைப்பு தாழ்ந்திருக்கும். அவன் இருப்பது மரத்தின் உச்சியில்; ஆனால் அவன் மனம் இருப்பது தரையில் என்று தொடர்ந்து இறுதியில்

"இப்படை தோற்கின் எப்படை ஜெயிக்கும்" என்று கூறிமுடித்தார். இதனால் மாணவர்களிடையே பெருத்த ஆரவாரமும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன. இடையில் கிராமத்து மக்களுக்கு அமெரிக்காவின் தலைநகரம் எது தெரியுமா? தெரியாது. ருஷ்யாவின் தலைநகரம் எது தெரியுமா? தெரியாது. பெர்லின் எங்கே இருக்கிறது தெரியுமா? தெரியாது. பிரிட்டனின் பிரபல தொழிற்சாலை எது தெரியுமா? தெரியாது. மடகாஸ்கர் எங்கிருக்கிறது தெரியுமா? தெரியாது. கடலுக்குள் போகிற கப்பல் தெரியுமா? தெரியாது. சரி எம தருமனுடைய வாகனம் தெரியுமா? 'அதாங்க எருமைக்கடா' என்று கூறுவார்கள் என்ற போது ஏகப்பட்ட வரவேற்பு.

## இந்தி எதிர்ப்பு மாநாட்டு உரை

*17.7.48*இல் இந்தி எதிர்ப்பு மாநாடு. அதற்குத் தமிழ்க் கடல் மறை மலையடிகள் தலைமை தாங்கினார். தமிழ்த் தென்றல் திரு.வி.க. மாநாட்டைத் திறந்து வைத்தார். இதற்கு திரு. நாரணதுரைக் கண்ணனும் திரு.ம.பொ.சி.யும் கலந்து கொண்டனர்.

அண்ணாவின் வீரஉரை குறிப்பிடத்தக்கது. "மறை மலையடிகளாரும்; திரு.வி.க. அவர்களும் இந்தி நுழைவால் தமிழ் கெடும்; தமிழ் கலாச்சாரம் கெடும் என்று அழுத்தம் திருத்தமாகக் கூறிவிட்ட பிறகு, அவர்கள் சாட்சியம் நமக்குக் கிடைத்து விட்ட பிறகு போர் முழக்கம் செய்வது தவிர நமக்கு வேறென்ன வேலையிருக்கிறது" என்று அவர் எழுப்பிய அறப்போர் குரல் மாநாட்டு மண்டபத்தையே அதிர வைத்ததாம்.

## தீ பரவட்டும்

தமிழர்களை இழிவுப்படுத்தும் நூல்களுள் இராமாயணம், பெரிய புராணம் என்னும் இரு நூல்களைத் தீயிட்டுக் கொளுத்த வேண்டும் என்னும் கொள்கையை மக்களிடையே தன்மான இயக்கத் தலைவர்கள் பரப்பினர். இதனைக் கேட்ட அறிஞர் பெருமக்கள் கொதித்தெழுந்தனர். பெரியார் பாசறையின் தளபதியாக விளங்கிய அறிஞர் அணணாவைச் சொற்போர் புரிய அறை கூவல் விட்டனர். அண்ணாவும் அதனை அன்புடன் ஏற்றார்.

9-2-1948 செவ்வாய்க்கிழமை மாலை 4.30 மணிக்குச் சென்னை சட்டக் கல்லூரி மண்டபத்தில் சொற்போர் நடைபெற்றது. திரு. இராமச் சந்திரஞ் செட்டியார் தலைமை வகித்தார். அண்ணாவோடு ஈழத்தடிகள், சேதுப்பிள்ளை, சீனிவாசன் ஆகியவர்கள் சொற்பொழிவாற்றினார்கள். இரண்டாவது சொற்போர் சேலத்தில் நடைபெற்றது. இதன் நூல் வடிவமே 'தீ பரவட்டும்'.

"தோழர் அண்ணாதுரை அவர்களின் பொருளாழமும் சொற்சுவையும் பொருந்திய நீண்ட பிரசங்கத்தைக் கேட்டு இன்புற்றீர்கள். அவர் போன்ற பெரியார்களிடம் விவாதிப்பது மிக இன்பமானதாகும்" என்று சேதுபிள்ளை அவர்களே கூறினார்.

"தமிழர் தனி இனத்தவர். பன்னெடுங்காலம் பண்புடன் வாழ்ந்து, பாரோர் புகழ வாழ்ந்து, கலைச்செல்வங்களைக் கண்டவர். இந்தியா எனும்

உட்கண்டத்திலே பல இனங்கள், தத்தம் கலைகளுடன் உள்ளன. தமிழ் இனத்துக்குத் தனி கலை ஒன்றுண்டு. வெவ்வேறாகவும் தனித்தனியாகவும் தனிப்பண்புகளுடன் விளங்கி வந்த ஆரிய திராவிடக் கலைகள் கலக்க நேரிட்டது, ஓர் பெருங்கேடாக முடிந்தது. அத்தகைய கலப்பு நூற்களே கம்பராமாயணமும் பெரிய புராணமும்" என்பார் அண்ணா

## நாம்

இந்நூல் 1951இல் முதல் பதிப்பாகத் திராவிடப் பண்ணையிலிருந்து (திருச்சி) வெளிவந்தது. இது தில்லை - வில்லாளனின் தலைமையில் 1951 ஆம் ஆண்டு அண்ணா பேசிய பேச்சின் தொகுப்பு நூல் ஆகும்.

ஆள்வோரின் கோணல்களை எடுத்துக் காட்டினால் சீறுகிறார்கள். 'ஆகா, நாங்கள் கதராடைக்காரர்களல்லவா? சுதந்திரம் பெற்ற சுத்த வீரர்களல்லவா? எங்களை யாரும் தட்டிக் கேட்கக் கூடாது - முடியாது' என்று பேசுகின்றனரே, அவர் தம் அர்த்தமற்ற பேச்சுக்கு, தக்க பதில் இந்த சொற்பொழிவு. நாட்டில் ஒவ்வொரு துறையிலும் உலவும் அவர்களுக்கு உணர்த்துகிறார், நாம் யார் என்று. நம்மைப் பற்றித் திருத்தியும் புகுத்தியும் மாற்றியும் குறைத்தும் சிலர் பேசித் திரிகிறார்களே, அவர்களுக்கு நாம் நாட்டுக்குச் செய்துவரும் தொண்டினை எடுத்துக் காட்டுகிறார் இந்த 'நாம்' மூலம்.

## அண்ணாவின் சொற்செல்வம்

இதில் அண்ணாவின், நூல் நிலையங்கள், அற நிலையங்கள், சொல்லும் பயனும், பொருள் - எனும் நான்கு சொற்பொழிவுகள் இந்நூலில் தொகுக்கப்பட்டு 1955இல் வெளியிடப்பட்டது பாரி நிலையத்தால். தனித்தனி நூல்களாகவும் வெளி வந்திருக்கின்றன. இச்சொற்பொழிவுகள் திரு. அன்புப்பழம் நீ அவர்களால் குறிப்பெடுத்து தொகுக்கப்பட்டுள்ளன.

'நூல் நிலையங்கள்' என்னும் தலைப்பில் வரும் சொற்பொழிவு திரு.வி.க. அவர்களின் தலைமையில் பொதிகை நூல் நிலையத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவு விழாவின் போது அண்ணா நிகழ்த்தியதாகும். "தமிழர்கள் வீடுகளில் சென்று தேவாரம் இருக்கிறதா? என்றால் இருக்கும். திருவாசகம் இருக்கிறதா? என்றால் இருக்கும். பாரிஸ் பற்றி நூல் இருக்கிறதா? இருக்காது. அமெரிக்கத் தலைவர் ட்ரூமன் பற்றி நூல் இருக்கிறதா? இருக்காது. விஞ்ஞானம் பற்றி நூல் இருக்கிறதா? இராது. பொதிகை தெரியுமா? என்று கேளுங்கள். தெரியாது. இந்திர விழா தெரியுமா? தெரியாது. சிலப்பதிகாரம் தெரியுமா? தெரியாது" என்று நூல்கள் பற்றி வற்புறுத்துகிறார்.

24-3-49 அன்று, சென்னை கொத்தவால் சாவடி, வள்ளுவர் கழகத்தின் ஆதரவில் இந்து அறநிலையப் பாதுகாப்பு மசோதாவை ஆதரித்து, திரு. ஏ.எஸ். துரைசாமி அவர்கள் தலைமையில் ஆற்றிய சொற்பொழிவு, 'அற நிலையங்கள்'.

அண்ணா 8-8-51இல் திரு.எஸ்.பி. பாண்டியன் அவர்கள் தலைமையில் சென்னை தியாகராயர் கல்லூரி மாணவர்களிடையே 'சொல்லும் பயனும்' என்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றினார்.

தாம்பரத்திலுள்ள சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியின் தமிழ்சசங்க ஆண்டு விழா 19-2-1948 அன்று, புலவர் உயர்திரு. அ.கி. பரந்தாமனார் தலைமையில் நடைபெற்ற போது அண்ணா ஆற்றிய சொற்பொழிவே 'பொருள்'. "பொருள் என்பதை இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று வஸ்து, மற்றொன்று கருத்து. இதைப் பிரிக்கின்ற நேரத்தில், இவை மெய்ப்பொருள். இவை அநித்தியப் பொருள். இவை மாயப்பொருள் என்றெல்லாம் பிரிக்கின்றார்கள். இதில் வஸ்து என்பது தேவைக்குரிய பொருளாகும். ஆனால் தேவைக்குரிய பொருளைத்தான் *அழியக்கூடியவை, அநித்தியமானவை, மாயம் என்றெல்லாம் கூறுகின்றனர்.* மற்றொன்று மேலுலகப்பொருள். அது எப்பொழுதும் அழியாத தன்மை வாய்ந்தது. அதை அடைவதற்கான மார்க்கம், இகத்திலுள்ள பொருள்களின் மீது இச்சை கொள்ளாதிருத்தலே. ஆனால் இது வாழ்வில் அவசியமற்றது; தேவையில்லாதது" என்று விவரித்தார்.

## திராவிட தேசீயம்

4-6-61இல் 19வது வட்ட திமுக. சார்பில் கொத்தவால் சாவடிப் பகுதியில் ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அண்ணா, திராவிட நாடு இலட்சியத்தில் சிலருக்கு ஏற்பட்டுள்ள சந்தேகத்தைப் போக்கும் வகையிலும் தேசீயம் என்றால் என்ன என்பதையும் 'திராவிடத் தேசீயத்திற்கு உள்ள பல்வேறு ஆதாரங்களையும் வரலாற்று சான்றுகளையும் விளக்கி அறியதோர் உரை நிகழ்த்தினார்கள். அந்தச் சொற்பொழிவைத் 'திராவிட தேசீயம்' என்ற பெயரில் 1961 ஜுலையில் நாவலர் பதிப்பகம் நூலாக்கியது.

"திராவிட நாட்டுக் கொள்கை- இது ஒன்றும் அவசர வியாபாரமுமல்ல; சைனா பஜாரில் போனால் வராது பொழுதுவிடிந்தால் கிடைக்காது என்று விற்பார்களே - அப்படிப்பட்ட அந்திக் கடையுமல்ல. ஒருவாரம் போனால் அழுகி விடக்கூடிய அழுகல் சரக்குமல்ல" என்று தன் பேச்சைத் தொடங்கினார்.

தேசீயத்துக்கு விளக்கம் - குருநாதர் தாகூர் கூறும் திராவிட உத்கல வங்கா - சிற்பங்களும் கூறுகின்றன திராவிடக் கலாச்சாரம் - வடக்கே தலை வைத்து படுக்காதே - நேருவின் கடிதம் கூறும் திராவிடம் - பாகிஸ்தானின் பிரிவினை - குடுகுடுப்பாண்டிக்கு இருக்கும் பொறுமை கூட அரசியலில் *வேண்டாமா? என்று* பல்வேறு *கருத்துக்களைப்* பேசினார்.

'நாம் பாடவேண்டிய பாட்டைப் பாடி விட்டோமா?
கொடுக்க வேண்டிய விலையைக் கொடுத்து விட்டோமா?
நீட்ட வேண்டிய தியாகப் பட்டியலை நீட்டி விட்டோமா?
இன்னும் நீள வேண்டிய தியாகப் பட்டியல் எவ்வளவோ

இருக்கிறது" என்று அண்ணா தன் பேச்சை முடித்தார்.

## அண்ணாமலைப் பேருரை

அண்ணாவின் இந்தப் பேருரை முதல் பதிப்பாக 1986இல் பாரதி நிலையம் மூலமாக வெளிவந்தது. "தமிழாய்ந்த தலைமகன் தமிழ்ப்பேரறிஞன் - தனக்கென வாழா பிறர்க்குரியாளன் - பொது நலப் போர்வீரன் - பெரும் புலவன் - புரவலன் - சொல்லேருழவன் மட்டுமல்ல சொல்லிய வண்ணம் ஆங்கே செயல் முடித்திடும் செயலேருழவன் - செயலாக்கச் சிந்தனையின் வயப்பட்டிருப்பவன் - நல்லாசைக் கனவு காண்பதில் அவனுக்கோர் ஈடில்லை - இணையுமில்லை. ஆசைக்கும் அச்சத்திற்கும் இடையில் சஞ்சல ஊஞ்சலில் நர்த்தனமாடி நலிந்து மெலிந்து நடமாட்ட ஊட்டங்குன்றி நிலை குலைந்தோர்க் கெல்லாம், நல் நடைத்திறம் ஊட்டிடும் உறுதுணைவன், நனவுக் கனவு கண்டிடும் நன்மகன், தமிழ்ப் புகழ் வடிவழகு பெற்றிடுபவன். அவனே அனைவர்க்கும் அண்ணா. அண்ணாமலை அரசரின் அறக்கொடைக் கோட்டமாம் அண்ணாமலைப் பல்கலைக்கழகந் தன்னில் ஆற்றிய பேருரை, புத்தறிவுப் பேருரை; ஆங்கிலத்தின் அழகும் அணியும் ஆழ்ந்த அழுத்தந் திருத்தமான கருத்துரமும் பொதிந்த பட்டமளிப்பு விழா பேருரை. நல்லபடி வழிகாட்டித் துணையாய் தோழமையாய் ஊரும் உலகும் மெச்சிடும் வண்ணம் அமைந்த பேராண்மை உரை!" என்பார் 1968இல் மு. நமசிவாயம்.

பொறுப்பு சுமை, பேரறிவாளர்களின் அடிச்சுவட்டில், சாமானியர்களின் எண்ணம், அன்றாடம் வாழ்க்கை நெறியாக, உணர்த்திடும் வல்லமை, அறிவுப் புடம் போட்டு, நல்வழி காட்டிடும் குடிமக்கள், மானுடத்தின் மாண்பு அரசோச்ச பொதுநோக்கு பொதுநன்மை, தியாக மனப்பாங்கு, சொல்லும் செயலும் சிறக்க, பழைய பல்லவியைப் பாடாதீர், கவர்ச்சிக்கும் கஷ்டத்திற்கும் இடையே, காக்கும் கரங்கள், வாழப் புறப்படுங்கள், பேராற்றல் மிளிரட்டும், அடிப்படையைத் தகர்த்திடும் அரிப்பு, தக்கன எவை தகாதன எவை, மறுமலர்ச்சிக் கட்டம், நமது வேலைச் சுமை, புகழ்பூத்த பொற்காலம், தொய்வும் தேக்கமும் நீங்கிட, சீரிளமை திறம் காப்போம், நெகிழ்ந்திடும் உளப்பாங்கு, சாகாத வரம் பெற்ற மானிடன், எண்ணங்கள் ஏற்பாட்டில் துப்புரவு, சீர்கேடுற்ற சடங்குகள் சம்பிரதாயங்கள், ஒற்றுமையும் ஒருமைப்பாடும், புனிதம் இருக்கட்டும் பயன் என்ன? எனப் பல்வேறு கருத்துகளைக் கூறினார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலத்தில் பட்டமளிப்பு விழாவில் அறிஞர் அண்ணா அவர்கள் 18-11-1967இல் சொற்பொழிவாற்றினார்.

மிகப்பழமை வாய்ந்த பண்பாட்டின் தாயகம் தென்னிந்தியா ஆகும். நீண்ட காலமாக அடர்ந்து பரவியுள்ள அறியாமை இருள் இருந்த போதிலும் கிறித்து பிறப்பதற்கு ஈராயிரம் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே மிக உயர்ந்தோங்கி வளர்ந்த திராவிட நாகரிகம் இருந்தது என்பதை எல்லோரும் இப்பொழுது ஏற்றுக் கொண்டுள்ளனர். நுண்ணியக் கருத்தினையும் தெரிவிக்கும் கருவியாகத் தமிழ் மொழி செம்மையாக வளர்ந்தமைக்கும் அதன்

இலக்கிய செழுமைக்கும் பல அயல்நாட்டறிஞர்கள் சான்று பகர்கின்றனர். ஆகவே திராவிட இலக்கியம், மெய்யறிவியல், கலை, சிற்பம் ஆகியவை திறன்மிகு ஆராய்ச்சிக்குச் சிறந்த பயனுள்ள துறைகளாக இலங்குகின்றன. வெறும் புகழுக்காக மட்டும் அல்லாமல் நம் பண்டைய மரபு வழியில் உண்மைப் பயனும் அழகுமுள்ள எல்லாவற்றையும் நேரிய முறையில் பாராட்டவே இந்த ஆய்வும் ஆராய்ச்சியும் நமக்குத் தேவை என்றார்.

## மதுரைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா உரை

7-9-67 அன்று மதுரைப் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய முதல் பட்டமளிப்பு விழா உரை 'பல்கலைக்கழகம் பறைசாற்ற வேண்டியவை' என்ற தலைப்பில் நூலாக வெளிவந்தது.

"பாண்டிய நாட்டிற்குப் பாங்களித்த மாமதுரை, தமிழ் மரபு காத்திட்ட மன்றங்கண்ட மதுரை, தேமுத்ரத் தமிழோசை திக்கெல்லாம் எழச் செய்த திருமதுரை. வீரப் போராற்றலால் மட்டுமின்றி, அறிவுக் கணை தொடுத்த மாண்பினாலும் பெருமை பெற்ற வெற்றிக் கோட்டம். 'அந்த நாளும் வந்திடாதோ' என்னும் உணர்ச்சியால் எவரும் உந்தப்படும் நிலை பெறுவர் மாமதுரைப் பதியின் வரலாற்றுச் சிறப்பறியின்" என்று மதுரையின் சிறப்பை விவரிக்கிறார்.

அரைத்தெடுத்துப் பூசி மகிழ்தற்கன்றோ சந்தனம், அடுப்பு எரிப்பதற்கோ? பட்டம் பெறுவதும் பயிற்சி பெறுவதும் நாட்டினருக்கு நல்வாழ்வு தந்திட என்று வேண்டுகிறார்.

## சென்னைச் சமூகப் பணிப்பள்ளியின் பட்டமளிப்பு விழா உரை

21-4-67 அன்று நிகழ்ந்த சொற்பொழிவு இது. 'எங்கிருந்தாலும் ஆற்றுக சமூகப்பணி' என்ற தலைப்பில் இந்த உரை 1981இல் நூலாக வந்துள்ளது.

முழு ஈடுபாடுள்ள சமூகத் தொண்டன் என்னும் வகையில் சமூக முன்னேற்றத்திற்குச் சமூகப் பணி இன்றியமையாதது என்பதை அண்ணா வலிவாக வற்புறுத்தி, சமூதாயச் சீர்திருத்தம் சமூகச் சேவையிலிருந்து குறிப்பிடத் தகுந்த வகையில் வேறுபட்டது என்பதைத் தெளிவுபடுத்துகின்றார். பட்டம் பெறுவோரை எங்கிருந்தாலும் உண்மைச் சமூகத்தொண்டு ஆற்ற வேண்டும் என்றும் அவர் விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறார் என்பார் அ.கி. மூர்த்தி (அண்ணாவின் பட்டமளிப்பு விழா உரைகள், ப. 4).

## நல்ல தீர்ப்பு

தாம்பரத்திலுள்ள சென்னைக் கிறித்துவக் கல்லூரியின் தமிழ்ப் பேரவை ஆண்டு விழா, சேலையூர் இல்லத்தில், தோழர் செ.கோவிந்தராவ் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. இதனை மாணவர் பதிப்பகம் நூலாக்கியது.

இருண்ட வீடு போன்று காட்சியளிக்கும் நம் திராவிடத்தின் இருள் அகற்ற, இது மிக நல்ல தீர்ப்புதான். பழமையைப் போக்கி, விதியை விரட்டி, வீணரை வீழ்த்தி, மனிதனை மனிதனாக வாழும் வழி காட்டி இனக்

கொலைக்குக் காரணமாக உள்ள கலைகளைச் சுட்டுப் பொசுக்கி, அடிமை வாழ்வை அறுத்தெறிய வழி கோலும் இந்நூல்.

"அடிமை வாழ்வை அறுத்தெறியுங்கள்! மானமே பெரிதென மதியுங்கள். சிந்தித்து நல்ல தீர்ப்புக் கூறுங்கள்! செயலில் காட்டுங்கள்" என்று அண்ணா தன் உரையை முடிப்பார்.

## நாடும் ஏடும்

இது முதலில் மாணவர் பதிப்பக வெளியீடாக வந்தது. பகுத்தறிவுப் பாசறையின் விற்பனை உரிமை பெற்றது.

"நாட்டை வளர்க்கும் வகையில், நாட்டு மக்களை முன்னேற்றும் முறையில், இன உணர்ச்சி ஊட்டும் இயல்பில் ஏடுகள் எழுதப்படுதல் வேண்டும். நாட்டின் நிலை அறிய ஏடுகள் உறுதுணையாயிருத்தல் வேண்டும். அங்ஙனமில்லாத ஏடுகள் எத்துணைக் கலையழகு மிளிர்வனவாயினும் நாட்டிற்கு நலம் பயப்பவையன்று; நாட்டிற்கும் ஏட்டிற்கும் தொடர்பு இருத்தல் வேண்டும்" என்பது மாணவர் பதிப்பக முகவுரை

இத்தகையது அண்ணாவின் நூல். இது இவரால் பச்சையப்பன் கல்லூரியில் மாணவர்களிடையே ஆற்றிய சொற்பொழிவின் அச்சு வடிவமாகும்.

## மே தினம்

பொன்மலைத் திராவிட வாலிபர் கழகத்தார் மேதின விழா கொண்டாடிய போது அண்ணா ஆற்றிய சொற்பொழிவு இது.

"வைகாசியில் கருடசேவை, ஆனியில் திருமஞ்சனம், ஆடியில் பூர உற்சவம், ஆவணியில் அவிட்டம், புரட்டாசியில் சனிக்கிழமை உற்சவம், ஐப்பசியில் தீபாவளி, கார்த்திகையில் தீபவிழா, மார்கழியில் திருவாதிரை, தையில் பூசம், மார்கழியில் மகம், பங்குனியில் உத்திரம், சித்திரையில் பௌர்ணமி இப்படி மாதந்தோறும் ஒவ்வொரு திருவிழா நடத்தித் தலைமுறை தலை முறையாகப் பழக்கப்பட்ட மக்களிடையே, மேதின விழாக் கொண்டாட முற்பட்டிருக்கிறோம். மே விழா மேதினியில் மக்களுக்கும் வாழ்வளிக்கும் விழா என்று கூறினால் மக்கள் சுலபத்தில் நம்பமாட்டார்கள்; ஆச்சரியப்படுவார்கள்", என்று அண்ணா ஆரம்பித்தார் நான்காம் பதிப்பு 1976 இல் வந்தது.

இந்நூலில் இவரது குடந்தை பேச்சும் 'போர்முரசு' என்ற பெயரில் சேர்க்கப்பட்டுள்ளது.

## புதிய வரலாறு

"அண்ணா அவர்கள் பேசாத பொருளில்லை; சொல்லாத கருத்தில்லை. அவை யாவும் இலக்கியங்களாக மிளர்கின்றன. பேச்சையே இலக்கியமாக மாற்றிய பெருந்தகை; சொற்பொழிவிலேயே இந்த உலகத்தைச் சொக்க வைத்த சொக்கத் தங்கமல்லவா அவர்? எனவே தான் தி.மு.கழகத்தைப் பற்றியும் மைய - மாநில் அரசுகளின் உறவு முறை பற்றியும் முதல்வர் அண்ணா அவர்கள்

ஆற்றிய சொற்பொழிவுகளை எல்லாம் தொகுத்துப் 'புதிய வரலாறு' என்னும் மகுடத்தைச் சூட்டியுள்ளேன்", என்பார் தமிழ்ப்பித்தன். இந்த நூல் 1969இல் அறிவுப் பண்ணை வெளியீடாக வந்தது.

தமிழகத்தின் தனிப்பெருமை - மாநிலத்தின் அதிகார வரம்பு - முற்றிய கதிரின் உணர்ச்சி - பணிபுரிவதற்கே பிறவி - பொதுஅறிவு தேவை - வதந்திகளின் வாழ்வு - நல்லாட்சி ஏற்பட - மாநிலத்தின் நிலை - மக்களிடத்தில் சொல்கிறோம் - அடக்க உணர்வு கொண்டது தி.மு.க. - நன்றி கூற வேண்டும் காங்கிரசார் - என் ஜாதகத்தை நானே கணித்துக் கொள்வேன் - சலிப்பாக மந்திரிப்பதவி - அத்தைக்கு மீசை முளைத்தது - பிரிவினை உணர்ச்சி இல்லை - துன்ப துயரங்களை அறிந்தவர்கள் - சிறை எனக்குப் புதிதல்ல - வீரவணக்கம் செலுத்தும் அமைச்சர்கள் - எது சிறுபிள்ளைத்தனம் - உடலில் உயிர் உள்ள வரையில் - மூன்றாவது மகிழ்ச்சி - இப்படிச் சில தலைப்புகள்.

## இராஜ்ய சபையில் அண்ணா

இது பேரறிஞர் அண்ணாவின் டில்லி சொற்பொழிவுகளின் தொகுப்பாகும். இதனை பாரதி நிலையம் 1986 இல் வெளியிட்டது.

புதிய வரிவிதிப்பைப் பற்றியும், கலப்படம் ஒரு குற்றம் என்பது பற்றியும் மொரார்ஜ் தேசாய் முன்னிலையில் பேசுகிறார்.

"நமது எல்லைப் பகுதிகளிலுள்ள ஆக்ரமிப்பாளர்களை அடித்துத் துரத்தும் ஒரு மகோன்னத கடமைக்கு நம்மைத் தத்தம் செய்து சூள் உரைக்க இன்று நாம் கூடியுள்ளோம். அழிவற்ற புகழ்சார்ந்த மலைச்சாரலில் நமது போர் மறவர்கள் தங்கள் உயிரை விட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நமது பாராட்டுதல்களும் வணக்கமும் உரித்தாகுக" என்று பாராட்டினார்.

"உங்களிடம் அதிகாரம் இருக்கிறது. செய்து கொள்ளுங்கள். ஆனால் சட்டத்தின் மூலம் அடக்கு முறை நடத்தி, வலிவும் ஆதிக்கமும் தேடிக்கொண்ட எந்தச் சர்க்காரும் எங்கு சென்றது, விளைவு என்ன என்பதை நினைவில் கொள்ளுங்கள்; நான் கவனப்படுத்தத் தேவையில்லை" என்பதும் இவரது எச்சரிக்கைதான். உரிமைக்குக் குரல் கொடுத்து உறவுக்குக் கைகொடுக்கும் பண்பை இவரது சொற்பொழிவுகளில் காணலாம்.

## சில பொழிவுகள்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 'ஆற்றோரம்' என்ற தலைப்பில் பேசினார். அது தமிழர் தம் நிலைக்கு விளக்கமான அற்புதமான உரை.

'தலைப்பில்லை' என்ற தலைப்பில் தன் தகுதியினை அடையாளம் காட்டினார்.

அண்ணா, கல்லூரியில் படிக்கும் போதே பேச்சில் வல்லவர். அவைக் கூச்சமும் நடுக்கமும் இவருக்கு இல்லை. எந்தப் பொருள் என்றாலும் கேட்பவரின் மனம் மகிழ தேன்மழை போல பேசத் தொடங்கி விடுவார். 'விவாதம் விவேகத்தை வளர்க்கும்' என்ற எண்ணத்தைக் கொண்டவர். குறிப்பாக

ஒய்.எம்.சி.ஏ. பேச்சு. அறிவு இயல் துறையில் பங்கு கொண்டு அவர் ஆற்றிய சொற்பொழிவுகள் மாணவர்கள் உள்ளத்தில் மயக்க மூட்டியது.

ஒருமுறை எழுத்து வேந்தர் பேராசிரியர் கல்கி தலைமையில் அண்ணாவும் மற்ற பேச்சாளர்களும் பல்வேறு தலைப்புகளில் சிறப்புரை ஆற்றும் படி ஒருவிழா ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கூட்டம் ஆரம்பமாகியது. தலைமை வகிக்கும் கல்கி அவர்களும் அண்ணாவும் வந்து விட்டார்கள். ஆனால் மற்ற தலைப்புகளில் பேச வேண்டியவர் ஒருவரும் விழாவிற்கு வரவில்லை. சலசலப்பு அதிகரித்தது. நேரம் அதிகமாகிவிட்டதால் கூடியிருந்தோருக்குச் சலிப்பு ஏற்பட்டது.

மக்களின் மனநிலையை அறிந்து கொண்ட அண்ணா அவர்கள் தலைவரின் அனுமதியுடன் பிறர் பேச வேண்டிய தலைப்புகளையும் தான் பேச வேண்டிய தலைப்பையும் ஒட்டித் தொடர்ந்து குறிப்பு எதுவும் இல்லாமல் தடங்கல் இல்லாமல் பேசி முடித்தார்.

குழுமியிருந்தவர்கள் அண்ணாவின் சொல்வன்மையில் தங்களை மறந்து லயித்திருந்தார்கள். அண்ணாவின் திறனைக் கண்டு பேராச்சரியமும் வியப்பும் கொண்ட கல்கி அவர்கள் அறிஞர் என்ற பட்டத்தைச் சூட்டி அண்ணாவை நாவாற மனமாறப் பாராட்டி மகிழ்ந்தார். (இலக்கிய உலகில் அண்ணா, ப. 103)

அண்ணாவால் மேடைத்தமிழ் மேன்மையுற்றது; பேச்சுக்கலை புத்துயிர் பெற்றது; மேடைப் பேச்சும் இலக்கியத் தகுதியைப் பெற்றது.

## ஆங்கிலப் பொழிவுகள்

அண்ணாவின் ஆங்கிலச் சொற்பொழிவுகளும் குறிப்பிடத்தக்கவை. மகாகவி பாரதியாரைப் பற்றி அறிஞர் அண்ணா அவர்கள் 'Peoples Poet' என்னும் தலைப்பில் ஆங்கிலத்தில் உரையாற்றினார்.

அண்ணா அவர்கள் வழக்கறிஞர் சங்கம், ரோட்டரி சங்கம், இலட்சுபுரம் யுவர் சங்கம், அரிமா சங்கம், லைன்ஸ் கிளப், காஸ்மா பாலிடன் கிளப் போன்ற அமைப்புகளில் பேசிய ஆங்கிலப் பேச்சுகள் பதிவாக வில்லை. வேலூர் வழக்கறிஞர்கள் சங்கத்தில் 1965 பிப்ரவரியில் பேசிய பேச்சில்தான் இந்திய அரசியல் சட்டத்தை மறு ஆய்வு செய்ய வேண்டும் என்ற கருத்தை முதன் முதலாக வழக்கறிஞர்கள் சிந்தனைக்கு வைத்தார்.

இவரது ஆங்கிலப் பேச்சுகள் கல்லூரிகளில் பாடப்பகுதியாக வைக்கப்பட வேண்டிய அளவு தரமும் தகுதியும் உள்ளவை என்பார் க. திருநாவுக்கரசு (திராவிட இயக்க இதழ்கள், ப. 49).

'Carry out! But Remember!!' என்ற ஆங்கில நூலைத் தூயமலர் பதிப்பகம் 1961இல் வெளியிட்டது. இது குறிப்பிடத்தகுந்த நூலாகும்.

"அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா உரை 18-11-67 அன்று ஆங்கிலத்தில் அமைந்தது.

அண்ணாவோ தன் நாவின் முனையிலேயே நானிலத்தின் அரசியலை நிறைத்து வைத்திருந்தார். அதனைத் திறம்பட திகட்டலற்ற - தேன்மாரியாகத் தேவைக்கேற்ப பொழிந்தார். மேதினி போற்றும் மே முதல் நாளன்று அண்ணாவின் முழக்கம் மாநிலங்கள் அவையில் சங்கொலித்தது. அற்புதமான ஆங்கிலத்தின் ஆரோகண அவரோகண ஆலாபனையின் சங்கீதமாக அந்த அவையினில் நிறைந்து வழிந்தது. வெற்றிலைக் காவி படிந்துபோன அந்த வித்தகரின் நாவிலே நர்த்தனமாடிய நளினமான ஆங்கிலத்தைக் கண்டு அந்த அவையில் இருந்தோர் சொக்கிப் போனார்கள். அண்ணா திராவிட நாட்டு விடுதலைக்காக எடுத்து வைத்த கருத்துகளும், தொடுத்துரைத்த வாதங்களும், படித்துரைத்த சான்றுகளும் மருண்டு போய் கிடந்த மாற்றாரைக் கூட மயக்கியும் உருக்கியும் ஒரு புதிய சிந்தனைக் கூடாரத்துக்குள் நுழைய வைத்தது.

மிகச்சிறந்த ஆங்கிலச் சொற்பொழிவாளர் என்று ஆங்கிலேயர்களாலேயே போற்றப்பட்ட ஆற்காடு சர்.ஏ. இராமசாமி முதலியார் அவர்களால் பாராட்டப் பெற்றார்.

உலக அறிவைப் பெறுவதற்கு ஆங்கில மொழி ஓர் அருமையான சாதனமாக இருந்ததால் அந்த மொழியில் அண்ணா தன்னுடைய ஆற்றலை வளர்த்துக் கொண்டார். இதனால் தன் எண்ணங்களை ஆங்கில மொழியில் சிந்தித்திடும் ஓர் உணர்வு அவரிடம் வளர்ந்தது. எண்ணங்களை ஆங்கில வரி வடிவங்களாகச் சிந்தித்து, பின்னர் அவற்றை அவர் தமிழில் வெளியிட்ட போது அவரது தமிழ் வாக்கிய அமைப்புகள் மரபான மேடைத் தமிழ் வாக்கிய அமைப்பிற்கு மாறுபட்டு விளங்கியது. அண்ணாவின் கருத்து ஆழமும் எண்ணங்களை இதயத்தின் ஆழத்திலிருந்து வெளிப்படுத்திய பாங்கும், எதையும் அழகுப்பட வெளிப்படுத்துவதில் அவர் கையாண்ட லாவகமும், எண்ணங்களை நிரல்பட வெளியிடுவதில் இயற்கையிலேயே அவர் பெற்றிருந்த ஆற்றலும் எல்லாவற்றிற்கும் மேலாக சமூக நீதி வேண்டும் என்கிற கருத்தில் அவர் காட்டிய உத்வேகமும், அவருடைய பேச்சு ஒவ்வொன்றையும் இலக்கிய செப்பமுடைய வடிவ அமைதி கொண்ட கட்டுரைகள் போல் அமைத்துக் கொடுத்தன. இந்த பேச்சுப் பாணியை எழுதுவதிலும் ஏறக்குறைய அவர் அப்படியே கையாண்டார். எனவே தான் அவை நூலாக வந்த போது திட்டமிட்டு எழுதப்பட்டது போல இருந்தன.

அண்ணா ஆங்கிலத்திலும் பெரும்புலமை கொண்டு விளங்கினார். கவிதை, கதை, கட்டுரைகளை அவ்வப்போது மொழி பெயர்த்து வந்துள்ளார். இதனை இவரது தம்பிக்குக் கடிதங்களில் பரவலாகக் காணலாம். அத்துடன் மேடையில் ஆங்கில சொற்பொழிவுகளையும் அவர் மொழிபெயர்த்த துண்டு.

1940-சனவரி 1இல் பம்பாயில் டாக்டர் அம்பேத்கார் - பெரியார் சந்திப்பின் போது இருவரது உரையாடல்களையும் அண்ணாவே கூட இருந்து மொழி பெயர்த்தார்.

நீதிக்கட்சியைச் சேர்ந்த தொழிலாளர் தலைவர் சிபாசுதேவ் அவர்களின் ஆங்கில உரைகளைத் தமிழில் மொழி பெயர்த்து தொழிலாளர் கூட்டங்களில் செல்வாக்குப் பெற்றார்.

பேச்சுக்கலையில் ஈடுஇணையற்றவர் அண்ணா. தம் பேச்சு பெருமையுற எல்லா வகை இலக்கிய நயங்களையும் அவர் கையாளுகின்றார். உவமை, உருவகம், அடுக்குமொழி, சொல்திறம், மேற்கோள் மொழிகள் முதலியவை அந்நயங்கள். உவமையும், உருவகமும், அடுக்கு மொழியும் அண்ணா உரைகளிலிருந்து பிரிக்க இயலாதவை அண்ணா மொழி வனப்பும், வண்ணமும், வீறும் உடையது. தம் ஆழ்ந்த படிப்பால் வியத்தகு முறையில் அவர் மொழியினைக் கையாளுகின்றார். உரைகள் முழுவதும் வற்றாக் கற்பனை வளம் ததும்பியுள்ளன. அறிவார்ந்த அவையோருக்குப் பேசுகையில் அண்ணா கவிதைச் செறிவுள்ள நடையையும் பொதுக் கூட்டங்களில் பேசும் போது அவர்களுக்குப் புரிகிற முறையில் எளிய நடையிலும் பேசுவார்.

பழுத்த அறிவு, கூரிய அறிவு நுட்பம், அகன்ற காட்சியறிவு ஆகியவை அவர் தம் நடையினை அணி செய்கின்றன. அவர்தம் ஆளுமையும் அதில் முனைப்பாகப் புலப்படுகின்றது கருத்து முதன்மையும் முழுமையும் கருத்து வெளிப்பாட்டு விருப்பமும் அவர்தம் நடையின் தலைசிறந்த பண்புகள் எனலாம். சுருக்கம், தெளிவு, இனிமை, ஓசை நயம், அறிவாழம் முதலியவை அவர்தம் நடையின் ஏனைய பண்புகளாம். அத்துடன் அவர்தம் நடை ஒரு தனி வீறும் தனியாண்மையும் கொண்டது என்பார் அகி மூர்த்தி (அண்ணாவின் பட்டமளிப்பு விழா உரைகள், ப.8)

தலைமை உரை, துவக்க உரை, பாராட்டுரை, வானொலி உரை, சட்டமன்ற உரை, பட்ட மளிப்பு விழா உரை என அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள் பலவகைப்படும்.

தமிழ்ப் பேச்சுலகில் விடிவெள்ளியாகத் திகழ்ந்தது மட்டுமின்றி அனைத்து வகையினரையும் ஈர்க்கும் வகையில் பேசிய ஒரே பேச்சாளர் பேரறிஞர் அண்ணா. கவின்மிகு கருத்துச் செறிவும் ஒன்றையொன்றும் விஞ்சும் பலவகை நயங்களும் கொண்டவை அவர்தம் பேச்சுக்கள்.

---

# 11

# படைப்புப்பணி

அண்ணாவின் நாடகங்களோ, நாவல்களோ, சிறுகதைகளோ தமிழ் இலக்கிய வரிசையில் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. நாடகத்தில் அவர் கையாண்ட உத்திகளும் நாவல்களில் அவர் கையாண்ட நடையும் சிறுகதை எழுதுவதில் அவர் தேர்ந்தெடுத்துக் கொண்ட பாணியும் நிச்சயமாக இலக்கியவாதிகளுக்கு என்றென்றும் எழுச்சி ஊட்டிக் கொண்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இலக்கியம் இவரது குறிக்கோளாக இருந்திருக்குமானால் அவர் தன்னுடைய பிரச்சாரத்தைப் பின்னுக்குத் தள்ளி இலக்கிய வடிவத்தை முறையாக அமைப்பதில் கவனம் செலுத்தி அதில் மகத்தான வெற்றி பெற்றிருக்க முடியும். அந்த ஆற்றல் அவருக்கு உண்டு. இதை அவரது எழுத்துக்கள் இன்றைக்கும் நிரூபித்துக் கொண்டிருக்கின்றன. அத்துடன் சமுதாய சீர்திருத்தப் பிரச்சாரகராக அவர் எழுதிய போதும், ஓர் இலக்கியவாதியாக அவரால் தன்னை அடையாளம் காட்டிக் கொள்ள முடிந்துள்ளது. இதுதான் அண்ணாவின் தனிச்சிறப்பு.

இவரது உள்ளம் இலக்கிய உள்ளம், இவர் ஒரு நல்ல ரசிகர். ஓர் இலக்கிய வாதியின் அனைத்து பலவீனங்களும் இவரிடம் உண்டு. சமூக சீர்திருத்தக்களத்தில் இவர் நின்ற போதும் அரசியல்வாதியாகப் போராடிய போதும் இவருக்கு ஆயுதமாக அமைந்தது இலக்கியம்தான்.

சௌமியன், சமதர்மன், பரதன், நக்கீரன், குறிப்போன், ஒற்றன், வீரன், வீனஸ் எனும் புனைப்பெயர்களில் எழுதினார். குறிப்பாக புராண எதிர்ப்புக் கட்டுரைகளுக்கு நக்கீரன் என்ற புனைப்பெயரிலேயே எழுதி வந்தார்.

தலையங்கம், கட்டுரை, உருவக உரையாடல், சிறுகதை, குறும்புதினம், புதினம், கற்பனை உரையாடல், கடிதம், இசைப்பாடல், கருத்துரை, ஒற்றன் ஓலை, திறனாய்வு, திரட்டு, குறிப்புகள், களவு நிலைக்கட்டுரைகள், சுழல் விளக்கு, அறிக்கைகள், துணுக்குகள், பெட்டிச் செய்திகள், கற்பனை மடல், வருணனைகள், ஊரார் உரையாடல், காலட்சேபம், அறிமுகஉரை, சித்திரச் செய்தி, எழுதாத கடிதம், பேச்சுமேடை, மதிப்புரை, செய்திப் பொறிகள், ஓரங்க நாடகம், காமிராவுக்குத் தப்பிய காட்சிகள், படிப்பகம், செய்திக்கதிர், ஏர்முனை, படமும் பாடமும், உலகஅரங்கில், உண்மை கலந்த கற்பனை, செய்திகள், அந்திக்

கலம்பகம், அவியல் போன்று அண்ணா பல வடிவங்களைப் பயன்படுத்தி எழுதிக் குவித்தார்.

"இயல்பிலேயே இளகிய நெஞ்சமும் அன்புணர்ச்சியும் கொண்டிருந்த அண்ணா அவர்கள் தம்மைச் சூழ்ந்துள்ள மக்களின் வாழ்க்கையில் அவர்கள் படுந்துன்பத்தையும், துயரத்தையும் வறுமையையும் பசிக்கொடுமையையும் காணும் போதெல்லாம் அதற்காக தாமும் நெஞ்சம் குழையலானார். அவர்கள் துன்பம் தொடர்கதையாவதையும் அவர் தம் ஏழ்மையும் அறியாமையும் அதற்குத் துணையாவதையும் அந்த நிலை மேலும் மேலும் இறுகுவதையும் எண்ணலானார். அதனால் அந்தச்சூழ்நிலை உருவானதற்கும், நிலைப்பதற்கும் என்ன காரணம் என்னும் சிந்தனை பிறந்ததால், சமுதாயத்தை அதன் மேடுகளையும் மடுக்களையும் கோபுரத்தையும் குடிசையையும் அவற்றில் வாழ்வோரையும் வதைவோரையும் குற்றுயிராய்க் காலந்தள்ளுவோரையும் எடு பிடிகளைக் கொண்டு எசமானராகத் திரிவோரையும் கூர்ந்து கவனிப்பாரானார்.

எலும்பும் தோலுமாக நலியும் உழைப்பாளிகள் - பட்டினியுடன் போராடும் பாட்டாளிகள் - அரை வயிற்றுக் கஞ்சிக்கே திண்டாடும் உழவர்கள் - குந்த குடிசையுமற்ற தாழ்த்தப்பட்ட மக்கள் - பள்ளிக் கூடம் பார்த்தறியாத பிற்படுத்தப் பட்ட மக்கள் - வறுமையால் உடலை விலைபேச நேரிட்ட வனிதைகள் - கிழவனுக்கு மாலையிட்டுக் கண்ணீரில் மிதந்த கன்னிகள் - பணத்திமிரால் பகட்டுடன் திரிந்த உலுத்தர்கள் - மதத்தலைவராய் மக்களை அடிமைப்படுத்திய மதோன்மத்தர்கள் - சாதி ஆவணத்தால் தீண்டாமை வழிப்பட்ட கொடுமைகளைச் செய்த அக்கிரமக்காரர்கள் - உலகுமாயை என ஊராருக்கு உபதேசித்து உடலை வளர்த்த கனபாடிகள் - கதாகாலட்சேபம் செய்து மக்களை மயக்கி மூடநம்பிக்கையை வளர்த்த வீணர்கள் - தெய்வபக்தியின் பெயரால் பாமரரைச் சுரண்டிய கபட வேடதாரிகள் - கோயில் தர்மகர்த்தா, தம்பிரான், பூசாரி, அர்ச்சகர், சாமியார், சோசியர், மந்திரவாதி, ஊர்ப்பெரிய தனம் நாட்டாண்மை என்னும் பலவகையில் மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தி அவர்களைக் கொடுமைக்கு ஆளாக்கிய சமுதாய விரோதிகள் முதலானோர் அவரது மனதில் பதிந்து விட்டனர்.

சமுதாயச் சீர்கேட்டை மாற்றுவதற்குத் தேடிய விடை தந்தை பெரியாரின் இயக்கத்திலே கிடைத்தது. ஆனால் அந்தக் குறிக்கோளை அடைவதற்கான முயற்சியாக மேற்கொள்ளப்பட்ட பகுத்தறிவு விளக்கம் - வைதீக மறுப்பு - சாதி ஒழிப்பு - கலப்பு மணம், விதவை மறுமணம் போன்றவற்றை மக்கள் ஏற்கும் வண்ணம் எடுத்து வைப்பதிலேதான் அண்ணாவின் வழியும் விளக்கமும் தனித்தன்மை கொண்டதாயிற்று. அந்தத் தனித்தன்மை பரந்துபட்ட இலக்கிய புலமையால், மாந்தர்களின் உள்ளுணர்வைப் புரிந்து கொள்ளும் திறத்தால், இனிய உளவாக இன்னாத கூறலைத் தவிர்த்திடும் விழைவால், நகைச்சுவை நாட்டத்தால், எதிரியை ஈர்க்கும் பேச்சுத் திறத்தால், மக்களின் அறியாமையைத் தெளிந்த தன்மையால் ஏற்பட்ட இரக்கத்தால், கலை உள்ளத்தால் அவரிடம் உருக்கொண்டதாகும்.

அவர் வாழ்ந்தது - எண்ணியது - எழுதியது அனைத்தும் ஒரு குறிக்கோளுடன்; மக்களின் மனப்பான்மையில் ஒரு மாற்றம், விழிப்பு – எழுச்சி – தன்னம்பிக்கை ஏற்படுத்தி – பழமைப் பிடியில் இருந்து விடுவித்து ஒரு புதிய சமுதாயமாக மறுமலர்ச்சி காணச்செய்தலே அவரது குறிக்கோள். அந்த அடிப்படையில் மலர்ந்து மணம் பரப்பியதே அவரது எழுத்தும் அனைத்தும்" என்பார் டாக்டர் க. அன்பழகன்' (டாக்டர் பா. உதயகுமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத்திறன், ப. 4-6).

"அண்ணா அழகுணர்ச்சி கொண்ட இலக்கியவாதியாக மட்டும் இருக்கவில்லை. அவர் ஒரு சிந்தனாவாதியாக-சமுக சீர்திருத்தக்காரராக அரசியல்வாதியாக - போராட்டக்காரராக பிரச்சாரகராக இருந்தார். சமுதாய மாற்றத்தைத் தன் குறிக்கோளாகக் கொண்டிருந்ததால் படைப்புகளை வெறும் கலை வடிவமாக மட்டும் பார்க்க முடியாமல் போனது. அவர் காண விரும்பிய சமூக மாற்றத்திற்கு-செய்ய விரும்பிய அரசியல் சாதனைகளுக்கு- இலக்கியத்தையும் கலைத்துறையினையும் கருவிகளாக மட்டுமே கருதினார். அந்தக் கருவிகளை எப்படிக் கூர்மையாக்கிக் கொண்டு பயன்படுத்த வேண்டும் என்கிற விஷயத்தில் அவர் நிகரற்ற நிபுணராக விளங்கினார். கலை வடிவங்களும் இலக்கிய படைப்புகளும் மனித வாழ்க்கையை மேம்படுத்தும் சாதனங்களாக அமையவேண்டும் என்பதில் அசையாத நம்பிக்கை கொண்டவராக விளங்கினார். இவரது முயற்சியால் கலையிலும் இலக்கியத்திலும் புதிய பல பரிசோதனைகள் தோன்றலாயின" என்பார் பி.சி. கணேசன் (அண்ணா எனும் இலக்கியவாதி, ப.14-15).

"அண்ணாவின் எழுத்தோவியங்களை ஊன்றிப் படிக்கும் போது ஒரு வரலாற்று ஆசிரியனின் ஆற்றல், ஒரு படைப்பாசிரியனின் பண்பு, ஒரு சிறந்த விமர்சகனின் விவேகம், ஒரு விரிவுரையாளனின் நுட்பம், ஒரு வழக்கறிஞரின் வாதத்திறன், ஒரு கவித்துவம் நிறைந்த கற்பனையாளனின் நயம், நூலின் தலைப்பிற்கேற்ப பளிச்சிடக் காணலாம்", என்பர் (அறிவுப்புனல் அண்ணா, ப. 37).

எந்த ஓர் எழுத்து மனித நேயத்தோடு சித்தரிக்கப்பெறுகின்றதோ மனித இதயங்களை வருடிப் பார்த்து அவர்தம் இதயத்துடிப்பை உணர்த்துகின்றதோ அதுதான் இலக்கியம். இதயத்துள் எங்கேயோ ஒடுங்கிக் கொண்டிருக்கும் நியாயத்தையும் தர்மத்தையும் எண்ணிப் பார்க்க வைக்கின்றதோ அப்போதுதான் இலக்கியம் வெற்றி காண்கிறது. மனிதன் இயற்கைகளால் துன்பப்படுவதைக் காட்டிலும் மனிதர்களால் இடர்பாடுகளைச் சந்திப்பதுதான் ஏராளம். மனிதன் மனிதனால் ஏய்க்கப்படும் கொடுமையிலிருந்து விடுதலை பெறச் செய்ய வேண்டும். அதுதான் மானுடம் நிறைந்த எழுத்தறம். அந்த எழுத்தறத்தை அண்ணாவின் சமூகப் பரிவு உணர்ச்சி நிறைந்த எழுத்தில் காணமுடிகின்றது.

அண்ணாவின் கதைக்கருக்கள் எல்லாம் சொல்லமுடியாமல் தவித்து சமூகம் விழுங்கிக் கொண்டிருக்கும் சிக்கல்களே; இனம், மதம், சாதி, சமூக

மதிப்பு, பொருளதார நிலை, அதிகார மயக்கம் இவைகளால் சமூகத்தில் ஏற்படும் சிக்கல்களையே தலைமைப் பண்புகளாக வைத்து கதை இலக்கியத்தைப் படைத்துள்ளார் என்பார் டாக்டர் பா உதயகுமார் (அ.அ.சி., ப. 13)

எதுகை மோனையோடு அண்ணா எழுதுவதால் அவர் சொல்ல வந்த விஷயத்திற்குச் சுவை ஏற்பட்டது; ஓசை நயத்தோடு அவர் வாக்கியங்களை எழுதினார். எனினும் அது மட்டுமே அவரது எழுத்துக்குச் சிறப்பு சேர்க்க வில்லை. அழகான, அடுக்கடுக்கான சிறுசிறு வாக்கியங்களில் ஓசை அழகும் கருத்தை வெளியிட்டு இருக்கிற தன்மையும், அவை பெற்றுள்ள கூர்மையும், உடனடியாகப் படிப்போர் மனத்தில் தைத்து அப்படியே நிலைத்து விடுகின்றன.

“மேதைகளைப் பேதைகள் விலைக்கு வாங்கிய காலம். கொக்கு சுடும் துப்பாக்கிகளைக் காட்டி வெள்ளைக்காரன் கோட்டை கொத்தளங்களைப் பிடித்த காலம். கட்ட பொம்மன்களைக் காட்டிக் கொடுக்க காட்டு ராஜாக்கள் வாழ்ந்த காலம்” - இது, பிரிட்டிஷாரின் ஆட்சி இந்திய மண்ணில் நிலவிய போது எத்தகைய ஏமாளித்தனத்தில் இந்திய மக்கள் இருந்தார்கள் என்பதை அண்ணா அழகாகச் சொன்ன முறை.

அண்ணா என்ன சொன்னார் என்பதை விட, எப்படிச் சொன்னார் என்பதிலேதான் அவருடைய வெற்றியே அடங்கி இருக்கிறது. சாதாரண விஷயத்தையும் நாடகப்படுத்தியும் சற்று கடுமையான விஷயத்தையும் உணர்ச்சி பூர்வமாகவும் சொல்வார்.

“நட்டது முளைக்காத போது, போட்ட கணக்கு பொய்யாகும் போது, நண்பர்களிடமிருந்து பகை கிளம்பும் போது, ஓவியம் தீட்டுகையில் வண்ணக் கலயம் உடையும் போது, வீணையில் இசை எழுப்ப அந்த வீணையின் நரம்பு அறுந்து அறுந்த அந்த நரம்பு கண்ணிலே பாயும் போது, விதி வெற்றிச் சிரிப்புடன் எதிரே நிற்கும்” இவ்வாறு ‘விதி’ பற்றி ஓவியனின் திரைச் சித்திரமாக உவமை அழகோடு தூரிகையின் லாவகத்தோடு தீட்டியுள்ளார்.

அண்ணா, தமிழுக்கு ஒரு புது நடை தந்தார். அது வேகமான நடை, விறு விறுப்பான நடை, படிப்போரைச் சோர்வில் ஆழ்த்தாத நடை, மேலும் மேலும் படிக்கத் தூண்டிப் பரவசப்படுத்தும் நடை.

காலத்தின் வளர்ச்சிக்கு ஏற்ப அவரது நடையும் வளர்ந்தது. போகப் போக அவர் அடுக்குத் தொடரை மட்டும் வைத்துக் கொண்டு எதுகை மோனைகளைக் குறைத்துக் கொண்டார்.

சொல்ல வந்ததைச் சுவையாகச் சொல்வதை ஒரு கலையாகப் பயின்றவர். கேலி, ஏகடியம், வஞ்சப்புகழ்ச்சி ஆகியவற்றில் ஒப்பாரும் மிக்காரு மில்லாதவராக அண்ணா விளங்குகிறார்.

“நடை என்பது வானவில்; அது நெடுநேரம் அழகுதராது” என்று அண்ணாவே கூறுவார். அழகான நடை மட்டும் இலக்கியம் ஆகி விடாது என்பதும் அவருக்குத் தெரியும். ஆனால் கசப்பான - காட்டமான கருத்துகளுக்கு அழகான நடை ஆடையாக அமைகிறது.

நடை சக்தி வாய்ந்ததாக இருந்து விரும்பிய விளைவுகளை ஏற்படுத்த வேண்டும் என்று கருதினார். தனித்தமிழ்ச் சொற்களைத் தேடி அலைந்து நடை ஓட்டத்தின் இயற்கைத் தன்மையை இழந்து விட அவர் தயாராக இல்லை. வடமொழி சொற்கள் விரவிய நடை வலு உள்ளதாக இருந்தால் சமூகச் சீர்திருப்பப் பலனும் கூடுதலாக இருக்கும் என்பது அண்ணாவின் கணிப்பு.

இவரது மொழி நடையில் எதுகை மோனையோடு இயைபு, அந்தாதி, உவமை, விற்பூட்டு, உருவகம், இலக்கணை, சிலேடை, முரண்பாடு மெய்மை (Paradox) இணை ஒப்புமை (Analogy), திருப்புரை (Repetition) போலிக் குறை, இல்பொருள் சொல்லாட்சி, வக்கணை (Pun) குறிப்புப்பொருள், திட்ப நுட்பஅங்கதம் (Epigram), மரபுத்தொடர்கள் (idioms), இணைக்கூட்டு (Associated compound), தற்குறிப்பேற்றம் (Pathetic fallacy), பழமொழி, இரட்டைக்கிளவி, அடுக்குத்தொடர், ஆகுபெயர் (Metonymy), ஒலிக் குறிப்புச் சொற்கள், எதிரிணை இசைவு (Antithesis), அடைமொழி (Epithet), நகைச்சுவை, அடுக்கு, ஒப்பீடு, மறுப்பு, வினா, வருணனை, முரண், ஒட்டு, சுட்டு, இடை நிறுத்தல், இடைப்பிறிது வரல் (Parenthesis), இடைக்கோடுகள் (Dashes), சுருக்கல், குறிப்பு, பட்டியல், பேச்சு வழக்கு, சூழலுக்கேற்ற சொல்லாட்சி, புதிய சொல்லாட்சி எனும் பல்வேறு அம்சங்கள் இவரது நடையில் பயின்று வருவதைக் காணலாம்.

நடை என்பதே அறுதியிட்டு விளக்க முடியாத ஒன்று; அதிலும் தனித் தன்மை சான்ற நடையை விளக்கிக் காட்டுவது அரிய செயல். செவிக்கின்பம் தரும் ஒழுங்குபட்ட ஒலிநயம் கையாளும் சொற்களில் ஒருவகையான தேர்வாற்றல், தெரியாற்றல், வேறொருவரிடமும் எளிதில் காணமுடியாத அரிய தொடர் ஆக்கங்கள். நுவல் பொருளுக்கும் உணர்ச்சி நிலைக்கும் ஏற்ற வண்ணம் அமைந்த தொனி, முத்திரை பதித்தாற் போன்ற வாக்கிய அமைப்பு முதலியன தனி நடையின் பண்புகள் ஆகும். அண்ணாவும் இத்தகைய தனிநடை வாய்க்கப் பெற்றவர் என்பார் முனைவர். மா. இராமலிங்கம்.

புலவர் குழந்தையும், "அண்ணாவின் எழுத்துக்கு ஒப்பு அதுவே. ஆற்றொழுக்கு போன்ற நடை, அழகிய நடை விறுவிறென்ற நடை, பொன் போல போற்றக்கூடிய நடை, புலவர் புகழ் நடை, படிப்போர் நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் பண்புடை நடை என்று எவ்வளவு வேண்டுமானாலும் அடுக்கிக் கொண்டே போகலாம். அண்ணாவின் சொல் நடை சில இடங்களில் செய்யுள் நடையிலும் சிறந்த தொடையழகுடைய நடை. கருத்தை எளிதில் விளக்கும் சொற்றொடர்கள் புத்தம் புதிய சொல்லாட்சி" என்று போற்றுவார்.

விடை தர வேண்டிய இன்றியமையாமை இன்றி, கேட்கப்படும் வினாவே விடையாக அமைதலும் உண்டு. இத்தகு வினாக்களை - அணி வினாக்களை - இடை மடுத்து எழுதுவது உணர்ச்சி வெளிப்பாட்டிற்கு நன்கு உதவும் என்பார் முனைவர் மா. இராமலிங்கம் (பு. உ., ப. 103)

"அவர் (பெரியார் ஈ.வே.ரா.) பேசாத நாள் உண்டா? குரல் கேட்காத ஊர் உண்டா? அவரிடம் சிக்கித் திணறாத பழமை உண்டா? எதைக் கண்டு அவர் திகைத்தார்? எந்தப் புராணம் அவரிடம் தாக்குதலைப் பெறாதது? எனவே தான், பெரியாருடைய பெரும்பணியை நான் ஒரு தனிமனிதனின் வரலாறு என்றல்ல ஒரு சகாப்தம் - ஒரு கால கட்டம் - ஒரு திருப்பம் - என்று கூறுகிறேன்" என்பது இதற்குச் சான்று. (பெரியார் பிறந்த நாள் வாழ்த்து)

உணர்ச்சி வெளியீட்டிற்காகவும், சொல்லப்படும் கருத்தில் அழுத்தம் தருவதற்காகவும் சொல்லையோ கருத்தையோ திரும்பத் திரும்பச் சொல்வதுண்டு. அளவோடு வரின் இதுவும் அழகேயாகும். இதுவும் அண்ணாவின் நடையழகில் ஒன்றாகும்.

"கடல் கடந்தவன் தமிழன்! இமயத்தில் புலி பொறித்தவன் தமிழன்! ரோம் நகருக்குப் பொன்னாடை விற்றவன் தமிழன்! எந்நாடும் வியக்கும் வீரன் தமிழன்! ஏறு நடை உடையவன் தமிழன்! இன்னல் கண்டு புன்னகை புரிவான் தமிழன்! அவனுக்குப் பட்டம் சோப்பும் சீப்பும் கண்ணாடியும் விற்க வந்து பின்னர் அரசாள ஆரம்பித்த துரை மக்கள் தருவதா?" (விடுதலைப் போர்). இதில் தமிழன்' என்ற சொல் திரும்பத் திரும்ப வந்து கருத்துக்கு வலிமையும் பொலிவும் சேர்க்கின்றது.

படைப்பிலக்கியத் துறையில் உயிர்த்துடிப்பான நடையைக் கையாண்டு பெரும் பரபரப்பையும், பாதிப்பையும் உண்டாக்கியவர் அண்ணா. மோனையும் எதுகையும் 'நான் முந்தி நான் முந்தி' என்று போட்டி போட்டுக் கொண்டு வந்து நிற்கும் தென்றலின் இனிமையும் புயலின் வேகமும் கடலின் ஓலமும் எரிமலையின் குமுறலும் மாறி மாறி வந்து மறையும், உணர்ச்சி நாதத்தை மீட்டுகிற இனிய நடை அண்ணாவின் நடை. அடுக்கடுக்கான சொல்லலங்காரங்கள் படிப்போரை மயக்கித் தன் வசப்படுத்தும். வனப்பும் இளமையும் நிறைந்த அவர் நடையால் தமிழ் நாவல்கள் புதிய கோலத்தைப் பூண்டு நின்றன

அண்ணாவின் 'ரங்கோன் ராதா'வில் இருந்து சிறு பகுதி : "ராதா என்ற பெயரே ரசமாகத் தோன்றிற்று. ரங்கோன் ரசமான இடமாமே. பாவம். அவள் யாரோ! குண்டுகளுக்குப் பயந்து இங்கு வருகிறாள். அவள் மீது பாணம் பூட்ட நான் கிளம்புவதா? சிச்சீ! கெட்ட நினைப்பு நமக்கு ஏன்? என்றும் எண்ணினேன். கெட்ட நினைப்பு என்று இதை நான் மாற்ற முடியுமா? நான் என்ன, கிடைக்கும் தையலைத் தூக்கி வைத்துக் கொண்டு, தாண்டவமாடப் போகிறேனோ சிவனார் போல்! ராதையும் என்னைக் கண்டு மோகித்தால் நானென்ன மகாவிஷ்ணு போல், அலை கடலில் ஆலிலை மேல் படுத்துக் கொண்டு அந்த ஆபத்தான இடத்துக்கா பிரியவதியை அழைப்பேன்?" என்று எழுதியுள்ளார்.

அண்ணா என்றைக்குமே முதலாவதாகவும் முடிவானதாகவும் தன்னை ஒரு எழுத்தாளராகவே கருதினார். முதலமைச்சர் ஆனதும் எழுத

முடியவில்லையே என்ற ஏக்கத்தினை 'சூழ்நிலைக்கைதி' என்று வெளிப்படுத்தினார். இதைப் போன்று நோய்வாய்ப்பட்டு அவதிப்பட்ட போதும் தம்பிக்கு மடல் தீட்ட அவர் தவறியதில்லை.

தமிழ்ச் சமுதாய மறுமலர்ச்சிக்கு வழி கோலியவர்களுள் அரசியலையும் சமுதாயச் சீர்திருத்தத்தையும் ஒருங்கிணைத்துப் பார்த்த மறுமலர்ச்சி இயக்க எழுத்தாளர்களுள் அறிஞர் அண்ணாவும் ஒருவர். இவரது இலக்கியப் படைப்புகளுக்குப் பின்னணியாக, தமிழ்ச் சமுதாயத்தின் நிலையும் நீதிக் கட்சியின் இனநலப் பணியும் பெரியாரின் பகுத்தறிவுச் சிந்தனையும் மேனாட்டுக் கல்வியால் பெற்ற உலகப் பார்வையும் அமைந்தன. அண்ணாவின் இலக்கிய வரலாறும் எழுத்தின் வரலாறும் ஒருங்கிணைந்தவை. நீதிக்கட்சி, தன்மான இயக்கம், திராவிடக் கழகம், திராவிட முன்னேற்றக்கழகம் போன்ற இயக்கங்களின் நோக்கங்கள், கொள்கைகள் ஆகியவற்றின் எதிரொலிகளாகவே இவரது படைப்பிலக்கியங்கள் காணப்படுகின்றன.

---

# வாழ்க்கைக் குறிப்புகள்

## சி. என் அண்ணாதுரை

| | | |
|---|---|---|
| தோற்றம் | - | 15-9-1909 |
| தந்தை | - | நடராசன் |
| தாய் | - | பங்காரு அம்மாள் |
| பிறந்த ஊர் | - | சின்ன காஞ்சிபுரம் |
| வாழ்க்கைத் துணை | - | இராணி அம்மையார் |
| புனை பெயர் | - | சௌமியன், சமதர்மன், சம்மட்டி, ஒற்றன், ஆணி, பரதன் |
| 1929-34 | - | சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பி.ஏ. ஆனர்சு பொருளியல் பட்டப்படிப்பு |
| 11-2-34 | - | முதல் சிறுகதை 'கொக்கரக்கோ' ஆனந்த விகடனில் வெளிவந்தது. |
| 1-2-36 | - | சென்னை பச்சையப்பன் மண்டபத்தில் பார்ப்பனர் அல்லாதார் இயக்கமும் காங்கிரசும் பற்றிச் சொற்பொழிவு. |
| 1936 | - | சென்னை மாநகராட்சித் தேர்தலில் நீதிக்கட்சி உறுப்பினராக நிற்றல். |
| 11-4-37 | - | நீதிக்கட்சிச் செயற்குழு உறுப்பினராதல் |
| 1937 | - | விடுதலை, குடிஅரசு இதழ்களில் துணை ஆசிரியர் பணி |
| 9-12-37 | - | முதற்கவிதை, 'காங்கிரஸ் ஊழல்' விடுதலையில் |
| 26-9-38 | - | இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் மக்களைத் தூண்டிவிட்ட குற்றம் சாட்டி நான்கு மாத வெறுங்காவல் |
| 13-1-39 | - | தமிழுக்காக உயிர்நீத்த நடராசன் இறுதி ஊர்வல நாள் இரங்கற் கூட்டத்தில் உரை |
| 18-1-39 | - | தமிழர் திருநாள் உரை நிகழ்த்துதல். |
| 10-2-39 | - | சென்னை கிறித்துவக் கல்லூரியில் இந்தி எதிர்ப்பு சொற்போர் |
| 6-1-40 | - | பம்பாயில் பெரியார் - அம்பேத்கார் உரையாடல் : மொழிபெயர்ப்பு |
| 2-6-40 | - | காஞ்சியில் திராவிட நாடு பிரிவினை மாநாடு |
| 7-3-42 | - | 'திராவிட நாடு' கிழமை இதழ் தொடக்கம் |
| 14-3-43 | - | சேலத்தில் நாவலர் பாரதியாருடன் கம்பராமாயணச் சொற்போர் |

| | |
|---|---|
| 5-6-43 | - 'சந்திரோதயம்' நாடகம் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தலைமையில் நடத்தல். |
| 19-8-44 | - சேலத்தில் நீதிக்கட்சி மாநாடு - அண்ணாதுரை தீர்மானம் - நீதிக்கட்சி, திராவிட கழகம் எனப்பெயர் மாற்றம் பெற்று மக்கள் இயக்கமாக மலர்தல். |
| 15-12-45 | - 'சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்' நாடக அரங்கேற்றம் - அண்ணா நடித்தல். |
| மே 1946 | - கருஞ்சட்டைப்படை மாநாடு - தந்தை பெரியாருடன் கருத்து வேறுபாடு |
| 29-7-46 | - நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமையில் பாவேந்தருக்குப் பொற்கிழி வழங்கல் |
| 25-4-47 | - 'வேலைக்காரி' நாடகம். |
| 1-6-47 | - 'நீதிதேவன் மயக்கம்' நாடகம். |
| 15-8-47 | - ஆகஸ்டு பதினைந்து 'விழா நாளே' என விளக்கம் தருதல். |
| 14-1-48 | - 'நல்ல தம்பி' திரையிடல். |
| 18-6-49 | - தந்தை பெரியார் - மணியம்மை திருமணம். அண்ணா பிரிந்து நிற்றல். |
| 10-8-49 | - 'மாலைமணி'- நாளிதழ் ஆசிரியர். |
| 17-9-49 | - தி.மு.க. தோற்றம் |
| 18-9-49 | - 'திராவிட நாடு' இதழில், 4, 18-4-48இல் வரைந்த கட்டுரைக்காக வழக்கு. நான்கு மாதச் சிறைத் தண்டனை ஏற்றல், எதிர்ப்பு கண்டு பத்தாம் நாள் விடுதலை. |
| 12-1-50 | - நாடெங்கும் பொங்கல் விழா - உழவர் விழா எடுக்க அறிக்கை விடல். |
| 1950 | - திருச்சிச் சிறையில் 'இலட்சிய வரலாறு' எழுதுதல். |
| 1951 | - 'ஆரியமாயை' நூலுக்குத் தடை |
| 17-9-51 | - திராவிட நாடு பிரிவினை நாள் அறிவித்தல். |
| 16-12-1951 | - தி.மு.க. முதல் மாநில மாநாடு. |
| 1-8-52 | - சென்னையில் இந்தி எதிர்ப்பு அறப்போர் |
| 15-6-53 | - 'நம்நாடு' நாளிதழ் தொடக்கம். |
| 13-7-53 | - மும்முனைப் போராட்டம் - மூன்று மாதம் சிறை |
| 2-2-56 | - தேவிகுளம், பீர்மேடு இணைப்புக்காகப் பொது வேலை நிறுத்தம். |
| 29-4-57 | - தமிழ்நாடு சட்டமன்றத் தி.மு.கழகத் தலைமை ஏற்று, எதிர்க்கட்சித் தலைவர் ஆதல். |

| | | |
|---|---|---|
| 9-6-57 | - | 'ஓம் லேண்டு' (Homeland) ஆங்கிலக் கிழமை இதழ் தொடங்குதல் |
| 2-3-58 | - | தி.மு.கழகத்தினை மாநிலக் கட்சியாக இந்திய அரசு ஒப்புதல் அளித்தல். |
| 24-4-59 | - | அண்ணாவின் தம்பியர் சென்னை மாநகராட்சி மன்ற ஆட்சியில் அமர்தல். |
| 1-8-60 | - | இந்தி எதிர்ப்பு மாநாடு செங்கையில் அண்ணா தலைமை உரை |
| 1962 | - | சம்பத் விலகல் குறித்து அண்ணா அறிக்கை |
| 26-2-62 | - | சட்டமன்றத்திற்குத் தம்பியர் ஐம்பதின்மர் செல்ல, அண்ணா, நாடாளுமன்ற மேலவை உறுப்பினராதல். |
| 2-8-62 | - | விலைவாசி உயர்வுப் போர் - வேலூர் சிறையில் பத்து வாரம். |
| 17-11-63 | - | கட்டாய இந்தி - 17வது மொழிப் பிரிவு சட்டம் எரித்தல்; 16-11-63 அன்றே கைதாகி, ஆறு மாதம் சிறைத்தண்டனை ஏற்றல். |
| 1-3-67 | - | தமிழ்நாட்டுச் சட்ட மன்றத்தில் 138 பேர் தம்பியருடன் அண்ணா தமிழக முதல்வர் ஆதல். |
| 14-4-67 | - | 'தமிழ்நாடு' பெயரிட்டுப் பெருமை பெறல் |
| 10-1-68 | - | இரண்டாவது உலகத்தமிழ் மாநாடு எடுத்தல் |
| 8-9-68 | - | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்குதல் |
| 4-1-69 | - | கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் சிலை திறப்பு விழாவில் கடைசிச் சொற்பொழிவு. |
| 2-2-69 | - | புகழ் உடம்பெய்தல். |

நன்றி : பூம்புகார் பிரசுரம்

---

# துணை நூற்பட்டியல்

## (அ) அண்ணாவின் நூல்கள்


1. ஆரிய மாயை, கார்த்திகா பதிப்பகம், சென்னை, 1997.
2. தமிழரின் மறுமலர்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1969.
3. தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் I-XI, பாரி நிலையம், சென்னை,1986.
4. அண்ணாவின் நாடகங்கள், பரிமளம் பதிப்பகம், சென்னை, 1971.
5. அறிஞர் அண்ணா சிறுகதைகள், பூர்ணிமா பதிப்பகம், சென்னை,1997.
6. குமரிக் கோட்டம், திராவிடப் பண்ணை, திருச்சி, 1968.
7. 1858 - 1948 " " 1975.
8. இலட்சிய வரலாறு, " " 1953.
9. கலிங்கராணி, " " 1974.
10. கற்பனைச் சித்திரம் " " 1978.
11. சிறுகதைகள் " " 1973.
12. நாம், " " 1974.
13. நிலையும் நினைப்பும், " " 1977.
14. பணத்தோட்டம், " " 1970.
15. பெரியார் ஒரு சகாப்தம், " " 1978.
16. மேதினம், " " 1976.
17. ரோமபுரி ராணிகள் " " 1982.
18 வெள்ளை மாளிகையில், பூம்புகார் பிரசுரம் பிரஸ், சென்னை, 1981.
19. வேலைக்காரி, " " 1980.
20. அப்போதே சொன்னேன், " " 1986.
21. பவழ பஸ்பம், " " 1986.
22. அரசாண்ட் ஆண்டி, " " 1987.
23. வண்டிக்காரன் மகன், " " 1980.
24. கண்ணாயிரத்தின் உலகம், " " 1980.
25. இன்ப ஒளி, " " 1980.
26. இரும்பாரம் " " 1981.
27. அண்ணாவின் கவிதைகள் " " 1980.
28. பிடி சாம்பல் " " 1980.
29. சந்திர மோகன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.
30. நீதி தேவன் மயக்கம் " " 1998.
31. சட்டசபை சொற்பொழிவுகள் " " 1998.

## (ஆ) அண்ணாவைப் பற்றிய நூல்கள்


1. கணேசன், பு.சி. அண்ணா எனும் இலக்கியவாதி, மாதவி பதிப்பகம், சென்னை, 1980.
2. நாகை தருமன் இலக்கிய உலகில் அண்ணா, நன்செய் பதிப்பகம், சென்னை, 1971.
3. கருணானந்தம், கவிஞர் அண்ணா சில நினைவுகள், பூவழகிப் பதிப்பகம், சென்னை, 1986
4. ஆறுமுகம், டாக்டர், ப. அறிஞர் அண்ணாவின் தமிழ்க் கொடை, மலர்விழிப் பதிப்பகம், சென்னை, 1988.
5. செங்குட்டுவன், மா. அண்ணா எனும் அண்ணல், தாமரைச் செல்விப் பதிப்பகம், சென்னை, 1990.
6. மருதவாணன், சா. அண்ணா ஒரு பல்கலைக்கழகம், அம்மன் புக் கம்பெனி, கோவை, 1984.
7. பரிமளம், டாக்டர் சி.என்.ஏ. பேரறிஞர் அண்ணாவின் பயண இலக்கியம், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1994.
8. உதயமூர்த்தி, டாக்டர் எம்.எஸ். அமெரிக்காவில் அண்ணா எம்.ஜி.ஆர்., வித்வான் பதிப்பகம், சென்னை, 1975.
9. மறைமலையான், அ. பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு, வானதி பதிப்பகம், சென்னை, 1967.
10. வேலுசாமி, பேராசிரியர் ந. அறிஞர் அண்ணாவின் சிந்தனைகள், தமிழ்த்துறை, ஈரோடு, 1992.
11. திருமலை டாக்டர், ம. தமிழ்ச் சிறுகதை - நேற்றும் இன்றும், ஐந்திணை வெளியீடு, சென்னை, 1993.
12. இராமலிங்கம், முனைவர், மா. நாவல் இலக்கியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், சென்னை, 1999.
13. அறந்தை நாராயணன். தமிழ் சினிமா, நி.பு.ஹ. சென்னை, 1980.
14. திருநாவுக்கரசு, க. திராவிட இயக்க இதழ்கள், நக்கீரன் பதிப்பகம், சென்னை, 1998.
15. கருணானந்தம், கவிஞர். அண்ணாவின் மனித நேயம், பூவழகிப் பதிப்பகம், சென்னை, 1989.
16. இளங்கோவன், கோ. அண்ணாவும் அழகுத்தமிழும், அன்னை நிலையம், சென்னை, 1968.
17. உதயகுமார், பா அறிஞர் அண்ணாவின் சிறுகதைத்திறன், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1989.

# சிறுகதைகள் (காலவரிசை)

| | | | |
|---|---|---|---|
| 11-02-34 | கொக்கரக்கோ | நூ.வ.பெ | விகடன் |
| 18-06-39 | அவள்மிகப் பொல்லாதவள் | அண்ணாவின் ஆறுகதைகள் | குடியரசு |
| 1939 | சிங்களச் சீமாட்டி | அண்ணாவின் ஆறுகதைகள் | ” |
| 1939 | தங்கத்தின் காதலன் | தங்கத்தின் காதலன் | |
| 14-03-43 | பிரார்த்தனை | கற்பனைச்சித்திரம் | திராவிட நாடு |
| 28-03-43 | வள்ளி திருமணம் | கற்பனைச்சித்திரம் | ” |
| 04-04-43 | கைக்கு எட்டியது | நூ.வ.பெ. | ” |
| 18-04-43 | நாக்கிழந்தார் | செவ்வாழை | ” |
| 25-04-43 | சரோஜா ஆறணா | ” | ” |
| 22-10-43 | உண்ணாவிரதம் ஒரு தண்டனை | நூ.வ.பொ | ” |
| 24-10-43 | சொல்லாதது | சிறுகதைகள் | ” |
| 12-11-44 | கிருஷ்ண - லீலா | அண்ணாவின் ஆறுகதைகள் | ” |
| 14-01-45 | 1938-40 ஒரு வசீகர வரலாறு | சாது முதலிய 3 சிறுகதைகள் | ” |
| 21-01-45 | சிக்கலான பிரச்சனை | சிறுகதைகள் | ” |
| 04-02-45 | பிரசங்க பூஷணம் | கற்பனைச்சித்திரம் | ” |
| 04-03-45 | மதுரைக்கு டிக்கெட் இல்லை | ம.டி.இ. | ” |
| 27-04-45 | தனபால செட்டியார் கம்பெனி | ” | ” |
| 09-06-45 | அன்னதானம் | ” | ” |
| 18-11-45 | பொய் - லாபநஷ்டம் | நூ.வ.பொ | ” |
| 06-01-46 | இரு பரம்பரைகள் | சிறுகதைகள் | ” |
| 20-01-46 | புலிநகம் | அண்ணாவின் சிறுகதைகள் | ” |
| 03-02-46 | சுடுமூஞ்சி | சிறுகதைகள் | ” |
| 17-02-46 | வேலைபோச்சு | கற்பனை சித்திரம் | ” |
| 24-02-46 | சொல்வதை எழுதேண்டா | அ.ஆ சிறுகதைகள் | ” |
| 03-03-46 | தேடியது வக்கீலை | ” | ” |
| 12-05-46 | ஜெபமாலை | சுடர் (டில்லி பதிப்பு) | ” |
| 07-07-46 | பூபதியின் ஒரு நாள் அலுவல் | அண்ணாவின் சிறுகதைகள் | ” |
| 08-09-46 | முகம் வெளுத்தது | நூ.வ.பொ | ” |
| 17-11.46 | அவள் விபச்சாரியானாள் | வாழ்க்கைப் புயல் | ” |
| 17-11-46 | நாடோடி | ” | ” |
| 12-01-47 | கைதிகள் | ” | ” |
| 12-01-47 | சூதாடி | ” | ” |
| 19-01-47 | கலிதீர்த்த பெருமாள் | நூ.வ.பெ. | ” |
| 23-02-47 | இம்சைக்கு ஆளான இலட்சியவர்த்தி | வாழ்க்கைப்புயல் | ” |
| 02-03-47 | நாட்டில் காடு | கற்பனைச்சித்திரம் | ” |
| 16-03-47 | மாடி வீடு | மாடிவீடு | ” |
| 18-05-47 | பிடிசாம்பல் | அ. சிறுகதைகள் | ” |
| 31-08-47 | பேய் ஓடிப்போச்சு | ” | ” |
| 20-09-47 | சோணாசலம் | ” | ” |
| 16-11-47 | சாது | சாது முதலிய 3 சிறுகதைகள் | ” |

| தேதி | தலைப்பு | தொகுப்பு | இதழ் |
|---|---|---|---|
| 25-01-47 | பலாபலன் | - அ. சிறுகதைகள் | - திராவிட நாடு |
| 06-06-48 | ராஜபார்ட் ரங்கதுரை பாகவதர் | - கதம்பம் | - ” |
| 13-06-48 | இரும்பாரம் | - இரும்பாரம் | - ” |
| 21-12-48 | கடவுள் தண்டிப்பார் | - கடவுள் தண்டிப்பார் | - ” |
| 14-01-49 | வள்ளி நாயகியின் கோபம் | - ” | - ” |
| 01-05-49 | செவ்வாழை | - செவ்வாழை | - ” |
| 04-06-50 | புதிய நாயனார் | - நூ வ.பெ. | - ” |
| 11-06-50 | பக்த பாக்தாத் திருடன் | - ” | - ” |
| 02-07-50 | பிரமநாயகம் | - ” | - ” |
| 04-02-51 | கருப்பண்ணசாமி யோசிக்கிறார் | - அ. சிறுகதைகள் | - ” |
| 13-03-51 | மனித மந்தை | - நூ.வ.பெ. | - ” |
| 13-01-52 | திருமலை கண்ட திவ்ய ஜோதி | - அ. சிறுகதைகள் | - ” |
| 14-01-55 | அறுவடை | - மதுரைக்கு டிக்கட் இல்லை | - ” |
| 14-01-55 | பல்லிளிக்கும் பரம்பிரம்மங்கள் | | - ” |
| 30-01-55 | யார்மீது கோபித்துக் கொள்வது | - ” | - ” |
| 18-09-55 | சமூக சேவகி சாருபாலா | - அ. சிறுகதைகள் | - ” |
| 15-01-56 | கணவான் | - நூ.வ.பெ. | - ” |
| 15-01-56 | மேலதிகாரி | - ” | - ” |
| 15-01-56 | சொர்க்கத்தில் நரகம் | - ” | - ” |
| 12-02-56 | ஒளியூரில் | - அ. சிறுகதைகள் | - ” |
| 14-01-61 | கன்னி விதவையானாள் | - நூ.வ.பெ. | - ” |
| 19-02-62 | வள்ளியின் தேவி | - ” | - ” |
| 14-01-62 | ஏழை | - வண்டிக்காரன் மகள் | - காஞ்சி |
| 26-07-64 | உபகாரி உலகநாதன் | - நூ.வ.பெ | - ” |
| 20-09-64 | வரவு - செலவு | - ” | - ” |
| 14-01-65 | அவர் எழுதிய இரு கடிதங்கள் | - ” | - ” |
| 14-01-65 | உடை போட்டதும் | - பித்தளையல்ல பொன்னே தான் | - ” |
| 14-01-65 | கல்லும் கண்ணாடித் துண்டும் | - ” | - ” |
| 14-01-65 | காலிழந்தான் | - ” | - ” |
| 14-01-65 | சுமார் சுப்பையா | - ” | - ” |
| 14-01-65 | பித்தளையல்ல பொன்னேதான் | - ” | - ” |
| 14-01-65 | வழுக்கி விழுந்தவர்கள் | - ” | - ” |
| 14-01-65 | விழுப்புரம் சந்திப்பு | - ” | - ” |
| 13-06-65 | சொக்கி | - ” | - ” |
| 03-10-65 | எங்கும் அவன் | - ” | - ” |
| 14-01-66 | உடையார் உள்ளம் | - நூ வ.பெ. | - ” |
| 14-01-66 | பொங்கல் | - ” | - ” |

1934 முதல் 1956 வரை தொடர்ந்து எழுதிய அண்ணா பின்னர் ஒரு இடை வெளிக்குப் பின் 1961இல் தான் எழுதினார். 1934-50 ஆம் ஆண்டுகளுக்குள் ஆனந்த விகடன், குடியரசு, திராவிட நாடு ஆகிய ஏடுகளில் 50 சிறுகதைகளும் 1966 வரையுள்ள காலக்கட்டத்தில் 36 சிறுகதைகளும் எழுதியுள்ளார்.

நன்றி : பா. உதயகுமார்,
அண்ணாவின் சிறுகதைகள்.

**அறிஞர் அண்ணா** அவர்கள் அறிவுலக மேதை, அரசியல் விடிவெள்ளி, பகுத்தறிவுப் பகலவன், கலையுலகக் காவலர், திரையுலகில் திருப்பு முனையை உண்டாக்கியவர். சாதி மதப் பேதங்களைச் சாடுவதில் இங்கர்சால். தமிழ் நாட்டு மக்களின் மனமாசுகளை அகற்ற வேண்டும், மறுமலர்ச்சியினைத் தோற்றுவிக்க வேண்டும், மொழிப்பற்று, இனப்பற்று, நாட்டுப்பற்று, விடுதலை வேட்கை தமிழ் மக்களிடையே வளர்ந்து செழிக்க வேண்டும், என்ற எண்ணங்களோடு தன் இலக்கியப் பணியைச் செய்தவர். சொக்க வைக்கும் பக்குவ நடையால் கதை, கட்டுரை, புதினம், நாடகம் எனப் பல துறைகளிலும் முத்திரை பதித்த முத்தமிழ்வேந்தர். பேனா முனையின் வலிமையை நிரூபித்த எழுத்துத் தளபதி.

**முனைவர் சு. சண்முகசுந்தரம்,** *நாலுவகைப்பூ வெடுத்து* என்ற தலைப்பில் சாகித்திய அக்காதெமிக்காக நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்தளித்தவர். கடந்த இருபத்தேழு ஆண்டுகளாக நாட்டுப்புற இயல் மீது ஆர்வமும் அக்கறையும் கொண்டவர். 21க்கு மேற்பட்ட நூல்களை இயற்றியவர். *'தன்னனானே'* நாட்டுப்புற இயலுக்கான காலாண்டு ஆய்வு இதழின் ஆசிரியர். பதிப்புத் துறையில் பன்னெடுங்காலமாகத் தொண்டாற்றுபவர். பெங்களூரில் உள்ள செயின்ட் ஜோசப் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரியும் இவர் சாகித்திய அக்காதெமியின் தமிழ் ஆலோசனைக் குழு உறுப்பினராக உள்ளார்.

*Arignar Anna* (Tamil)
ISBN 81-260-1123-8 Rs. 25/-



பட உதவி : தமிழரசு,
தமிழக அரசு மாத இதழ்.